கூர்ம புராணத்திலுள்ள

# ஈசுவர கீதை



7-2

சம்ஸ்க்ருத

கூர்ம புராணத்திலுள்ள

# ஈசுவர கீதை

என்னும் சிவோபதேசத்தின்

**சிவப்பிரகாசம்**

எனும் தமிழநுவாதம்

**ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்**

(பொழிப்புரையுடன்)







ஸ்ரீ ரமணாச்ரமம்
திருவண்ணாமலை
2003

**Iswara Githai** (from *Kurma Puranam)* - Tamil verse translation [by Sri Tattvaraya Swamigal] with paraphrase by J. Jayaraman, based on Tirubhuvanam Kasikananda Swami's *Rahasyartha Pada* work. Published by The President, Sri Ramanasramam, Tiruvannamalai 606 603

முதல் பதிப்பு : 2003 - 1000 பிரதிகள்

CC No : 2066

**ISBN : 81-88225-73-8**

விலை ரூ. 40/-

பதிப்பாளர்
தலைவர்
ஸ்ரீ ரமணாச்ரமம்
திருவண்ணாமலை 606 603

அச்சிட்டோர்
ஆரல் கிராபிக்ஸ்
சென்னை 600 024

7-2

# பதிப்புரை

ஸ்ரீ வியாஸ பகவான் இயற்றிய பதினெட்டு புராணங்களில் இரண்டாவது கூர்ம புராணம். இது பிராம்மீ, பகவதீ, கௌரீ, வைஷ்ணவீ என நான்கு சம்ஹிதைகளைக் கொண்டது. பிராம்மீ சம்ஹிதை பூர்வார்த்தம் 53, உத்தரார்த்தம் 46 அத்தியாயங்கள் உடையது. உத்தரார்த்தத்தில் உள்ள ஈசுவர கீதை 495 சுலோகங்களுடன் பதினோரு அத்தியாயங்கள் கொண்டது. இது ஸ்ரீ ஈசுவரன் பதரி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ நரநாராயண மூர்த்தி பக்கத்திலிருக்க, ஸனகாதிகளுக்கு திருவாய் மலர்ந்தருளிய சம்பவத்தை நினைவுற்று வியாஸர் ஸூதமுனிக்கும் சௌனகருக்கும் மற்ற முனிகளுக்கும் கூறியதாகும்.

இரும்புதூரில் சமாதி கொண்டிலங்கும் ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் (சுமார் முன்னூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவர்) இக்கீதையினை 338 செய்யுள்களாகத் தமிழில் மொழிபெயர்த்திருக்கின்றனர். இது கோவிலூர் வேதாந்த மடத்தில் 13வது நூலாக பாடம் நடத்தப்படுகிறது. ஈசுவர கீதையைத் தமிழிலியற்றிய ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் பற்றிய குறிப்பினை இம்முன்னுரையை அடுத்துள்ள பக்கத்தில் காணலாம்.

கீதாசாரியனான அரிக்கு அரன் விசுவரூப தரிசனம் கொடுக்கும் இந்த ஈச்வர கீதையில் சாங்கியம் எனப்படும் ஞானமார்க்கத்தையும், நடைமுறை வாழ்க்கையில் அதன் பிரதிபலிப்பான கர்ம யோகத்தையும் ஏக யோகமாகவும் கோர்வையாகவும் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது. (ஈ.கீ.72) பகவான் ரமணரின் **'உபதேச உந்தியார்'** முற்காலத்தில் சிவபெருமான் தாருக வன ரிஷிகளுக்குக் கூறியதன் பொருளாம். ஆகவே உபதேச உந்தியாருக்கும் இவ்வீசுவர கீதைக்கும் உள்ள ஒற்றுமையில் வியப்பேதுமில்லை.

உதாரணமாக இக்கீதையின் 11ஆவது அத்தியாயத்திலுள்ள 15ஆவது பாடலைச் சுருக்கி ஸ்ரீபகவான் உபதேச உந்தியாரில் 'வழுத்தலில் வாக்குச்ச' என்னும் ஆறாவது பாடலாகக் கையாண்டுள்ளது கவனிக்கத்தக்கது. மேலும் பரமசிவன் 15 செய்யுட்களில் (11.22-36) மிக விரிவாக பாவனா யோகம் கூறியது உந்தியாரின் 7, 8 ஆவது செய்யுட்களில் சூத்ரமாக உளது. மேலும் 11.37-43இல் கூறிய பாவனா தீத சத்பாவ பரபக்தி தத்வமும், அத்துவித நிலையும் உந்தியாரின் 9,10இல் சூத்ரமாக உள்ளது.

செய்யுளுக்குச் செய்யுள் விருத்தங்களை மாற்றும் தத்துவராய சுவாமிகள், தன் பிரமகீதையைப் போன்றே ஈசுவரகீதையிலும் ஞானநிலைக்கேற்ப

கவித்திறனும் வெளிப்படுத்துகிறார். இக்கீதையின் பாடல்களுக்கு திருப்பூவணம் வேதாந்த மடாதிபதி ஸ்ரீகாசிகானந்த சுவாமிகள் இயற்றிய ரஹஸ்யார்த்தபத விளக்கவுரை ஒன்றே இதுகாறும் உள்ளது. ஸ்ரீ ரமணாச்ரம நூலகரான ஜெயராமன் ஸ்ரீ குஞ்சு சுவாமிகள் மூலம் கோவிலூர் வேதாந்த பாடங்களைப் பெற்றவர். அவ்வுரையைத் தழுவி எழுதிய இவ்வுரை ஜெயராமனால் வடமொழி மூலமாம் கூர்ம புராணச் செய்யுட்களுடன் ஒப்பிட்டும், அனேக இடங்களில் விரிவாக்கப் பட்டும், மாற்றப்பட்டும் ஸ்ரீ ரமணாச்ரமத்தால் வெளியிடப்படுகிறது. முறையாகவும் இனிமையாகவும் சேர்ந்து பலர் பாராயணம் செய்வதற்கு ஏதுவாக செய்யுட்களனைத்தும் பாராயண நடைக்குறிப்புடனும், எதிர் பக்கங்களில் விளக்கவுரையுடனும் கோர்வையாகத் தரப்பட்டுள்ளன.

ஆன்ம நேயர்கள் பாவனு யோகமாம் இந்நூலின் பாராயணத்தினாலும், இச்சிவோபதேசத்தின் கருத்தினை பகவான் காட்டும் ஞானசார நேர்மார்க்கத்தின் விள்க்காகவும் திடமாகக் கொண்டு மோக்ஷ சாம்ராஜ்ய பதமடைவார்களாக!

**ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் இயற்றிய சொரூபானந்த பரணி பற்றிய நிகழ்ச்சி (21.11.1945 அன்று பகவான் ஸ்ரீ ரமண மகரிஷிகள் விளக்கியது — Day by Day with Bhagavan)**

ஞானியின் குணாதிசயங்களைப் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த ரிஷிகேசானந்த சுவாமி பகவானிடம் கேட்டுக் கொண்டிருந்தார். "பகவத் கீதை போன்ற நூல்களில் அவை விவரிக்கப் பட்டுள்ளன. ஆனால் ஞானியின் நிலை மனதிற்கு அப்பாற்பட்டதால் மனதின் உதவியால் மட்டும் அதை விவரிக்க முடியாது. ஆகையால் எல்லா வர்ணனைகளும் குறையுள்ளதாகவே இருக்கும். அவர்களுடைய நிலையையும் குணங்களையும் மௌன நிலையில் மட்டுமே சரியாக விளக்க முடியும். மௌனத்திலிருந்து பிறந்தது எண்ணம். எண்ணத்திலிருந்து அகம்பாவம். அதிலிருந்து பேச்சு. ஆகையால் சொல் அதிக சக்தி வாய்ந்ததாகயிருந்தால் அதன் பிறப்பிடமான மௌனம் பேச்சைவிட எவ்வளவு சக்தி பொருந்தியதாக இருக்கவேண்டும்!" என்று விளக்கி இது சம்பந்தமாக பின்வரும் கதையை ஸ்ரீ பகவான் அருளினார்.

தத்துவராயர் தன் குரு ஸ்வரூபானந்தர் மீது ஓர் 'பரணி' பாடிவிட்டு, அதை அரங்கேற்றுவதற்காக பண்டிதர்களின் சபை ஒன்றைக் கூட்டினார். ஆயிரம் யானைகளைக் கொல்லக்கூடிய ஒரு மாவீரன் மீது மட்டுமே பரணி பாடலாமே தவிர ஞானியின் (துறவியின்) மேல் பாடுவது சரியல்லவென்று பண்டிதர்கள் ஆக்ஷேபித்தார்கள். 'நாம் அனைவரும் என் குருவிடம் போய் அங்கு இந்த விஷயத்தை நிச்சயிக்கலாம் வாருங்கள்' என்று கூறி தத்துவராயர் அப்பண்டிதர்களை ஸ்வரூபானந்தரிடம் அழைத்துச் சென்றார்.

எல்லோரும் அங்கு அமர்ந்தபின், தத்துவராயர் தம் குருவிடம் நடந்தவற்றையெல்லாம் சொன்னார். அவர் பதிலொன்றும் பேசாது மௌனமாயிருந்தார். அனைவரும் மௌனத்தில் ஆழ்ந்தனர். பகல் போய் இரவு வந்தது. யாரும் அசையவில்லை. படர்ந்த மௌனமும் கலையவில்லை. ஏன் இங்கு வந்தோம் என்ற நினைவும் ஒருவருக்கும் தோன்றவில்லை. மூன்று நாட்களுக்குப் பிறகு குரு தன் மனதைச் சற்றே அசைக்க, அனைவருடைய மௌனமும் கலைந்து எண்ண ஓட்டம் தொடர்ந்தது. "மதம் கொண்டலையும் யானைகளான இத்தனை மனங்களையும் ஒருசேர அடக்குவதின்முன், ஆயிரம் யானைகளை வெல்வது ஒரு பொருட்டேயல்ல" என்று ஏகோபித்து பிரகடனம் செய்து ஸ்வரூபானந்தர் மீது, தத்துவராயர் பரணி பாடியது உசிதமே என்று அனைவரும் ஒப்புக் கொண்டனர்.

# ஸ்ரீ வியாஸ பகவான் இயற்றிய பதினெண் புராணங்கள்

| எண் | புராணம் | அத்தியாயம் | சுலோகம் |
|---|---|---|---|
| 1 | அக்கினி | 383 | 8000 |
| 2 | கூர்ம | | 6000 |
| 3 | கருட | | 6000 |
| 4 | நாரத | | 24000 |
| 5 | பத்ம | 626 | 48452 |
| 6 | பிரம்ம | 215 | 13783 |
| 7 | பிரம்மவைவர்த | 4 காண்டம் | 12000 |
| 8 | பிரம்மாண்ட | 112 அத்தியாயம் | 11000 |
| 9 | பவிஷ்யத் | 4 பர்வம் | 31000 |
| 10 | ஸ்ரீமத்பாகவத | | 18000 |
| 11 | மத்ஸ்ய | 298 அத்தியாயம் | 14062 |
| 12 | மார்க்கண்டேய | | 32000 |
| 13 | லிங்க | | 11000 |
| 14 | வாமன | | 14000 |
| 15 | வராஹ | | 24000 |
| 16 | விஷ்ணு | | 17000 |
| 17 | சிவமஹா | 7 சம்ஹிதை | 724000 |
| 18 | ஸ்காந்தமஹா | 7 காண்டம் | 81100 |

இவையன்றி, ஸ்காந்த, நரசிம்ம, ப்ருஹத் ஸ்வாயம்பு, சிவ, தூர்வாச, நாரதீய, காபில, மானவ, ஔசன, ஆதிபிரம்ம, கல்கி, ஜைமினீய, சாம்ப வாயு, சௌர, பார்க்கவ, ஸ்ரீமத் தேவிபாகவதம் ஆகிய பதினெண் உப புராணங்களும் மற்றும் பல உப புராணங்களும் உள்ளன.

# ஈசுவர கீதை பாடல் முதற் குறிப்பு அகராதி

சம்ஸ்க்ருத

கூர்ம புராணத்திலுள்ள

# ஈசுவர கீதை

என்னும் சிவோபதேசத்தின்

**சிவப்பிரகாசம்**

எனும் தமிழநுவாதம்

**ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்**

(பொழிப்புரையுடன்)

கூர்ம புராண

# ஈசுவர கீதை

## பாயிரம்

(அறுசீர்விருத்தம்) (தாண தாண தனதாண)

1. பூத மைந்தோ டிரவிமதி
புருட ணகிப் புணர்ந்தென்றும்
பேத மில்லா வறிவுருவாய்ப்
பிறங்கு கின்ற பேரோளியோன்
ஆதி மூவர்க் கறிவரியோன்
அரிவை பாகன் ஆமமலன்
பாத பங்க யங்கடலே
வைத்தே பணியும் பரிசினனல். (1)

(வேறு) (தனதன தனன தாண)

2. இலங்கிய மறைக ணன்கு
மியம்புதற் கியலா தென்ன
மலங்கிய சிந்தை யோடு
வாநவர் மூவர் நிற்க
விலங்கியல் அனைய வென்னே
வேதகஞ் செய்தென் னுள்ளே
துலங்கிய சொரூபா நந்தன்
றுணையடி தொழுதல் செய்வாம். (2)

கூர்ம புராண

# ஈசுவர கீதை

## பாயிரம்

### பொழிப்புரை

1. ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி எனப்பட்ட பஞ்ச பூதங்களோடு, சகஸ்ர கிரணங்களையுடைய சூரியனும், கலைகளையுடைய சந்திரனும், சித்தும் ஆகிய அஷ்டமங்கள மூர்த்தமாகப் பொருந்தியும், காலத்திரயத்திலும் பேதிக்கப் படாத ஆத்ம ஸ்வரூபமாகியும், விளங்கும் பூரணப் பிரகாச சொரூபத்தையுடையவன். முதன்மையாகி (பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய) மும்மூர்த்திகளாலும் அறியப் படாதவனும், உமா மகேசுவரியை இடப்பாகத்தில் உள்ளவனும் நிர்மல ஸ்வரூபனும் ஆகிய பரமேசுவரனின் பாததிருவடி தாமரை மலர்களை, சிரசின் மீது வைத்து வணங்குகின்றேன். (1)

2. "விளங்கும் ரிக், யஜுர், சாம, அதர்வணம் ஆகிய வேதங்கள் நான்கும் விவரிக்க முடியாது" என தேவர்களும், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளும் கலக்கத்தினையுடைய மனத்தோடு இருக்கவும், மிருகத்துக்குச் சமமான புத்தியினையுடைய, நாயினும் கடையேனாகிய அடியேனை ஒரு பொருளாகக் கருதி, உபதேசஞ் செய்து, எனது இதயத்தின் கண்ணே விளங்கிய சொரூபானந்த சுவாமிகளது, உபய திருவடியை முக்கரணங்களாலும் வணங்குவோம். (2)

(எழுசீர்விருத்தம்) (தானன தனன தானன தான
தனதன தானன தான)

3. முன்மதி யணிந்த செக்கர்நன் மவுலி
முதல்வனே யென்னமுன் னின்று
நன்மதி முநிவர் கேட்பவன் போடு
நல்கிய நான்மறைப் பொருளைப்
புன்மதிச் சொலவும் பொருளுமொன் றுணரேன்
போதகஞ் செயப்புகு மிதுகண்
டென்மதி யெனக்கே நகைசெயு மான
லேதிலார்க் கென்செயா திதுவே. (3)

4. சிவன்றிரு வுருவு கொண்டுமுன் பருளிச்
செய்ததோர் புராணமா தலினற்
சிவன்றனை யளித்த பரன்றிரு நாமஞ்
சிவப்பிர காசமா மதனற்
சிவந்தசெந் தமிழா லியார்க்குமின் னிலத்தே
சிவந்தனைத் திகழ்த்திடுந் தெளிவாற்
சிவன்றனக் குரிய தாதலா னமஞ்
சிவப்பிர காசமென் றுரைப்பாம். (4)

பாயிரம் முற்றிற்று.

3. "மூன்றும் பிறையினைத் தரித்த செவ்வானம்போன்ற பிரகாசம் பொருந்திய ஜடாபாரத்தினையுடைய பரம சிவனே!" என்று உன் சந்நிதானத்திலிருந்து, மேன்மை பொருந்திய புத்தியுடைய ரிஷிகள் உபதேசிக்கக் கோர, பிரியத்தோடும் (அவர்களுக்கு) உபதேசித்த நான்கு வேதங்களின் அர்த்தத்தினை, இழிவு பொருந்திய புத்தியினால் அடியேன் (அர்த்தத்தினையும், ஏதொன்றினையும் அறியாத யான்) உபதேசம் செய்யப்போவதைப் பார்த்து எனது புத்தி எனக்கே சிரிப்பினை உண்டாக்குமாயின், மற்றவர்களுக்கு இது ஏன் நகைத்தற்கு இடமாகாது! (3)

4. பரமசிவன் திவ்ய மங்கள (திருவின்) உருவங்கொண்டு ஆதிகாலத்தில் (கூர்ம நாராயணர் பக்கத்தில் "கேட்டு உடன் இருக்க" ஈ.கீ. 24) சப்த ரிஷிகளுக்கு உபதேசித்த ஒப்பற்ற புராணமாதலினாலும், சிவனையே எனக்குக் கொடுத்த குருபரனுடைய அழகிய பெயர் சிவப்பிரகாசம் ஆனதினாலும், உத்தமன், மத்திமன், அதமன் ஆகிய அதிகாரிகளுக்கு சிறப்புப் பொருந்திய, செவ்வையான தமிழில் இப்பூமியின்கண் சிவனை விளக்கும் தன்மையினாலேயும், இந்நூல் சிவனுக்கே உரிய தாதலாலும் இந்நூலின் பெயர் **சிவப்பிரகாசம்** என்று நாம் கூறுவோம். (சிவப்பிரகாசர் தத்வராயரின் பரம குருவாம். அதாவது தத்வராயரின் மாமாவும் குருவுமாகிய சொரூபநந்தரின் குருவாம்). (4)

கூர்ம புராண

# ஈசுவர கீதை

## முதல் அத்தியாயம்

(எழுசீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தம்)

(தனதன தான தனதன தான
தனதன தனதன தான)

5. பிரமரண் டங்கள் படைத்தவப் பரிசும்
பெருமையு மநுக்களெல் லைகளும்
வரமுற வுரைத்தாய் வளம்பெற வதிலே
வாய்மையால் வருணநான் கினினுந்
தருமதற் பரராய் ஞான யோகத்தே
சாலவா தரிப்பவர் தம்மாற்
றிறமுறப் பரவுந் தேவதே வர்க்குந்
தேவனுண் டென்று செப் பினையால். (1)

(வடமொழி கூர்மபுராணம் 2.1.1-2)

6. நாதன யரிய நான்மறை தெரிந்து
நன்னெறி யளிக்குநா ரணனும்
ஆதவ முநிபா லறிவெலா மறிந்தா
யாதலா லரும்பரந் திகழ்த்தி
யேதமார் பிறவி யறுப்பதா ஞாந
மேதது வியம்புவா யென்று
சூதமா முநியைச் சௌநகன் முதலாந்
தொல்லைமா முநிவர்கள் சொன்னர். (2)

கூர்ம புராண

# ஈசுவர கீதை

## முதல் அத்தியாயம்

## நூல் வரலாறு

### ஸூதமுனியை நோக்கி சௌனகாதி ரிஷிகளின் வினு

5. (பிரபுவாகிய ஸூதரே!) பிரமாண்டங்களைப் படைத்த அந்தத் தன்மையினையும், அதனது விஸ்த்தாரத்தினையும், அந்தந்த மநுக்களினது வரம்புகளையும் சிரேஷ்டமாக (இதுகாறும்) கூறினீர். வளப்பம் பொருந்திய (வளம் பெற) அதில் பரிசுத்தமான தன்மையினுல் நான்கு வருணத்தவரும் தத்தம் தர்மங்களை அநுஷ்டிக்க, அவர்களில் ஞான யோகத்தினை மிகுதியாக அநுஷ்டிப்பவர்களால் திடமாகப் பொருந்தித் தோத்தரிக்கப்படும் தேவாதி தேவர்களுக்கும் தேவனுகிய வஸ்து ஒன்று இருக்கிறதென்று கூறினீர். (1)

6. தலைவனுகி, அனதிகாரிகளால் அறிதற்கு அரிய நான்கு வேதங்களையும் உணர்ந்து, நல்ல மார்க்கத்தை உபதேசிக்கும், விஷ்ணு அம்சமாகிய மிகுந்த தவத்தினையுடைய வியாஸ பகவானிடத்து, அறியத்தக்கவை அனைத்தினையும் அறிந்து இருக்கின்றீர்; ஆனபடியினுல் அருமையான பிரமத்தினை விளக்குவீர். குற்றம் பொருந்திய ஜன்மத்தினை நிவர்த்திப்ப தாகிய (அறுப்பது ஆகிய) ஞானம் யாதோ அதனை உபதேசிப்பீர்! என, ஸூத மஹா ரிஷியைப் பார்த்து சௌனகன் முதலாகிய பழமையான பெரிய ரிஷிகள் விண்ணப்பம் செய்தார்கள். (2)

(கலிநிலைத்துறை) (தான தானன தனதன தனதன தானா)

7. சூத மாமுநி முநிவர்கள் சொன்னவா கேட்டுப்
போத மாநெறி யளித்தநற் புராணனை நினைவுற்
றேது வானொருப் படவவன் றனக்குணர் வளித்த
நாத னாகிய வியாதனு முறைவிட நடந்தான். (3)

(அறு சீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்) (தானனா தானா தானா
தானனா தனனா தானா)

8. கார்முகில் போலு மேனிக்
கமலமா மலர்போ லுங்கண்
ணோர்மிகு முநியை யெல்லா
முநிவரு மிறைஞ்சச் சூதன்
பார்மிசைத் தெண்டம் பண்ணிப்
பன்முறை வலமாய் வந்து
கூர்மிகு மன்பிற் சென்னி
குவித்தகை யோடு நின்றான். (4)

9. அருந்தவத் தோர்க ளெல்லா
மநாமய முரைத்த வர்க்குப்
பொருந்துமா தநங்கற் பிக்கப்
பூசுரர் முகங்க ளேக்கி
யிருந்தவங் கல்வி கேள்விக்
கில்லையே யிடையூ றென்று
பெருந்தகை யுரைத்தான் சூதன்
பின்னரும் வணங்கிச் சொல்வான். (5)

## ஸூதர் வியாஸரை தியானிக்க அவரங்கு வருதல்

7. ஸூத மஹா ரிஷியும் சௌனகாதி ரிஷிகள் கூறியவற்றைக் கேட்டுத் தனக்கு ஞானமார்க்கத்தை உபதேசித்த நல்ல பழமையான குருமூர்த்தியாகிய வியாஸ பகவானை ஸ்மரித்து (நினைவு கூர்ந்து) மன ஒருமையுடன் சொல்லுதற்குச் சம்மதிக்கும் அந்த நேரத்தில், ஞான மார்க்கங்களை உபதேசஞ்செய்த தலைவனாகிய வியாஸ பகவானும் ஸூத, சௌனகாதி ரிஷிகள் இருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தார். (3)

8. கார்காலத்துச் சூல்கொண்ட மேகம் போன்ற சரீரமும், சிவந்த தாமரை மலர் போன்ற கண்களும் உடைய அழகு மிகுந்த வியாஸ பகவானை சௌனகாதி ரிஷிகளனைவரும் நமஸ்காரஞ் செய்ய, ஸூதமஹா முனிவர் பூமியின் மீது தண்டம் போல் விழுந்து அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தெழுந்து, பலதரம் அவரைப் பிரதக்ஷிணஞ் செய்து மிகுந்த அன்போடு, சிரசின்மீது கூப்பிய கைகளோடும் நின்றார். (4)

9. அருமையான தவத்தினையுடைய சௌனகாதி ரிஷிகள் அனைவரும், வியாஸ பகவானைப் பார்த்து வியாதியின்றிய குசலப் பிரசினமாகிய யோக க்ஷேமங்களை விசாரித்து வியாஸ பகவான் அமர்வதற்கு யோக்கியமான உயர்ந்த ஆசனம் ஒன்றமைக்க, அதிலிருந்து கொண்டு சௌனகாதி ரிஷிகளது முகங்களை, பெருமை பொருந்திய வியாஸ பகவான் பார்த்து, "பெருமை பொருந்திய தவத்திற்கும், கல்விக்கும், சிரவணத்திற்கும் விக்கினம் (இடையூறு) இல்லையே?" என விசாரித்தார். மீண்டும் ஸூத முனிவர் நமஸ்கரித்து விண்ணப்பம் செய்பவரானார். (5)

(எழுசீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்)

(தானன தனன தானன தனன
தனதன தனதன தனன)

10. இத்தபோ தநர்கள் சாந்தியால் அறத்தா
லிறந்தவ ரிறையியல் பறிவான்
பத்தரா னவர்க ளேவலே செய்யும்
பாவகம் பிறந்தன வெவர்க்கு
மத்தன மரிபண் டாமையாய் முநிகட்
கருளிய தேதெனக் களித்த
சுத்தஞா நத்தை யிவர்களுக் கருளாற்
சொல்லெனத் துணையடி தொழுதான். (6)
(2.1.11-13)

(வேறு)

(தான தானன தனன தானதன
தான தானன தனதன)

11. சொன்ன வாசகமு ளங்கொ ளாவிறைது
ணைப்ப தங்களைநி னைந்துதன்
சென்னி யாலுறவ ணங்கி விண்ணவர்க
டேவனும் பரவு தேவனே
முன்னொர் நாண்மிகுச நற்கு மாரன்முதன்
முநிவர் கட்குலகின் மூலமாந்
தன்னை யாரருளி னோதி னனினிது
கேண்மி னென்றுமுநி சாற்றினன். (7)

## அரி ஆமையாக ஸனகாதி முனிவர்களுக்கு உபதேசித்ததை வியாஸரிடம் ஸூதர் வினவல்

10. தவத்தினையே தனமாகக்கொண்ட இந்த சௌனகாதி ரிஷிகள் உபசாந்தியினாலும், தருமத்தினாலும் மூழ்கிக் கிடப்பவர்கள், பரமேசுவரனது நித்தியத்துவத்தை உணரும் பொருட்டு பக்தியுடையவர்கள், யாவர்க்கும் பணிவிடையே செய்யும் தூய தன்மை உண்டாகியிருக்கின்றவர்கள். ஆகையால் கடவுளாகிய மஹாவிஷ்ணு முன்பு ஓர் காலத்தில் கூர்ம அவதாரமாக இருந்து, (இந்திரத்துய்ம்னர், ஸனகர் முதலிய ரிஷிகளுக்கு) உபதேசித்தது எதுவோ, எனக்கும் தேவரீர் உபதேசித்த அந்தப் பிரஹ்ம ஞானத்தினை, சௌனகாதி ரிஷிகளுக்கும் கிருபையினால் உபதேசஞ் செய்வீரென்று உபய திருவடிகளில் விழுந்து ஸூதர் நமஸ்காரஞ் செய்தார். (6)

## வியாஸர் அரனைத் தியானித்து ஸனகாதிகள் தவத்தைக் கூறத்தொடங்கல்

11. ஸூத மஹா முனிவர் விண்ணப்பஞ் செய்த வாக்கியத்தை மனத்துட் கொண்டு (அவ் வியாஸரானவர்) பரமசிவனது உபய திருவடிகளையும் தியானித்து, தனது சிரசினால் அழுந்த நமஸ்கரித்து "தேவேந்திரனும் தோத்திரம் செய்யும் அப்பரமேசுவரனே முன்னொரு காலத்து, மிகுந்த பக்தியினை யுடைய ஸனற்குமாரன், (ஸனந்தனன், ஸனகன், ஸனத்ஸூஜாதன்) முதலிய ரிஷிகளுக்கு ஜகத் காரணமாகிய தன் ஞானத்தை, மிகுந்த கிருபையினால், உபதேசித்ததை, ஏகாக்ர சித்தத்தோடு கேளுங்கள்," என வியாஸ பகவான் கூறினார். (7)

(அறு சீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்)

12. தலைமைசேர் சநற்கு மாரன்
சநந்தநன் சநகன் வெள்ளி
யலைவிலா வுருத்தி ரன்றன்
அங்கிரா வாம தேவன்
கலைதெரி பிருகு யோகி
கபிலனத் திரிக ணுதன்
மலைவறு வசிட்ட னேடு
மரீசியா மதியின் மிக்கோர்.... *(குளகம்)* (8)

(எழுசீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்)

13. பரமன தருளா லன்றியே பரத்தைப்
பரப்புறப் பார்த்ததம் மதியால்
ஒருவரோ டொருவர் பன்னெடுங் கால
முசாவியொன் றுணர்வுறப் பெறுமல்
வரமிகு பதரி வநமடைந் தரிய
மாதவம் வருந்தினர் வருந்த
நரனெடு நாரா யணனெரு முநியாய்
நற்றவர்க் கருள்செய நடந்தான். (9)

14. நாரணன் அருளிற் பணிந்துமா முநிவர்
நான்மறை மொழியினல் வழுத்தக்
காரணந் தன்னை யறிந்துநீர் தபித்த
காரண மென்னெனக் கண்ணன்
ஏரணி மறையின் பொருடெரிந் திடுதற்
கெங்களா லியன்றில திறைவா
ஆரணப் பொருளை யறிகுவாய் நீயே
யாதலால் உன்னையே யடைந்தோம். (10)

12. பிரம ஞானத்தினையடைதற்கு முதன்மையான ஸனற்குமாரரும், ஸனந்தனரும், ஸனகரும், (ஸனத்ஸுஜாதரும்), சுக்கிர பகவானும், சலனமின்றிய ருத்திரரும், அங்கிரஸ முனியும், வாம தேவரும், எல்லாக் கலைகளையும் அறிந்துள்ள பிருகு முனியும், கபிலரிஷியும், அத்திரி முனியும், கணுதரும், மயக்கமின்றிய வசிட்டரும், மரீசியும் ஆகிய புத்தியிற் சிறந்தவர்களுமாகிய மேதாவிகள். . . . *(குளகம்)* (8)

## ஸனகாதிகளுக்கு அரி (வியாஸ) ரிஷி ரூபத்தில் தோன்றுதல்

13. *(குளகம்)* . . . . பரமேசுவரனது கிருபையினு லல்லாமல் பிரமத்தினை விரிவாக விசாரித்தறியும் தம் புத்தியினுல், ஒருவரோடு ஒருவர் பல நீண்ட காலம் விசாரித்து ஆத்ம ஞானத்தினை அடையாமற் போகவே, சிரேஷ்டமிக்க பதரி வனத்திற்குச் சென்று அருமையான பெரிய தவத்தினை வருத்தத்துடன் செய்தார்கள். அவர்கள் தவத்திற்கு இரங்கி நர நாராயணர் ஒரு ரிஷியாக, (வியாஸ பகவானுக) நல்ல தவத்தையுடைய அவர்கட்கு அநுக்கிரகஞ் செய்ய, அவ்விடத்துத் தோன்றினுர். (9)

14. மஹாவிஷ்ணுவினுடைய கிருபையினுல் ஸனத்குமாராதி மகரிஷிகள் அவ்விஷ்ணுவை நமஸ்கரித்து, நான்கு வேதங்களின் வாக்கியங்களால் தோத்திரஞ்செய்ய, மஹா விஷ்ணுவானவர், அவர்கள் வருந்தும் காரணத்தைத் தெரிந்திருந்தும், நீர் தவஞ்செய்த காரணம் யாது என்று வினவ, அழகு பொருந்திய வேதங்களின் கருத்தினை உணர்தற்கு எங்களால் முடியவில்லை, கடவுளே! வேதத்தின் தாத்பரியத்தினை தேவரீரே உணர்ந்திருக்கின்றீர், ஆகையினுல் தேவரீரையே சரணுகப் புகுந்தோம். *(குளகம்)* (10)

15. ஏதுகா ரணமிவ் வுலகினுக் கெல்லாம்
என்றுநின் றளிப்பவ னெவன்ற
னேதுதா னுந்மா வேதுவீ டேவன்
பிறப்பவ னெவன்பிறப் பிப்பா
னேதுமா ராலே கண்டிடப் படுவ
திணையறு பிரமமே தெல்லா
மோதுவா யெங்க ளையநீ யல்லா
லொழிப்பவ ரில்லையென் றுரைத்தார். (11)
(2.1.26-27)

(கலிவிருத்தம்) (தான தானனு தானனு தானனு)

16. அந்த வெல்லையி லம்புயை கேள்வனும்
வந்த தன்றவ வேடத்தை மாறியே
சிந்தை யாலிமை யோர்க்குந்தெ ரிக்கொணு
வெந்தை தன்னெளி யாலேயி லங்கினன். (12)

17. திங்க ளுயிறு போலத்தி கழந்த வெண்
சங்கு மாழியுந் தண்டமுஞ் சார்ங்கமுஞ்
செங்கை நான்குந்தி ருமரு மார்பமும்
பங்க யாலயப் பாவையுங் கூடவே. (13)

18. சுட்ட பொன்னினுந் தூயொளி யாயொளி
விட்டி லங்கினன் விட்டுவி ளங்கொளி
மட்ட மன்றிய மண்டலத் தால்வெளிப்
பட்ட னன்னர னுய்வந்த பான்மையான். (14)

15. "இந்த ஜகத்திற்கு காரணம் யாது, இப்பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும், முக்காலத்தும் இருந்து இரக்ஷிப்பவன் யாவன், ஆத்மாவாவது யாது, மோக்ஷம் யாது, ஜனிப்பவன் யாவன், எவன் ஜனிப்பிப்பவன், யாவும் எவராலே அறியப்படுவது, சமானமின்றிய பிரமம் யாது, நாங்கள் விண்ணப்பித்துக் கொண்ட அகலமான விஷயமனைத்தும் தெளியும்படி உபதேசிப்பீராக, தேவரீரே யல்லது எங்களுக்குள்ள சந்தேகத்தினை நிவிர்த்திப்பவர் வேறு ஒருவரும் இல்லை"யென்று விண்ணப்பித்துக் கொண்டார்கள். (11)

## ரிஷி ரூபம் நீத்து விஷ்ணு லக்ஷ்மியுடன் காட்சியளித்தல்

16. அந்தச் சமயத்தில் தாமரைமலரில் ஜனித்த இலக்ஷ்மியின் கணவனும், தான் "நர நாராயண" (வியாஸ)ராக வந்த தனது ரிஷிக் கோலத்தை நீக்கி தேவர்கட்கும் மனதினுல் உணரமுடியாத (மஹாவிஷ்ணுவாக) தனது ஜோதி ஸ்வரூபத்தினுலே பிரகாசித்துக் கொண்டிருந்தார். (12)

17. சிவப்புப் பொருந்திய நான்கு கைகளிலும் சந்திரனைப் போன்று விளங்கிய வெண்மையான சங்கும், சூரியனைப் போன்று சிவந்த பிரகாசம் பொருந்திய சக்கரமும், தண்டாயுதமும், சார்ங்கமெனும் வில்லும், இலக்ஷ்மியை ஸ்ரீவத்ஸ அடையாளமாக உள்ள மார்பும், தாமரைப் புஷ்பத்தினை இடமாகவுள்ள இலக்ஷ்மி சமேதராக, (13)

18. காய்ச்சிய ஸ்வர்ணத்தினும் மிக்க பிரகாசமாய், ஜோதி ஸ்வரூபமாக பிரகாசித்துக் கொண்டிருந்தார். முன்னே வியாஸரைப் போன்று ஒரு முனியாய் எழுந்தருளி வந்த தன்மையை உடையவர் பின்னே ஜோதி ஸ்வரூபமாக, தாழ்வுயர்வு இன்றிய பரிபூரணமாகத் தோன்றினுர். (14)

(வேறு) (தனதனன தந்தனன தந்தனன தானு)

19. அரியுருவு கண்டகம கிழ்ந்தவள விற்கே
பெரியபரி வோடுபிறை சூடியபி ரான்முன்
சுருதிமுடி வோதுபொருள் சொல்லுத றுணிந்தே
கருதவரி யான்முநிவர் கண்ணில்வெளி நின்றன் (15)

(அறு சீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்)

20. செயசெய தேவர் போற்றும்
தேவமா தேவ போற்றி
யயமற முநிவர் போற்று
மம்பிகா பதியே போற்றி
நயமுறு மன்பா லன்றி
நணுகுதற் கரியாய் போற்றி
செயலற விருந்த யோகிற்
றிகழ்ந்திடுஞ் சிவனே போற்றி (16)

21. கந்தரை கநல்கா னீராற்
கலந்திங்ஙன் கட்டப் பட்ட
வெந்திரம் வல்லாய் போற்றி
யியங்கிட வளிப்பாய் போற்றி
யந்தமும் செய்வாய் போற்றி
யாநந்த வுருவே போற்றி
பந்தனை யறுப்பாய் போற்றி
பரமகா ரணனே போற்றி (17)

## அரன் காட்சியளித்தல்

19. மஹாவிஷ்ணுவினுடைய உருவத்தைப் பார்த்து மனத்தில் சந்தோஷித்திருந்த அப்பொழுதே, மனதால் நினைக்க முடியாதவனும், மூன்றும் பிறையை ஜடாபாரத்திலணிந்தவனுமாகிய பரமசிவனும் மிகுந்த கிருபையோடும், முதன்மையான வேதத்தின் முடிவில் சொல்லியுள்ள வஸ்துவை பற்றிச் சொல்ல நிச்சயித்து ஸனகாதி முனிவர் கண்களுக்குத் தோன்றும்படியாக நின்றார். (15)

20. தேவர்கள் துதிக்கும் பரமசிவனே! உமக்கு ஜெயமுண்டாகுக, ஜெயமுண்டாகுக! மஹாதேவ! உமக்கு நமஸ்காரம். சந்தேகம் நீங்க ரிஷிகள் துதிக்கும் உமாமகேசுவரனே உமக்கு நமஸ்காரம், விரும்பத்தகுந்த பக்தியினால் அல்லாமல், அடைவதற்கு முடியாதவனே உமக்கு நமஸ்காரம். மனோ, வாக்கு, காயம் நிஷ்கிரியமாயிருக்கப்பட்ட யோகநிலையில் விளங்கும் பரமசிவனே! உமக்கு நமஸ்காரம்! (16)

21. ஆகாயம், பூமி, அக்னி, வாயு, ஜலம் ஆகிய பஞ்ச பூதங்களையும் பஞ்சீகரணஞ் செய்து இவ்விடத்துக் கட்டியிருக்கின்ற பிரபஞ்சமாகிய யந்திரத்தைச் செய்ய சாமர்த்தியமுடையவனே உமக்கு நமஸ்காரம், அவ்வெந்திரத்தை இயங்கும்படியாக இரக்ஷிப்பவனே உமக்கு நமஸ்காரம். அதை நாசமும் செய்பவனே உமக்கு நமஸ்காரம். ஆனந்த சொரூபனே உமக்கு நமஸ்காரம், சம்சார பந்தத்தினை அடியோடு நாசஞ் செய்பவனே உமக்கு நமஸ்காரம், எல்லாவற்றிலும் மேலான காரண மாயுள்ளவனே உமக்கு நமஸ்காரம். (17)

(எழுசீர் விருத்தம்) (தான தானதன தான தானதன
தான தானதன தானன)

22. வெல்க பூதபதி வெல்க சீவபதி
வெல்க யோகபதி வெல்கவே
பல்கு பேருருவு கண்கை கான்முடிப
கர்ந்தி டற்கரிய பான்மையாய்
தொல்லை நான்மறையி னுலு முன்னியல்பு
சொல்ல லாகுமள வல்லவால்
வல்ல வாறுசில சொல்லி யாமுனைவ
முத்து கோமெனவ ணங்கினர். (18)

(வேறு) (தனதன தனன தனதன தனன
தனதன தனதன தானன)

23. துதித்தமா முனிவர் தலைகளால் வணங்கித்
தொழுதகை யினர்களாய் நிற்பக்
கொதித்தவான் புலத்துக் கொண்டல்வந் துதவிற்
றெப்பவே கொடியவெங் கூற்றை
யுதைத்ததா ளுடையா னுலகமுண் டுமிழ்ந்த
வொருவனைத் தழுவியிங் கிவர்கள்
பதைத்தகா ரணமென் செய்யவேண் டுவதென்
பகரெனப் பவளவாய் மலர்ந்தான். (19)

24. அந்தமா விறைவ னருள் செய்வா சகத்தைக்
கேட்டவ ரருந்தவ வெரியால்
வெந்தபா வத்தால் விமலபா வத்தான்
மெய்ப்பொருள் விளங்குவான் வேண்டி
யெந்நாத னெனையே யடைந்தன ரிவர்கட்
கிரங்கியான் கேட்டுட னிருப்பப்
பந்தவே ரறுக்கும் பரமஞா நத்தைப்
பகர்ந்தருள் செய்கெனப் பகர்ந்தான் (20)
(2.1.39-40)

22. பூதங்கட்குத் தலைவனே உமக்கு ஜெயமுண்டாகுக, ஜீவர்கட்கு தலைவனே உமக்கு ஜெயமுண்டாகுக, யோகிகட்குத் தலைவனே உமக்கு ஜெயமுண்டாகுக ஜெயமுண்டாகுக! நாநா வாக, விராட் சொரூபத்தில் (பெரிய உருவத்தில்) அநேக கண்களும், அநேக கைகளும், அநேக கால்களும், அநேக சிரசுக்களும் இத்தன்மைத்தென்று கூறுதற்கு முடியாத தன்மையுடை யவனே, அநாதியாயுள்ள நான்கு வேதங்களினுலும் தேவரீருடைய தன்மையைக் கூற முடியாதவனே! ஆகையினுல் நாங்கள் தேவரீரை, எங்கள் புத்திக்கு எட்டிய அளவு சிலவற்றைச் சொல்லி தோத்தரிக்கின்றோம், என்று கூறி நமஸ்கரித்தார்கள். (18)

23. தோத்திரம் செய்த ஸனகாதி மகரிஷிகளும் சிரசின் மீது கூப்பிய கையையுடையவர்களாய் நமஸ்கரித்து நிற்கின்ற அந்த சமயத்தில், வெட்டம் பொருந்திய செவ்வானத்தின் கண் சூல்கொண்ட கார்காலத்து மேகமானது வந்து ஆலிங்கனம் செய்தது போல, கொடுமையான வெவ்விய இயமனை மார்கண்டேயருக்காக உதைத்துத்தள்ளிய பாதத்தினையுடைய பரமசிவன், இப்பிரபஞ்சத்தைத் தன்னுள்ளே அடக்கி வெளிக் காட்டிய ஒப்பற்ற மஹாவிஷ்ணுவைக் கட்டி ஆலிங்கனம் செய்து, இவ்விடத்துக்கு இந்த ஸனகாதி மகரிஷிகள் வந்து தாபத்தையடைந்த காரணம் யாது, யான் செய்யத்தக்கது யாது, கூறுவீராக, என்று பவளம் போன்ற அதரத்தையுடைய பரமசிவன் திருவாய் மலர்ந்தருளினுன். (19)

## அரிவேண்ட அரன் முனிகளுக்கு உபதேசித்தல்:

24. அந்த மஹாவிஷ்ணுவானவர், ஈச்வரனும் பரமசிவன் திருவாய் மலர்ந்தருளிய வாக்கியத்தைக் கேட்டு "எமது பிதாவே! ஸனகாதி ரிஷிகள் அருமையான தவ அக்னியினுல் பாவத்தினை நீத்து நின்மலத் தன்மையினுல் சத்திய வஸ்துவை அறிய விரும்பி என்னைச் சரணுகதியாக அடைந்தார்கள். இந்த ஸனகாதி ரிஷிகளுக்கு கிருபை கூர்ந்து, யான் கூடவே கேட்டு (சிரவணித்து)க் கொண்டு இருக்க, பந்த மூலத்தினை நிவர்த்திப்பிக்கும் மேலான பிரஹ்ம ஞானத்தினை கூறுவீராக" என்று கேட்டுக்கொண்டார். (20)

25. உன்னைநீ யுணர்தி யல்லது வேறு
 ருணருவா ருனதுபே ரருளாற்
றன்னையே தன்னுற் றுனறி யறிவு
 சங்கரா விவர்க்கரு ளென்று
பின்னர்மா முனிவர் தங்களை நோக்கிப்
 பிஞ்ஞகன் பெருகிய வருளால்
என்னைநீர் வினவு மரும்பொருள் வினவி
 யெய்துவீ ரெனவவர்க் கிசைத்தான். (21)

(அறு சீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்)

26. கேசவ னுரைத்த மாற்றங்
 கேட்டவர் பணிந்து பின்னும்
ஈசனை வினவு மெல்லை
 யிருவிசும் பிடையே தெய்வ
வாசநம் வந்த தாங்கே
 யரியொடு மளவி றந்த
தேசினு லகில மெல்லாந்
 திகழவீற் றிருந்தான் றேவன். (22)

(வேறு) (தானு தனனு தனனு தனனு)

27. யாதொன் றிலடங் கவிளைந் தவெலா
மியாதொன் றிடைநின் றதொடுங் குவதப்
பூதங் களினு தனுேர்பொன் னணைமே
லேதங் கெடவே றியிருந் தனனுல் (23)

28. வானே முதலியா வையுமன் னிடமாய்த்
தானே முழுதா கியதத் துவமாங்
கோனே யிவர்கண் டுகொளும் படியா
னுனே யரியோ டுமொரா தநமேல். (24)

25. "பரமசிவனே, உனது சொரூபத்தை நீயே அறிந்திருக்கின்றுயல்லாது வேறே யார் அறிவார்கள். தேவரீருடைய பெரிய கிருடையினுல் தன்னை தன்னுல் உணரும் ஞானக் கண்ணுமான்ம (விசார) ஞானத்தை இந்த ஸனகாதி ரிஷிகளுக்கு அநுக்கிரகஞ் செய்வீரென்று" நாராயணர் விண்ணப்பஞ் செய்து, பின்னர் அம்மஹா முனிவர்களைப் பார்த்து "என்னிடம் நீங்கள் கேட்கும் அரிய வஸ்துவைப் பற்றிய விஷயங்கள் அந்தப் பரமசிவனிடம் அவனது மிகுந்த கிருடையினுல் கேட்டு அடைவீர்களாக" என்று அந்தச் ஸனகாதி ரிஷிகளுக்கு ரிஷிகேசன் கூறினுன். (21)

26. மஹாவிஷ்ணு கூறிய பிரதி வசனத்தை அந்த ஸனகாதி ரிஷிகள் கேட்டு, மீண்டும் பரமேசுவரனை நமஸ்கரித்துப் பிரார்த்திக்கும் சமயத்தில், பெரிய ஆகாயத்தினின்றும் தேவாசனம் அவ்விடத்துக்கு வந்து இறங்கியது. பரமசிவன் அவ்வாசனத்தின் மீது மஹாவிஷ்ணு வோடும் அளவிடக் கூடாத பிரகாசத்தோடு பிரபஞ்சம் அனைத்தும் விளங்கும்படியாக அமர்ந்து இருந்தனன். (22)

27. சகல பூதங்களும் எதனிடத்து உண்டாயினவோ, சகல பூதங்களும் எதனிடத்து நிலைபெற்று இருந்து அவை லயத்தை அடைகின்றனவோ, அந்தப் பூதங்களினது தலைவன் ஒப்பற்ற ஸ்வர்ண ஆசனத்தின் மீது குற்றமற அமர்ந்து இருந்தனன். (23)

28. ஆகாயம் முதலிய எல்லாவற்றையும் பொருந்துதற்கு இடமாய் தானே பூரணமாய் தத்துவங்களாயுள்ள தலைவனே, இந்த ஸனகாதி ரிஷிகள் நேராகப் பார்க்கும்படி மஹா விஷ்ணுவோடும் ஒப்பற்ற ஒரு ஆசனத்தின்மீது பொருந்தினன் ஆனுனே! (24)

29. ஓவா மையுளத் திடையோ குசெய்வார்
பாவா லயமே வுபரம் பொருளைத்
தேவா திபர்தே டுசிவன் றனையே
யாவா வவர்கண் டனரா தநமேல். (25)

(கலி நிலைத்துறை) (தனன தானன தானன
தனதன தனன)

30. அளவி றந்தவன் பாகிய
வருந்தவர்க் கமலன்
முளரி யங்கண் வண் டுழாய்முடி
முகுந்தனை நோக்கி
வளமி குந்த மெய்ஞ் ஞாநநான்
மற்றுமக் குரைப்ப
உளமொ ருங்கியன் போடுகேட்
டுணர்மினென் றுரைத்தான். (26)
(2.1.49-50)

29. மனதின்கண் இடையறுது தியானிப்பவர்கள் பாடல்கள் புனேகின்ற இருதயத்தின்கண் பொருந்தியிருக்கின்ற (பாவனேயையே ஆலயமாகக் கொண்டு வீற்றிருக்கும்) மேலான வஸ்துவை, தேவர்களுக்கெல்லாம் தேவனுல் காணமுடியாத ஈச்வரனேயே ஸனகாதி ரிஷிகள் ஆ! ஆ! (என்ன ஆச்சரியம், ஆச்சரியம்) எனக் கூறிக் கொண்டே ஒரு ஆசனத்தின் மீது தரிசனம் செய்தார்கள். (25)

30. நிர்மல ஸ்வரூபனுகிய பரமசிவன், செந்தாமரைப் புஷ்பம் போன்ற அழகிய கண்களேயும் வளமை பொருந்திய துளப மாலேயைத் தரித்த கிரீடத்தினேயும் உடைய மஹா விஷ்ணுவை முதலில் கண்ணேக்கி, பின்னர் அளவிட முடியாத பக்தியாயுள்ள அரிய தவத்தினேயுடைய ஸனகாதி ரிஷிகளுக்கு, “சிரேஷ்ட மிக்க ஆத்ம ஞானத்தினே யான் உங்களுக்குச் சொல்லுகிறேன், நீங்கள் பக்தியோடும், ஏகாக்கிர சித்தத்தோடும் சிரவணித்து அறியுங்கள்” என்று திருவாய் மலர்ந்தருளினுன். (26)

## இரண்டாவது அத்தியாயம்

# சாங்கிய யோகம்

(அறுசீர் விருத்தம்) (தனதன தனன தான, தானன தான தான)

31. மறையயின் முநிவர் கேட்ப
மாமறை முடிவினுலு
மறிவரு மறிவா நந்த
வருளுரு வமலன் றன்பாற்
பிறிதரு பேத நீத்துப்
பெயர்விலா தொன்று யெங்குஞ்
செறிதருந் தன்னை யீசன்
றெறிதர வியம்ப லுற்றன். (1)

32. அறைவதன் றிந்த ஞாந
மியாவரு மறியா ரானன்
மறைவுறச் செய்வ தொன்றய்
மன்னியே யுள்ள தென்றுந்
திறலுடை யியம மாதி
செய்தசீர் மறையோ ராலு
மறிவரும் பொருளை நீங்க
ளறிமினென் றருளிச் செய்தான். (2)

(கலி விருத்தம்) (தான தானன தானன தானன)

33. இந்த ஞாநத்தை யெய்திய வின்பத்தா
ரந்த மில்பிர மத்துரு வாயினோர்
பந்த மேவிடார் பண்டுமின் றுமென்றே
யெந்தை யீறிலி யீசனி யம்பினன். (3)




# இரண்டாவது அத்தியாயம்

## சாங்கிய யோகம்

31. வேதங்களை அப்பியாசித்துள்ள ஸனகாதி ரிஷிகள் சிரவணிக்க, பெருமை பொருந்திய வேத முடிவாகவுள்ள உபநிஷத்துக்களாலும் அறிதற்கு அருமையான, ஆத்ம ஆனந்தமே சொரூபமாக உடைய பரமசிவனிடத்து வேறுபாட்டினைத் தருகின்ற பேதமின்றி அபேதமாய், நித்தியமாய், ஏகமாய், சர்வ வியாபகமாயுள்ள தன்னை, ஸனகாதி ரிஷிகள் உணரும்படி பரமசிவன் சொல்ல ஆரம்பித்தார், (என்று வியாஸர் தொடருவார்:) (1)

32. "இந்த பிரம ஞானம் பிறருக்குச் சொல்லத்தக்கதன்று. இந்த பிரம ஞானத்தை எல்லோரும் (எளிதில்) அறியார்கள் என்றலும் அதிரகசியமாக வைக்கத்தக்கது, ஏகமாய்ப் பொருந்தியுள்ளது. எப்பொழுதும் திடமாக இயம முதலிய அஷ்டாங்க யோகங்களையும் அப்யாசித்துள்ள சிறப்புடைய தேவர்களாலும் அறிதற்கு அருமையான பிரமத்தை நீங்கள் சிரவணித்துத் தெரிந்து கொள்ளுங்கள்" என திருவாய் மலர்ந்தருளினன். (என வியாஸர் கூறினர். மேலும்) (2)

33. "இந்த பிரம ஞானத்தை அடைந்த ஆனந்தத்தினை உடையவர்கள், நாசம் இல்லாத பிரம சொரூபம் ஆனவர்கள் ஆனதால், முன்னும், இப்பொழுதும் பந்தத்தினை அடையார்கள்" என, நாசமில்லாத ஈசுவரனுகிய எமது தந்தை கூறினன். (என்று வியாஸர் ஸூத, சௌனகாதியர்க்குக் கூறினர்) (3)

(கலிப்பா) (தனதனு தனதானு தனதனு தனதானு)

34. மறைவுறும் பொருள்களினும் மமைவுறும் பொருண்மிகவு
மமைவுறும் படிசெயலே யறவிருந் திடவுளது
செறியுமன் புடைமையொடு திகழ்தரும் தவமுநிக
ளறிவுறும் படியிதனே யறைவனென் றருளுமிறை.(4)

(அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்) (தானனு தானு தானு
தானனு தானு தானு)

35. அறிவென வுரைக்கப் பட்ட
தவனுடை யுருவு தன்னே
ருறைவிலா நிமலன் சாந்த
னுண்ணிய னென்று முள்ளோன்
செறியு மெப்பொருட்கு முள்ளாய்ச்
சிந்மய மாயே சான்றாய்ப்
பிறிதரு மவித்தைக் கெட்டாப்
பெற்றிய னென்ற னீசன். (5)

36. யாதொரு பொருட்கு முள்ளா யிருந்துள வறிவு தன்னே
மேதகு புருடனென்று முயிரென்று மீச னென்றும்
பேதமில் கால மென்று மனமொடவ் வியத்தமென்று
மோதிடு மறைக ளென்றே யுரைத்தன னெறிவி லீசன்.
(6)

(கலிப்பா) (தானதனு தானதனு தனதனனு தானதனு)

37. ஆங்கவன்பா லாவவெலா
மவனிடையே யோவதுவு
மோங்கியமா மாயையினே
யுடையானதி லார்ப்புண்ணுன்
பாங்குறநா நாவுடலம்
பண்ணியிடு மாயிடினு
மீங்கிவைதன் னிடைத்தோயா
திவைநடத்து மியல்புமிலான். (7)

34. ரகசியமாயுள்ள வஸ்துக்களினும் அதிக ரகசியமாயுள்ள வஸ்து, சொல்லும்படியான கிரியை இன்றி இருந்திடத்தக்கது. நெருங்கிய பக்தியோடு விளங்குகின்ற தவ சிரேஷ்டர்கள் உணரும்படி இந்த ரகசியமான வஸ்துவைச் சொல்லுவேன், என ஈசுவரன் உபதேசித்தனன். (4)

35. அறிவு என்று சொல்லப்படுவதே, சாக்ஷாத் அவனுடைய சொரூபம், அத்துவிதன், மலமற்றவன், சாந்தசொரூபி, சூக்ஷூம மாயுள்ளவன், முக்காலத்தும் இருப்பவன், நெருங்கி உள்ள எல்லா வஸ்துக்களிலும் ஆந்தரமாய், சித்ரூபமாய், சாக்ஷியாய் இருப்பவன், நாநாவித கூறுபாடாயுள்ள மாயைக்கு அகப்படாத தன்மை வாய்ந்தவன், என்று கூறினுன் ஈசுவரன். (5)

36. எல்லாப் பதார்த்தங்கட்கும் ஆந்தரமாய் இருக்கப் பட்ட உணர்வாம் ஆத்மாவை மேன்மை பொருந்திய புருஷன் என்றும், மேலான பிராணன் என்றும், ஈசுவரனென்றும், பேதிக்கப்படாத காலம் என்றும், மனம் என்றும், வெளிப்படாத தன்மையையுடைய அவ்வியக்தம் என்றும் வேதங்கள் கூறும் என, நித்தியமாயுள்ள பரமசிவன் ஸனகாதிரிஷிகளுக்கு உபதேசித்தனன். (6)

37. அவனிடத்தே எல்லாம் உண்டாவதும், அவனிடத்தே லயத்தை யடைவதுமாம். பெரிய மகா மாயையுடையவனுயினும் அதில் சம்பந்தப்படாதவன், வளப்பம் பொருந்திய பல சரீரங்களைச் செய்யினும், அவைகளாகவே காட்சியளிக்கினும், இவ்விடத்து "இச்சரீரங்களுடன் சம்பந்தப்படாமல், இவைகளை நடப்பிக்கும் தன்மையன்" (என்று கூறுவதற்கும் இடமுள்ளவன்) அல்லன். (7)

38. பந்தமதி லொருக்காலும்
பற்றுண ணப்பந்தஞ்
சிந்தை செய்துஞ் தான்செய்யான்
செய்வாண யேநிற்கு
முந்தியவான் காற்றநனீர்
மண்ணல்லன் முழுதுமா
யந்தமிலா வாநந்த
வறிவுருவே யவன்வடிவம் (8)

(எழுசீர் சந்த விருத்தம்) (தனன தானதன தனன தானதன
தனன தானதன தானண)

39. உயிரி ஞேடுமன மவ்வி யத்தமுறு
கந்த மாதிபுல னேந்தலா
ணயர்வி ஞகியக மென்று நின்றறியு
மந்த நற்கரண மும்மிலான்
பெயர்வி லாதுசொலும் வாக்கி ஞேடுமுத
லேந்து மாய்விடய மும்மிலா
னுயர்வ தாயவறி வேத னக்குருவ
மென்று ரைக்குமொளி மேனியோன் (9)

(கலிப்பா)

40. அயில்கின்ற வவைமுதலாம் யோகநுகர் பவனல்ல
னுயிரல்ல னுயிர்க்குயிராம் புருடனெனு மவனல்லன்
மயலொன்றி யுளமாயை யதுவல்லன் மற்றெல்லா
மயர்வின்றி யறிகின்ற வறிவுருவென் றேயறிக. (10)

(கலிவிருத்தம்) (தனதண தானண தானண தாண)

41. இருளுட னேரொளி யாவதெவ் வண்ண
மருவவி லாவவை மற்றது போல
விரிவுள தாயச கந்தனி ஞேடு
பொருவலி லாதப ரன்புணர் வெய்தான். (11)

38. பந்தத்தில் ஓர் பொழுதும் பற்று இல்லாதவன், அப்பந்தத்தை சிந்தித்தும் தான் செய்பவனல்லன். செய்பவனைப் போலவிருக்கும் முதன்மையான ஆகாயம், வாயு, அக்னி, ஜலம், பிருதிவியுமாகிய பஞ்ச பூதங்களுமல்லன். எல்லாமாய் முடிவு இல்லாத சிதானந்த சொரூபமே, அவனது சொரூபம். (8)

39. பிராணனோடு, மனமும், அவித்தையும் பொருந்திய, சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய ஞாநேந்திரியங் கட்கு ஏதுவாகிய பஞ்ச விஷயங்களும் தான் அல்லாதவன். அஞ்ஞானத்தினுல் நான் நானென்று இருந்து அறிகின்ற அந்தக்கரணமாகிய நல்ல கர்த்தாவாகிய அகங்காரமும் இல்லாதவன். ஓய்வு இன்றி வசனிக்கின்ற வாக்குடன் பாணி, பாதம், பாயுரு, உபஸ்த்தம் ஆகிய கர்மேந்திரியங்களாய் வசன, தான, கமன, விஸர்ஜன, ஆனந்தமாகிய அற்ப விஷயங்களும் இல்லாதவன். மேன்மை பொருந்திய சேதனமே தனக்கு சொரூபம் என பிரகாச சொரூபனுகிய பரமசிவன் கூறினுன். (9)

40. புசிக்கின்ற முற்கூறிய கருமாதீனமாக வரப்பட்ட ஞானேந்திரிய, கருமேந்திரிய சம்பந்தமான சுகதுக்கரூப போகங்களை அனுபவிப்பவனுகிய கர்த்தா, போக்தா அல்லன். பிராணனும் அல்லன், பிராணனுக்குப் பிராணனுகிய புருஷனு மல்லன், பிரகிருதியும் அவனல்லன், மயக்கத்தினை பொருந்தியுள்ள மாயையும் அல்லன், யாவற்றையும் மறைப்பு இன்றி உணருகின்ற தானே தானும் அறிவே எனது வடிவம் என்று தெளிவீராக. (10)

41. அந்தகாரத்துடன் (இருளுடன்) அழகிய பிரகாசம் எப்படி சம்பந்தப்படமாட்டாதோ, அவை போல சமானம் இன்றிய பரமேசுவரன் விரிவாகப் பொருந்தியுள்ள பிரபஞ்சத்தினோடும் சம்பந்தப்படான். (11)

42. உலகினி லெவ்வண மொண்ணிழ றன்னே
டிலகுவெ யிற்கல வாதது போல
நிலையில தாயச கத்தொடு நில்லா
னுலவலி லாதொளிர் கின்றப ரன்றன். (12)
(வடமொழி கூர்மபுராணம் 2.2.11b-12b)

(அறுசீர் விருத்தம்)

43. அறிவினே டொன்றிநிற்குந் தமத்தொடு விகார மாங்கே
அறிவினிற் கலக்கு மென்று மணைந்துட னிற்கு மாகி
லறிவினுக் கநந்த கோடி கற்பம்வந் திறந்திட்டாலும்
பிறிவதற் காகு முத்தி யில்லையே பேசி லென்றும்.
(13)
(2.2.12b-13b)

44. முத்தியை யடைந்து யர்ந்த
நித்தநன் முநிவ ரென்று
மொத்தபே ரறிவே தன்பா
லுளதவி கார மென்றுஞ்
சுத்தமுற் சுகதுக் கங்க
டொடர்பிலா நந்த ரூப
நித்தமென் றிடவுங் காண்ப
ரென்றனன் நிகரி லீசன். (14)

45. யானே செய்கின் றனனெவையுஞ்
சுகதுக் கங்க ளென்செயலே
யூனே வாடி யிடறடித்த
லுடையோ னனென் றுரைத்திடுவோ
ராண வறிவின் றன்மேலே
யாங்கா ரத்தை யிடுதலினு
னே யெல்லா மென்றிருப்பர்
ஞாந மில்லா ரெனவறிக. (15)

42. இவ்வுலகியலில், எப்படி மேன்மை பொருந்திய சாயையோடு பிரகாசம் பொருந்திய சூரிய கிரணம் சம்பந்தப்பட மாட்டாதோ அதுபோல நாசமில்லாது பிரகாசிக்கின்ற பரமேசுவரனுகிய புருஷன், நாசத்தினை அடைகின்ற பிரபஞ்சத்திேைடும் சம்பந்தப்படான். (12)

43. ஆத்மாவினேடு பொருந்தியிருக்கும் (அறியாமை யெனும்) தமசின் விகாரமானது, ஆத்மாவுடன் சம்பந்திக்கு மாயின், (எப்போதும் கலந்து கூடவேயிருக்குமாயின்,) அனந்த கோடி கல்பங்கள் உண்டாய் நாசமாயினும் ஆத்மாவிற்கு, அவ்வறியாமையினின்றும் வேறுபடுவது எனப்படும் மோக்ஷம் சொல்லில் கூட எக்காலத்தும் இல்லை. (13)

44. சமான ரகிதமாகிய பரமசிவன், மோக்ஷத்தினை அடைந்து உயர்வு பொருந்திய நித்தியமாயுள்ள நல்ல முனிவர்கள், எப்பொழுதும் "சமமாயுள்ள பூரணப் பிரகாசமே தன் சொரூபமாயுளது", ஆகையால் விகாரம் அற்றது எனவும், சுத்தம் எனவும், பூர்வம் பொருந்திய சுகதுக்கங்களை சம்பந்தியாது எனவும், ஆனந்த ரூபம் எனவும், நாசமற்றது எனவும் (அதனை தானுய்) அறிவார்கள் என்று கூறினன். (14)

45. "சகல கருமங்களையும் நான் கர்த்தாவாகயிருந்து இயற்றுகின்றேன்", "விருப்பு வெறுப்புகள் என்னுடையதே", "நான் மாம்ச மயமான சரீரம், சுருங்குதலும், பருத்தலும் உடையவன்", என்று கூறுபவர்கள் சமான ரகிதமான ஆத்மாவின்மீது அகங்காரத்தினை ஏற்றிச் சொல்லுவதால், "நானே எல்லாம்" என்று இருப்பார்கள். (அவர்களை) "ஞானவிசாரம் இல்லாதவர்" என்று நீங்கள் அறிவீர்களாக. (15)

46\. அறிவினே யுடையராகி
யருமறை முடிவு கண்டோர்
செறியுமெய்ப் பொருட்குஞ் சான்ருய்ச்
சிந்மய மாயே தன்னிற்
பிறிதரு மவித்தைக் கெட்டாப்
பெற்றியோ டெங்கு நிற்கு
மறிவென வுரைப்ப ரல்ல
தயலொன்று மின்மை கண்டே. (16)

(கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தாஞ)

47\. இன்பமொடு துன்பமது வின்றியொர்வி காரந்
தன்கணதி லாவறிவு சார்வதிலே பந்தம்
பின்பதுள ஞவதறி யாமைமுத லாலென்
றென்பதுள தாகுமுட லோடியைய வென்றும். (17)

48\. எப்பொழுது நின்றுதய மானவொளி தானே
மெய்ப்படவி ருந்தறிவ தாகியெவி டத்து
மொப்பில்பர ஞகுபுரு டன்னகம ணேந்தே
செப்பரிய வேறுபல செய்வனெனு நின்றே. (18)

(கலிவிருத்தம்) (தானதன தானதன
தானதன தான (தன))

49\. இத்தன்மைய தாகுமவி யத்தமொடு கூடுமறி
வெத்தனேயு முட்புறமி ருந்தறியு மேனுஞ்
சுத்தமது வாயதன துண்மையறி யாதே
யத்தன்மைய தாயவுரு வாயழியு மன்றே. (19)

(அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்)

50\. தானலா தொன்றைத் தாஞ
யறிந்திடு மதஞ லென்று
மானதாஞ் சுகதுக் கங்க
ளியாரையும் வெறுப்புண் டாக்கு
மீனமா மயலோ டொன்றி
யிருந்திடு முடலங் கொண்டே
யானதா யழியு மென்று
மறியாமை முதலாய்க் கொண்டே. (20)

46. விவேகம் உடையவர்களாய் அருமையான வேதங்களின் முடிவை உணர்ந்தவர்கள், "எல்லாப் பதார்த் தங்களுக்கும் சாட்சியாய், சித்ரூபமாகவே, தனக்கு வேறுய் இல்லாத மாயையினுல் அறிய முடியாத தன்மையுடன், சர்வ வியாபகமாய், ஆத்மா இருக்கும்" என்று ஆத்மாவையன்றி அந்நியமாக ஒன்றும் இல்லாமையைக் கண்டு கூறுவர். (16)

47. தன்னிடத்து சுகத்தோடு துக்கமும் இல்லாமல் ஒரு விகாரமும் இல்லாத ஆத்மா பந்தத்தினே அடைவது இல்லே. பின்னா் அந்தச் சுகத்துக்க சம்சாரங்கள் உண்டாவது என்பது என்னவென்றல் அஞ்ஞானம், அந்நியதா ஞானம் முதலியவற்றல் எப்பொழுதும் சரீரத்தோடு சம்பந்தித்ததினுல் உண்டாகின்றது என்று கூறப்படும். (அந்நியதா ஞானம்=தானல்லாததில் புத்தி நிலேத்தல், அஞ்ஞானம்=தன்னேறியாமை) (17)

48. எப்பொழுதும் சதோதயமாய் இருக்கின்ற சித்தே சத்தியமாயிருந்து சகல பூதங்களிடத்தும் உணர்வதாய், சமான ரகிதமான புருடனுவான். (ஆயினும்) "ஜீவன் நான்" என்று அகங்கார அவிவேகத்தினே பொருந்துவதால் "சொல்லுதற்கு அரிய நாநாவித கிருத்தியங்களேயும் செய்(ப)வன் நான்" என்று கூறும். (18)

49. இப்படிப்பட்ட தன்மையினே உடையதாகிய அவித்தையோடு கூடிய ஆத்மா, எவ்வளவும் (தான்) உள்ளும் புறமும் இருந்து அறியுமாயினும் சைதன்யமாகிய தன்னுடைய உண்மையை உணரமாட்டாது, அவித்தையின் சொரூபமாகவே நாசத்தை அடையும். (அவ்வியத்தம் = வெளிப்படாதது = அவித்யா காரண சரீரம்) (19)

50. தனது சொரூபமல்லாத அனுத்மாவாகிய ஒரு பொருளே தனது சொரூபமாக உணரும் அந்தத்தன்மையினுல் (தவறுக நினேக்கப்பட்ட காரணத்தால்) எப்பொழுதும் சுகதுக்கங்கள் உண்டாகின்றன. அந்த நினேவால் அஞ்ஞானத்தினே முதன்மையாகக் கொண்டு, எப்படிப் பட்டவர்களேயும் இன்பதுன்பம் உண்டாகப்பண்ணும் இழிவாகிய மயக்கத்தி (பிராந்தியி)னேடு தோன்றி இருக்கின்ற சரீரத்தைப் பொருந்தி, தானுக நாசத்தை அடையும். (20)

(கலிப்பா) (தனனதன தனனதன தனனதன தான)

51. கருமஞ்செய விடர்வந்துறு மது புண்ணிய பாவந்
தருமென்றுரை செயுமாமறை யவையாகிய வசமே
யுருவந்தரு முழுதும்முள தாகும்மென வொழியா
வருடந்திடு மொளிமேனிய தறிகென்றருள்
செயுமால். (21)

(அறுசீர் விருத்தம்) (தனன தான தனதான
தான தனன தனதான)

52. அழியா தெங்கு முளதாகி
யனைத்துட் புறம்புந் தானிரம்பி
யொழியா வறிவா யொருகுற்ற
முரைத்தற் கரிய தொருபொருளே
கழியா மாயை யதனலே
காணப் பலவாய்த் தோன்றியிடு
மழிவா யினதென் றென்றுமிலா
திருக்கு மதுவே யியல்பென்றன். (22)

(வேறு) (தானன தனன தான)

53. ஆதலான் முநிக ளுண்மை
யொன்றென வுரைப்பர் வேறும்
பேதமவ் வியத்தத் தாலா
மென்றன ரதுவு மென்று
மோதிய மாயை தன்னை
யாசரித் திருந்தே செய்யு
நீதிய தென்று கொண்டே
நிகழ்த்தினன் நிகரி லீசன். (23)

51. கருமங்களை செய்ய, பெரிய தோஷமாகிய துன்பங்கள் உண்டாம். அந்த சுப அசுபகன்மங்கள் புண்ணிய பாவங்களைக் கொடுக்கும் என பெருமை பொருந்திய வேதங்கள் உரைக்கின்றன. அந்த புண்ணிய பாவங்கட்கு ஈடாகவே சரீரமுண்டாம். சேதன ஸ்வரூபமே சர்வ வியாபகமாம் என்றும் நித்தியமாயுள்ள அருளைக் கொடுக்கும் என நீங்கள் அறிவீர்களாக (என்று கூறினர்). (21)

52. நித்தியமாய் எங்கும் இருப்பதாய் சர்வத்தினும் அநுஸ்யூதமாய் இருந்து (அனைத்து உள்ளும் புறம்பும் ஊடுருவி) நீங்காத சைதன்யமாய், ஒரு விததோஷமும் கூற முடியாத ஒப்பற்ற அந்த சைதன்யமே, (ஞானத்தாலன்றி) நிவர்த்தியாகாத மாயையினல் பார்க்க நாநாவாகத் தோன்றும். (பின்னர்) ஞானத்தினல் அம்மாயை நாசத்தை அடைந்தது (எனக்கொள்ளினும்) யாதொரு மாறுதலும் அற்று இருக்கும் தன்மையே சைதன்யத்தின் சுபாவம். (பாம்பு தோற்றினும் அழியினும் ரஜ்ஜுவில் ஒரு மாறுதலுமில்லை. அதுபோல). (22)

53. ஆத்மா நித்தியத் தன்மையுடைய சுபாவம் ஆகையால் ரிஷிகள் "சத்தியம் (உண்மை)ஏகமாகிய பிரமமே" என்று கூறுவார்கள். நாநா கூறுபாடாகிய விலக்ஷணத்தன்மை அவித்தையினல் உண்டாகிறது என்று கூறுவர். அந்த அவித்தையும் எப்போதும், (முறையே) முன்னர்க் கூறிய மாயையையும், (அம்மாயையும் பரமான்மாவாகிய தன்னையே) அனுசரித்திருந்த தன்மையைக் கொண்டு, நாநாகிரியைகளைச் செய்யும் என்று, சமானமின்றிய ஈசுவரன் ஸனகாதி ரிஷிகளுக்குக் கூறினன். (23)

(சந்தக் கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தான)

54. யாதொர்படி தூமமொடு தூளியொளி யாய
நீதியுடை வானைமறை யாதவண மேபோ
லோதுபுல னேடுகர ணம்முறுப வெல்லாம்
போதமுட னென்றியவை நின்றுபுண ராவால். (24)

55. அடுத்தநிற மெத்தனைய தாயபடி கம்வே
றடுத்திடவி லாதுதன தாயவொளி யேபோ
லடுத்தகம தாகியணை யாதவறி வென்றும்
விடுத்திருளை மிக்கொளிய தாய்விரியு மன்றே. (25)

56. நல்லறிவு ளோருலகை ஞாநவடி வென்றே
சொல்லுவர்க ளவ்வறிவி லார்தொழிலில் வேறும்
பல்வகைய தேபொருள தென்றறிதல் கொண்டே
நில்லதில தாமுலகு கண்டிடுவர் நின்றே. (26)

(அறுசீர் விருத்தம்)

57. யாதொரு பொருட்கு முள்ளாய்
குணமின்றி யெங்குந் தானுய்ச்
சேதந னுயே யென்றுந்
திகழ்ந்திடும் பரிசு காணு
ரேதமா மயக்கந் தன்னு
லியாவையு மிருந்த வண்ணம்
பேதமாய்க் காணு நிற்ப
ரென்றனன் பிறவி நாசன். (27)

54. எப்படிப் புகையும், தூசும், பிரகாசம் பொருந்திய தன்மையை உடைய ஆகாசத்தை மறைக்காத தன்மை போல, இந்திரியங்களோடு அந்தக்கரணம் என பொருந்துவன யாவையும், சைதன்யமானது கூடி இருந்தும், சம்பந்தியாது விலகி நிற்கும். (24)

55. தன்னைக் கிட்டிய (அடுத்த) வர்ணங்கள் எப்படியோ அப்படியே ஆகிய ஸ்படிகக்கல், வேறு வர்ணங்களைப் பொருந்திடாமல் இருக்கும்போது தன்னுடைய ஸ்வபாவமாகிய சுத்த ஒளியாக இருந்தது போல, ஆத்மாவை அடுத்து தோன்றிய அகங்காரத்தினைப் பொருந்தாத ஆத்மா, எக்காலத்தும் அஞ்ஞானத்தை ஒழித்து மிகுந்த ஞானப்பிரகாசமாகவே இருந்து கொண்டு இருக்கும். (25)

56. நல்ல ஞானமுடையவர்கள் இந்தப் பிரபஞ்சத்தை சேதன ஸ்வரூபம் (ஞானவடிவு) என்று கூறுவார்கள். (ஆன்ம விசாரம் கூடாத) அஞ்ஞானிகள், கிரியையினால் நாநாவாயுள்ள பல படித்தாயிருக்கின்ற, பொருட்களைக் கொண்டதே இது என்று புறநோக்கறிவு கொண்டு, (அச்சேதனத்தை) நாசமடைகின்ற பிரபஞ்சமாக அறிவார்கள். (26)

57. எவ்வகைப் பதார்த்தங்கட்கும் ஆந்தரமாய், நிர்க்குணமாய், சர்வ வியாபியாய், சைதன்ய ஸ்வரூபமாகவே எப்பொழுதும் விளங்கிக்கொண்டிருக்கின்ற தன்மையை அஞ்ஞானிகள் அறியார்கள். அஞ்ஞானமாகிய மயக்கத்தினால் சகல பதார்த்தங்களையும் அந்தந்த பதார்த்த ரூபமாகவே (பொன்னிடத்தில் ஆபரணத்தை மட்டும் அறிவார்கள் போல்) நாநாவாய் பார்ப்பார்கள், என்று திருவாய் மலர்ந்தருளினான், பிறவியை நாசஞ் செய்பவனான பரமசிவன். (27)

(கலிப்பா) (தனனதன தனனதன தனனதன தனன)

58. படிகந்தனி னிடையேபல
நிறம்வைகவவ் வுருவாய்
வடிவந்தன தெனநின்றிடு
மதுபோலறி வுருவாய்
முடிவொன்றுமில் பொருளெங்கணும்
முழுதும்மொளி யாயே
வடிவந்தொறும் வடிவந்தொறும்
வேறுய்வரும் வகையே. (28)

(அறுசீர் விருத்தம்)

59. ஆதலா லழியா நித்த சுத்தமா யெங்கும் தானாய்
பேதமி லறிவு தன்னைப் பெரியவர் பேசக் கேட்டு
மோதியு நினைந்து நாளு மருச்சனை செய்ய வேண்டு
மேதமில் வீடேய்தற் கிச்சையே யுடையோர் தம்மால்.
(29)
(2.2.29b-30a)

60. யாதொரு பொழுதி யோக
மனத்திடை யெங்கு நின்ற
சோதியா யிலங்கு போதஞ்
சோகத்தா லிடைவி டாத
நீதியா நிகழ்ந்தெப் போது
நின்றிடிற் றனே தன்னி
ஞேதிய பரிசு நின்று
னென்றன னுமையோர் கூறன். (30)

61. பூதங்க ளனைத்துந் தன்பாற் புணர்ந்திடநிற்றல் கண்டே
பூதங்க ளவற்றி னுள்ளும் புறம்புந்தா னிற்றல் கண்டோன்
பேதங்க ளனைத்து மில்லாப் பிரமமே யடைந்து வேறு
மேதங்க ளனைத்தும் விட்டோ னென்றிட லாகு மன்றே.
(31)

58. படிகத்தினிடத்து பல நிறங்கள் பொருந்தப் பொருந்த அந்தந்த வர்ண ரூபமாய் மாறினும், அதன் உண்மைச் சொரூபம் தன்னுடையதாகவே இருக்கும். அதைப்போலவே, ஒரு நாசமுமில்லாத பொருளாகிய ஆத்மசொரூபமே உருவக்காட்சி தோறும் பூரணப் பிரகாசமாய் இருந்துகொண்டே அந்தந்த உருவங்களிடத்தும் நாநாவிதப் பொருளாய்த் தோன்றும். (28)

59. ஆகையினால் குற்றமற்ற மோக்ஷத்தினை அடைதற்கு விருப்பமுடைய முமுக்ஷுக்கள், கெடாத நித்தியமாய் சுத்தமாய் சர்வ வியாபியாய் பேதிக்கப்படாத பிரமத்தை, மகான்களால் சொல்லக் கேட்டும் சிரவணித்தும், ஓதியும், சிந்தித்தும் சதா காலமும் பூசை செய்ய வேண்டும். (29)

## ஜீவன் முக்தி நிலை இலக்கணம் (60–66)

60. எப்போது யோகமுடைய இருதயத்தின்கண் சர்வாந்தர் யாமியாயிருந்து பிரகாச ரூபமாய் விளங்குகின்ற சைதன்யம் கிரமமாக விளங்கி, துன்பத்தினால் இடையீடின்றி எப்போதும் (ஜீவனே கூடஸ்த்தனாகிய) தன்னிடத்து இருக்கின் (தான் உதியாது தன்னின் நின்றிடில்), அப்போது அச் ஜீவனே முன்னர்க்கூறிய சைதன்ய ரூபமாகவே இருக்கின்றனன் என்று உமாதேவியை வாமபாகத்திலுடைய பரமசிவன் கூறினான். (30)

61. சர்வ பூதங்களும் தன்னிடத்து பொருந்தியிருக்கும் தன்மையை உணர்ந்து, சர்வபூதங்களின் உள்ளிலும் வெளியிலும் தான் பொருந்தியிருத்தலைப் பார்த்தவனே, பேதபாவனை யாவும் இன்றி பிரமத்தினையே பொருந்தி அன்னியமாகிய குற்றங் களனைத்தும் நீங்கினவன் என்று சொல்லப்படும். (31)

62\. யாதொரு பொழுதி யோகந்
தன்னையே யியற்றி யின்ப
மேதகு சமாதி தன்னை
யடைந்துவே ருகி நின்ற
பூதம்யா தொன்றுங் காணு
திருந்தவ னெங்கு நின்ற
சோதியாந் தன்னிற் றன்னைச்
சோர்வின்றிக் கண்டே நின்ருன். (32)

(கலிவிருத்தம்) (தானன தானன தானன தானு)

63\. யாவனி யாதொரு போதித யத்தே
மேவிய வாசையெ லாமற விட்டா
னேவறு மின்னமிர் தாயவ னப்போ
தோவலி லாதொளிர் வீடடை வுற்ருன். (33)

(அறு சீர்விருத்தம்)

64\. பூதங்க ளுடைத்தா யுள்ள
வேறெலா மொன்றின் கண்ணே
யேதங்க ளின்றிக் கண்டு
மதினின்று மெல்லா மாய
பேதங்க ளனைத்துங் காணு
தன்றிவன் பிரம மென்று
வேதங்க ளனைத்து மோது
மெய்யறி வடைந்து நின்ருன். (34)

(வேறு)

65\. யாவ னொருவ னறிவுருவாந்
தனையே கண்டு மற்றென்ருய்
மேவ லின்றி வேறுபடக்
காணுன் விளங்க வப்பொழுது
நீவி னிலையா யுலகனைத்து
மாயை தானே யெனக்கண்டு
மேவ லரிதாம் வீடடைந்தா
னென்றே விளம்பி யிடலாகும். (35)

62. எப்பொழுது யோகத்தினை அப்யாசித்து ஆனந்தம் மிகுதியாக உண்டாகின்ற சமாதியினைப் பொருந்தி, என்று (சாதகன்) அந்நியமா யிருக்கின்ற யாதொரு பூதத்தினையும் பேதபாவனையாகப் பாராது இருந்தனனோ, அப்பொழுது சர்வத்ரவியாபகமாயுள்ள, பிரகாசமான சைதன்யத்தை கூடஸ்த்தனிடத்து (தன்னில்), துன்பம் இன்றி இருந்து அறிந்தவனாவான். (32)

63. எவன் எப்பொழுது இருதயத்தின் கண் பொருந்திய சகல ஆசைகளையும் அத்தியந்தம் விட்டானோ, அப்பொழுதே குற்றமற்ற இனிய அமிர்தம் போன்ற அப்புருஷன் இடையறுது பிரகாசம் பொருந்திய மோக்ஷத்தினை அடைந்தவனுகின்றுன். (33)

64. பூதங்களைப் பொருந்தி உள்ள அன்னியமான பொருள்கள் யாவையும் ஏகரூபமான பிரமத்தினிடத்து குற்றமறப் பார்த்தும், (பின்னர்) அப்பிரமத்தினின்றும் யாவுமாகிய அப்பேதத் தோற்றங்கள் எல்லாவற்றினைக்கூடப் பார்க்காத அப்பொழுதே, இந்தப் புருஷன், "பிரமம்" என்று வேதங்கள் யாவும் அறைகின்ற உண்மை ஞானத்தினை அடைந்தவனுகின்றுன். (34)

65. எந்தப் புருஷன் ஆத்ம சொரூபமாகிய தன்னையே பார்த்தும், அன்னியமாகப் பொருந்துதல் இன்றி விளங்கும் படியாகப் பேதமாகப் பார்ப்பதில்லையோ, அப்போது, அவன் பொருந்தாத நிலை உடைய சகல உலகங்களையும் மாயையே என்று பார்த்து, அடைதற்கு அரிதாகிய மோக்ஷத்தினை அடைந்தானென்று சொல்லப்படும். (நீவில் = பொருந்தாத) (35)

(கலிவிருத்தம்) (தனதனத னதனத னதனத நான)

66. பிறப்பினொடி றப்புமிடை துன்பமடை வென்று
தறப்பரிவு செய்வதொர்ம ருந்துளத தாய்வ
திறப்பில்பர மாயபிர மம்மதனை யெய்துஞ்
சிறப்புடைய ரானபொழு தேசிவம தாவார். (36)

67. ஆறுபல கூடியுல கத்தலைக டற்கே
வேறறவுண் மேவியுட னகும்விளை வேபோ
லீறில்பர மாயருவ தாயபிர மத்தோ
டாறுமறி வானவைய டங்கியிடு மன்றே. (37)

(அறுசீர்விருத்தம்)

68. ஆதலா லெல்லா மாகி
நின்றது மறிவே வேறென்
றோதிடக் கண்ட தில்லை
யுள்ளபே ரறிவை நீக்கி
யேதமாம் பந்த மோடிவ்
வுலகமு மிலையே பார்க்கி
லாதியா மறிவை மூடி
யறியாமை மயக்கு மன்றே (38)

69. அவ்வண்ண முரைத்த ஞான
மமலமாய் நுண்ணி தாகி
மெய்வண்ண விகார மின்றி
வேறென்றோ டணைத லின்றி
மைவண்ண விருத்தி யின்றி
வளரொளி யாயே நிற்கு
மிவ்வண்ண மல்லா தெல்லா
மிருளுடை யறிவா மன்றே. (39)

66. ஜனன மரணத்திற்கிடையில் துன்பமே நம் விதி என்று கருதாது, “அத்தியந்தம் இன்பம் செய்வதாக ஒரு மருந்து இருக்கின்றது. அந்த மருந்தாம் ஆன்ம விசாரமே (பிறப்பு) இறப்பு என்பதே இல்லாத மேலான அப்பிரமத்தினை நல்கும்” எனும் சிறப்பான தீர்மானம் உடையவர் அப்பொழுதே சிவ சொரூபமாவார்கள். (36)

67. அநேக நதிகள் சேர்ந்து பூமியின்கண் அலைகளோடு கூடிய சமுத்திரத்திற்கு உள்ளே அபேதமாகப் பொருந்தி சமுத்திர சொரூபமே ஆவது போல, நாசமில்லாத மேலாய் உள்ள சூக்ஷுமமான பிரமத்துடன் சாந்தமான அறிவை யடைந்த ஜீவர்கள் லயத்தினை அடைவர் (அல்லது, அறுபுலனையுமறிந்தவனுக்கு அந்த அவை அடங்கிவிடும்). (37)

68. ஆகையினால் சர்வ பதார்த்தமாய் இருப்பதுவும் ஆத்மாவே (அறிவே), அந்நியமாக சொல்லப் பார்த்ததில்லை. எதார்த்தமாயுள்ள பூரணப் பிரகாசத்தை நீங்கிக் குற்றம் பொருந்திய பந்தமாம் இந்தப் பிரபஞ்சமும் இல்லை. ஆதலினால் முதன்மையான ஆத்மாவை மறைத்து அஞ்ஞானமானது பிரபஞ்சம் வேறாய் நிற்பதுபோல் மயக்கத்தினை உண்டாக்கும். (38)

69. அவ்வாறு கூறிய ஞானமானது நின்மலமாய், சூக்ஷுமமாய், உண்மையினையுடைய நிர்விகாரமாய், மற்றொன்றுடன் சம்பந்தம் இல்லாமல், மயக்கத்தோடு கூடிய விருத்தியில்லாமல் மிகுந்த பிரகாசம் பொருந்தியதாய் இருக்கும். இந்தப் பிரகாரம் ஆத்ம ஞானம் அல்லாதவை யாவும் அஞ்ஞானமாகிய பொய்யறிவேயாம். (39)

70. ஓங்கிய முநிகா ளுங்கட் குரைத்தவே தாந்த சாரஞ்
சாங்கிய ஞாந மென்றே சாற்றிடுந் தன்மை யாகு
மீங்கினி யோக மாவ திறையின்றி விடய மெல்லா
நீங்கியே யென்ற னேடு நிலைபெற நிற்றல் சித்தம். (40)
(2.2.41)

(கலிப்பா) (தானதன தானதன தானதன தான)

71. யோகஞ்செய ஞாநம்முள தாகும் மதனாலே
யாகும்மித யோகம்பினை யதுவேசெய லுறுவோன்
சோகம்முறு பயனுமவை யெய்தாதள வில்லாப்
போகம்முழு தெல்லாம் புணர்கின்ற னிவ னேயாம். (41)
(2.2.42)

72. யாதொன்றினை யோகஞ்செய
பெறுவாரவர் பயனைப்
பேதம்மில ஞாநந்தனை
யறிவோர்பெற விசைவா
ரேதம்மில தாகும்வண
மொன்றுயிடல் கண்டோர்
போதம்முழு பரமாகிய
பொருள்கண்டவ ராவார். (42)

73. யோகஞ்செய நின்றென்றுகை
விட்டேவிட யம்மேன்
மோகஞ்செல விழுமாலவர்
முடிவில்லிட ருறுவார்
சோகம்பொழி விக்கும்பர
மெய்தார்தமை யடையார்
ஆகம்மறை முழுதும்மது
தனையேயறை தருமால். (43)

70. சிரேஷ்டம் பொருந்திய ஸனகாதி ரிஷிகளே! உங்களுக்கு உபதேசித்த வேதத்தின் முடிவான சாரமானது விசாரஜந்நியமாகிய சாங்கியம், ஞானம், என்று சொல்லும் தன்மையை உடையதாம். இவ்விடத்து இனி (நடைமுறையில் கர்ம) யோக மாவது, மனம் (சித்தம்) சகல விஷயங்களையும் அணுவளவு மில்லாமல் நிவர்த்தித்து சேதனனாகிய என்னோடு ஐக்கியப்பட்டு இருப்பதால் ஸித்தமாம். (40)

71. யோகத்தினை அப்பியாசம் செய்ய பிரமஞானம் உண்டாகும். அந்த ஞானத்தினாலே ஹிதமான யோகம் (தானாய்) வளருமாம். பின்னர் அந்த யோகஞானத்தினை அடைந்தவனை துன்பம் பொருந்திய பிரயோசனங்கள் அடையாது (அணுகாது). அளவிடக்கூடாத சகல போகங்களையும் இவனே அடைந்தவனாகின்றான். (41)

72. யாதொரு (கர்ம) யோகத்தைச் செய்து அதன் பயனை அடைவார்களோ, அவரடைகின்ற பிரயோஜனத்தினை (அதாவது அவ்) அபேத ஞானத்தை விவேகிகள், அடைய முற்படுவார்கள். ஒரு குற்றமுமில்லாது இருக்கும்படி இவ்விரண்டும் ஏகமாயிருத்தலைப் பார்த்தவர் ஞானம் பொருந்திய மேலாகிய பிரமத்தை அறிந்தவர் ஆவார்கள். (அறிவோர் = விவேகம் உடையவர்கள்) (42)

73. யோகப்பியாசஞ் செய்திருந்து, அந்த லக்ஷியத்தைக் கைவிட்டு விஷயங்களின் மீது மயக்கமடைந்து விழுகின்ற பிராந்தர்கள் அளவில்லாத துன்பத்தை அடைவார்கள். துக்கத்தை நிவிர்த்திப்பிக்கும் பிரமத்தை அடையார்கள், தானும் ஆத்மாவை உணரார்கள். பொருந்திய வேதங்கள் யாவும் அதையே சொல்லும். (43)

(அறுசீர் விருத்தம்)

74. அறையுமவ் வியத்தஞ் சீவன்
மாயையா லகிலஞ் செய்யு
மிறைவனு மீச னென்று
மியம்பிடு மறைக ளென்னை
முறைமையா லுயிர்கட் கெல்லா
மாகியே முழுதுங் கண்டே
சிறையிறந் தோங்கி யெங்குந்
திகழ்தரு மொளியு நானே. (44)

(எழுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்)

(தானன தான தனதான தான
தனதான தான தனன)

75. எல்லாரு மாசை யுறுகின்ற யாவு
மிரதங்கள் கந்த மெனிலே
நில்லாதி றந்து வருமாறி லாது
நிலையாகி நின்ற வெனிலே
பல்லார்மெய் கைக ளொடுகால்க ளெண்ணில்
பலவாய வற்றி னறிவாய்
நில்லாது நின்று நிகழ்கின்ற தென்று
முளனய்வி ளங்கு மெனிலே (45)
(2.2.47)

(அறுசீர்விருத்தம்) (தானன தானன தானன)

76. கண்ணின்றி யெல்லாங் காண்பன்
காலின்றி யெங்குஞ் செல்வன்
விண்ணின்ற வோசை யெல்லாஞ்
செவியின்றி விரைந்து கேட்பன்
பண்ணின்ற கையதின்றிப்
பற்றுவன் விடுவனென்றே
யண்ணனன் முநிவர் தங்கட்
கருளின னறியும் வண்ணம். (46)
(2.2.48)

74. பரமேசுவரனுகிய என்னே, மேற்கூறிய வெளிப்படாத தன்மையினுல் அவ்வியத்தமென்றும், (ஜாக்கிரம் முதல் மோக்ஷ பரியந்தம் ஜீவித்துக் கொண்டிருக்கின்றமையின்) ஜீவன் என்றும், எனது மாயையினுலேயே பிரபஞ்சத்தைச் சிருட்டிக்கும் தலைவனுகிய ஈசுவரனென்றும் (மும்முதலாக) வேதங்கள் கோஷிக்கும். இக்காரணத்தினுல் ஜீவர்கட்கு யாவுமாகி, முற்றுமுணர்ந்து பந்தத்தினின்றும் விடுபட்டு மேன்மையடைந்து எவ்விடத்திலும் விளங்குகின்ற பூரணப் பிரகாசமும் நானுகின்றேன். (44)

75. அஸ்திரமாய் நாசத்தையடைந்து உண்டாகும்படியில்லாது, ஸ்திரமாயிருக்கின்ற என்னிடத்து, யாவரும் அவா கொள்ளுகின்ற சகல ரசமும், கந்தமும் இருக்கின்றது. எப்பொழுதும் உள்ளவனுய் விளங்குகின்ற என்னிடத்து பலவாகப் பொருந்திய சரீரங்களும் அஸ்தங்களும், பாதங்களும், அளவிடக்கூடாத அநேகமாயும் அவற்றினை உணரும் ஞான கரணங்களாயும், ஸ்திரமாயில்லாமல், என்றும் திரமாயுள்ள என்னிலே இருந்து விளங்கிக் கொண்டிருக்கின்றன. (45)

76. அண்ணல் பரமசிவன், நற்சிரேஷ்டம் பொருந்திய ஸனகாதி ரிஷிகளுக்கு, "நான் நேத்திரம் இல்லாமல் யாவற்றையும் பார்ப்பேன், பாதமில்லாமல் எல்லா இடங்கட்கும் நடப்பேன், காதில்லாமல் ஆகாயத்தினின்று உண்டாகின்ற சத்தமனைத்தும் அதி சீக்கிரமாக சிரவணிப்பேன். அழகோடு கூடிய கைகளில்லாமல் எல்லாவற்றையும் பிடிப்பேன், விட்டு விடுவேன்" என்று தெரியும்படி திருவாய் மலர்ந்தருளினுன். (46)

(வேறு) (தாஞ தாஞ தனதாஞ)

77. எல்லா ரையுநா னறிந்திருப்ப
னென்னே யறிவா ரியாருமிலே
நல்லா ருண்மை யெனக் கணடோர்
நாடி நின்றே யறிந்தபடி
யல்லா தில்லா வளவில்பரம்
புருட னெனவு மறிவின்றி
யெல்லா மாகி யல்லாத
வேக மெனவு மியம்புவரால். (47)

(வேறு) (தானஞ தனஞ தாஞ
தனதஞ தாஞ தாஞ)

78. பார்த்துள முநிவ ரென்னேப்
பரமென்றும் பண்டு மின்று
நீத்துள குணத்தோ னென்று
நின்மல ரூப னென்று
மாத்துமப் பொருளீ தென்று
மலர்தலே யுலகுக் குண்மை
யாய்த்துமிவ் வறிவே யென்ப
ரல்லவ ரறியா ரென்றும். (48)

79. யாதொன்றை யமரர் தம்மா
லறிவரி தாகு மென்ற
ஞேதிய மாயை மூட
மோகத்தா லுணர்வ தின்றி
யேதுவொன் றிசையா வென்ற
னுண்மையா மறிவைக் காஞ
ரீதென முநிகட் கெல்லா
மியம்பின னிமையோர்க் கீசன். (49)

77. பரமசிவனுகிய நான் எல்லா ஜீவர்களேயும் தெரிந்து இருக்கின்றேன். என்னே உணருபவர்கள் ஒருவரும் இல்லே. சத்தியம் என்று பார்த்த நல்லவர்கள், (என்னே) தியானித்து அதில் ஸகஜமாக நின்றுலல்லாமல் தோன்றுத "எல்லேயின்றிய பிரமம்" என்றும், "புருஷ"னென்றும், ஜடமான பிரபஞ்சமாம் பிரகிருதி ஆகியும், அது அல்லாத "ஒன்றே" எனவும் கூறுவார்கள்.

(47)

78. எனது சொரூபத்தை பார்த்து உணர்ந்திருக்கின்ற முனிவர்கள், பிரமம் என்றும், முன்னமும் இப்பொழுதும் நிர்க்குணன் என்றும், நின்மல ஸ்வரூபனென்றும், இது "நான்" எனும் சொல்லின் நிஜப்பொருள் எனவும், விரிந்த தேச காலத்தை உடைய இப்பிரபஞ்சத்திற்கு இந்த சித்தே சத்தியமாயிருப்பது என்றும் கூறுவார்கள். எனது சொரூபத்தை அறியாத அஞ்ஞானிகள் இதை எப்பொழுதும் உணரார்கள். (48)

79. ஒரு காரணமுமின்றித் திகழும் என் சத்தியமாம் எந்த ஒரு ஞானத்தை, என்னுடைய மேற்சொன்ன மாயையின் மறைப்பினுல் தோற்றமளித்த மயக்கத்தால் தம் மெய்யுணர்வு நீங்கியதால், ஞானவிசாரத்தைத் தவிர்த்து வேறு காரணத்தால் தேவரும் உணரமுடியாதோ, அதுவே (அந்த ஞானமே) ஈது என்று தேவர்களுக்குத் தேவனுகிய பரமசிவன் ஸனகாதி ரிஷிகளனேவருக்கும் உபதேசித்தருளினுன். (49)

(வேறு)

80. நானே மாயை தனைக்கடந்து
நிற்பேன் ஞாலந் தனையியற்றே
னேனை யனவு மெனை யொழிய
யாதோர் செயலு மில்லதனு
னே சகத்தை நடத்தியிடு
நாத னென்று நடுவென்று
மானு வறிவோ ரறிந்திடுவ
ரென்றே யருளிச் செய்தனனல். (50)

81. எங்குந் தானு யாவையுமாய்
நின்றே யொன்று யழிவின்றி
யங்க மொன்றின் றறிவேயாய்
நுண்ணி தாய வருள்வடிவைத்
தங்கு ஞாந யோகத்தான்
முன்பா சரித்துப் பினைவந்தெ
னங்க மான பேரொளியோ
டொன்றி யானு யடங்கிடுவார். (51)

(கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தான)

82. ஆங்கவர்க ளென்னுடைய மாயையைவ சித்து
நீங்கியபின் னின்மலம தாயவுரு வாவ
ரீங்கிதுசெ யாதவர்க ளென்றுமெனை யெய்தா
ரோங்கிவரு பந்தமதி னின்றுடனு ழைப்பார். (52)

80. உண்மை ஞானத்தையுடையவர்கள், நான் மாயாதீதனுய் இருப்பேன் என்றும், பிரபஞ்சத்தை சிருஷ்டிபேன் என்றும், ஆனுல் மற்றவையெவையும் எந்தக்காரியமும் என்னே இல்லாமல் நடவாது என்றும், ஆகையினுல் நானே பிரபஞ்சத்தை நடத்துவிக்கும் தலேவன் என்றும், நடுநிலேமையை உடையவனென்றும், உணருவார்கள் என்று உபதேசித்தனன். (50)

81. தான் சர்வத்ர வியாபியாய் (தான் எங்குமாய்), எல்லாப் பதார்த்தங்களுமாய் இருந்து, ஏகமாய், நித்தியமாய், யாதொரு சரீரமும் இல்லாமல் ஆத்மாவாய், சூக்ஷுமமாயுள்ள ஞான வடிவை (அருள்வடிவை), பொருந்திய (சாங்கிய) ஞான யோகத்திஞல் (முனிவர்கள்) முன்னர் அநுஷ்டித்து, பின்னர் எனது சரீரமான பூரணப் பிரகாசத்தோடு பொருந்தி (ஒன்றி) யானுகை ஐக்கியமாவார்கள். (51)

82. ஞான யோகத்தினே அப்பியாசித்தவர்கள், எனது மாயையை வசம் பண்ணி மாயாதீதர்களான பின்பு நின்மல ஸ்வரூபமாவார்கள். இவ்விடத்து ஞானயோகத்தினே அப்யாசித்து மாயையை வசம் பண்ணுதவர்கள் எப்பொழுதும் என்னே அடையார்கள். விருத்தியாகிக் கொண்டிருக்கின்ற பந்தத்திலிருந்து கூடவே கஷ்டப்படுவார்கள். (52)

(அறுசீர்விருத்தம்) (தானன தான தான)

83. சுத்தன யொன்று யென்னைக்
கூடிடுந் தொன்மை யோர்க
ளெத்தனை நூறு கோடி
கற்பங்க டாஞ்சென் றுலு
மெய்த்தக மீளா ரென்றன்
விளங்குமெய் யருளா லென்றே
யித்தகைத் தெனவே வேத
மியம்பிடு மென்று னீசன். (53)
(2.2.55)

(வேறு) (தான தான தனதான
தான தான தானதன)

84. என்ன லுங்கட் கியம்பியவிஞ்
ஞாந ஞாந யோகிகட்கும்
பின்ன முமது புத்திரர்க்கும்
பேணு மியோக சாங்கியர்க்குஞ்
சொன்ன லாகு மல்லாரைத்
தூர வொழிப்ப திதுவென்றே
தன்னே ரனையா னமீசன்
றனே சாற்றி யருளினன். (54)
(2.2.56)

(வேறு)

85. அன்றறி யாமை யாகி
யருள்செய்த புராணந் தன்னின்
முன்றிகழ் பிறவிதீர
முநிகளுக் கீசன் சொன்னன்
குன்றிடா மறையி னீறுங்
கீதையி னிரண்டா மத்தை
யின்றெலா மறியும் வண்ண
மியன்றவா றுரைத்த தன்றே. (55)

83. பரிசுத்தனுய், ஏகமாய் என்னை அடைகின்ற பழமையான பெரியோர்கள் எவ்வளவு நூறுகோடி கற்பங்கள் போயினும் எனது அருளாம் உண்மை ஞானத்திஞல், சத்தியமாக புனர் ஜன்மத்தினை அடையார்கள்; என இந்தப் பிரகாரம் வேதங்கள் கோஷிக்கும் என்று ஈசுவரன் திருவாய் மலர்ந்தருளினன். (53)

84. என்ஞல் உங்களுக்கு உபதேசித்தருளிய விரும்பத் தகுந்த சாங்கிய யோகமாகிய இந்த ஞானத்தை, (சாங்கிய) ஞான மார்க்கத்தை அனுஷ்டிக்கும் யோகிகட்கும், பின்வரப்பட்ட உமது சந்ததியார்க்கும் யோகத்தை அனுஷ்டிக்கும் சாங்கியர்க்கும் உபதேசித்தால் பிரயோஜனப் படும். ஞானயோக மல்லாத அபக்குவர்களை இது தள்ளத் தக்கது என்று தனக்குத் தானே சமானஞகிய பரமசிவனே உபதேசஞ் செய்தனன். (54)

85. முற்காலத்து மகாவிஷ்ணு கூர்ம நாராயணராய் உபதேசித்த கூர்ம புராணத்தில், ஜன்மம் நீங்க சனகாதி ரிஷிகட்கு ஈசுவரன் முன்பே திருவாய் மலர்ந்தருளிய, கெடாத வேதத்தின் அந்தமான ஈசுவர கீதையின் இரண்டாவது அத்தியாயத்தை இப்பொழுது யாவரும் உணரும்படி என்புத்திக்கு எட்டிய அளவு கூறினேன் (என்ருர் வியாஸர்). (55)

# மூன்றுவது அத்தியாயம்

## சம்பிரதாயம்

(கலிவிருத்தம்) (தான தானன தானன தானன)

86\. முன்ன நான்மறை யோதிமு டிந்ததை
யுன்னு மாறறி தாகிய வொன்றினே
ஞன்னு ஞாநமு ஞேயமு மல்லதை
யின்னங் கேண்மினென் றீசனி யம்பினன். (1)

(அறுசீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்)
(தான தான தனதான)

87\. நன்றய் ஞாந கநமாகி
நாநா வெல்லாம் பிறப்பிடமா
யொன்றய் வேறோர் பொருளின்றி
யொளியா யொன்றே டுவமிப்ப
தன்று யகில சராசரங்கட்
காதா ரந்தா னுயென்றும்
பொன்று ததுவா யவிகாரப்
பொருளாய்ப் புலனய்ப் புணர்ப்பரிதாய். (2)

88\. இரண்டா வதிலா தளவைகளா
லெட்டா ததுவா யெங்கெங்குஞ்
சிரங்கால் கைகண் முகமுடைத்தாய்த்
தெரியப் படாதாய்த் திரமாகி
யிரும்பார் நீர்தீ கால்வாந
மெல்லா மிருத்தற் கிடமாகும்
பரந்தா னுணர்ந்தோர் நிர்க்குணமாம்
பரம வியோம மென்பர்களால். (3)

# மூன்றாவது அத்தியாயம்

## சம்பிரதாயம்

86. பூர்வம் நான்கு வேதங்களும் உபதேசித்ததை, மனதினால் சிந்திக்க அருமையாயுள்ளதை, கருதிய ஞானமும் விஷயமும் அல்லாததை இன்னமும் சிரவணிப்பீர்களாக என பரமசிவன் திருவாய் மலர்ந்தருளினன். (1)

87. நல்ல திரண்ட ஞானமாய், நாநாவாகிய யாவும் உண்டாதற்குக் காரணமாய், ஏகமாய், தனக்கு அன்னியமான வஸ்து இன்றிப் பிரகாசமாய், வேறென்றோடு சமமாகச் சொல்லுவதற்கு அல்லாமல் சகல பிரபஞ்சத்திற்கும் தானாதாரமாகி, காலத்திரயத்திலும் நாசமில்லாததாய், நிர்விகாரமாய், பஞ்ச விஷயங்களோடும் சம்பந்தமின்றியதாய் .... *(குளகம்)* (2)

88. துவைதமில்லாது பிரமாணங்களால் அறியக் கூடாததாய் (அவாங் மானச கோசரம்), எவ்விடங்களிலும் சிரசும், எங்கும் கால்களும், எங்கும் கைகளும், எங்கும் கண்களும், எவ்விடங்களிலும் முகம்உடையதாய், உணர முடியாததாய் நிலையாகி, பெரியபூமியும் ஜலம், அக்னி, வாயு, ஆகாயம் யாவும் பொருந்தியிருப்பதற்கு இடமாகிய பிரமத்தினை அறிந்தவர்கள், நிர்க்குணமான மேலாகிய ஆகாயம் என்று கூறுவார்கள். (3)

89. அரிதா யறியா வறிவேயா
மனைத்தா ருயிர்க்கு முயிரந்தப்
பெரிதா யகமும் புறமுமாம்
பிரம நானே பிறர்க்கென்றுந்
தெரியா தென்னு லேபரம்பி
யென்பா லிருந்திச் சகமெல்லாஞ்
சரியாநின்ற தென்ற றிவான்
சகல வேதங் களுமறிவான். (4)
(வடமொழி கூர்மபுராணம் 2.3.6)

90. ஒருதா னைய பரம்பொருளை
யுணரப் படாத வியல்பதனுற்
றெரியா மையெனப் படுமந்தத்
தெரியா மையிலே திகழ்காலம்
பிரதா நந்தான் புமான்பிறந்த
வவற்றுன் முழுதும் பிறத்தலினு
னிருபா திகமாம் பிரமமய
நிகழ்வே யிந்த நிகழ்வெல்லாம். (5)

91. சொன்ன காலம் பகுதிபுமான்
றேற்ற மென்பா லிரண்டிற்கு
முன்ன ராகுங் காலமிவை
மூன்று மென்பா லேமுடியு
மன்ன தன்மை யாலாதி
யந்த மின்றி யந்நியமா
யென்னில் வேற யின்மையினு
லென்ன துருவே யென்பர்களார். (6)
(2.3.8)

89. அடைதற்கு அரியதாய், உணரமுடியாத ஞானமாம் பொருந்திய சகல ஜீவர்கட்கும் பிராணனுய், அவ்வளவு மகத்தாய் உள்ளும் வெளியிலுமாகிய பிரமம் நானுயிருக்கின்றேன். அன்னியர்கட்கு என்றும் அறியமுடியாது, இந்தப் பிரபஞ்சங்கள் யாவும் என்னுலே விரிந்து என்னிடத்திலிருந்து சலித்துக் கொண்டு இருக்கின்றது, என்று உணருமவன் சகல வேதங்களையும் உணர்ந்தவனுகின்றன். (4)

90. (இருட்டால் விளக்கை அறிய முடியாததுபோல்) ஒப்பற்ற, தானுகிய, பிரம வஸ்துவை அறிய முடியாத தன்மையே அஞ்ஞானம் என்று சொல்லப்படும். அந்த அவித்யை (தன்னை அறியாமை)யினின்றும் காலமும், பிரதானமும் (பிரகிருதியும்), புருஷனும் உண்டாயின. காலம், பிரதானம், புருஷன் ஆகிய இந்த மூன்றுலும் சகலமும் உண்டானமையின், இங்கு தோற்றுவன யாவும் நிருபாதிகமாகிய பிரம சொரூபத்தின் தோற்றமேயாம். (5)

91. முற்கூறிய காலமும், பிரகிருதியும் புருஷனும் என்னிடத்திருந்து உண்டான தோற்றமே. காலமானது பிரகிருதி, புருஷன் ஆகிய இரண்டிற்கும் முன்னர் உண்டாயிற்று. என்னிடத்திலேயே இந்த மூன்றும் அந்தத்தை அடையும் (ஒடுங்கிவிடும்). இந்தக் காரணத்திஞல் ஆதியும் அந்தமுமில்லாமல், எனக்கு அந்நியமாக வேறு வஸ்து இல்லாததிஞல் காலம், பிரகிருதி, புருஷன் இவை மூன்றும் என்னுடைய சொரூபமே என்று சொல்லுவார்கள். (6)

(எழுசீர் விருத்தம்) (தனதன தான தானன தான
தானன தனதன தான)

92. மகமுத லாக விசேடமீ றுக
மன்னுமிச் சகத்தெலாந் தந்து
சகலவா ருயிர்க்கும் மோகமே செய்யுஞ்
சத்தியைப் பகுதியா கவுமப்
பகுதியி லாங்கா ரத்துடன் புணர்ப்பாற்
பஞ்சவிஞ் சகனெனப் பட்டுச்
சுகமொடு துக்கந் துய்ப்பவன் புருட
னுகவுந் துணிந்தனர் தொல்லோர். (7)
(2.3.10-12)

(எண்சீர்விருத்தம்) (தானன தான தனதன தான
தனதன தான தானன தான)

93. ஆதிவி காரப் பகுதியின் மான
மறிதலில் விஞ்ஞா தாவும வன்பே
ரேதவ கங்கா ரம்மென மான
மொருவனு மேயங் கிருபெய ருற்றன்
றீதுறு தேகங் கொண்டுந டத்துஞ்
சீவனு மாகச் செப்புத லுற்ற
னுதலி னெந்தப் பிறவியு மின்ப
துன்பமு மாங்கா ரத்தவ னலே. (8)
(2.3.13, 14)

(அறுசீர்விருத்தம்) (தான தனன தானதன)

94. கோல மறிவே சீவனுக்குங்
கொண்டு துய்க்குங் கருவிமநஞ்
சாலு மதன லவிவேக
மதனற் றுன்பஞ் சாருமான்
மாலும் பகுதி யிற்புருடன்
வைத்த பற்றன் மற்றந்தக்
காலஞ் செய்யும் பிறப்பிறப்புக்
கதுவே யென்றுங் காரணமாம். (9)

92. மகத் தத்துவம் முதலாக விசேடம் இறுதியாக நிலைபெற்ற இந்த பிரபஞ்சம் யாவற்றையும் படைத்து, நிறைந்த சர்வ ஜீவர்கட்கும் மயக்கத்தினைச் செய்யும் சக்தியினை பிரகிருதியாகவும், அந்தப் பிரகிருதியில் அகங்கார தத்துவத்தின் சம்பந்தத்தால் இருபத்தைந்து தத்துவத்தினை உடையவன் என்று சொல்லப்பட்டு சுகதுக்கங்களை அனுபவிப்பவன் புருஷன் எனவும், பழமையான பெரியோர்கள் நிச்சயம் செய்தார்கள். (7)

93. மூல விகாரமாம் பிரகிருதியை உணருகின்றபடியால் அப்புருஷ தத்துவத்தை "விஞ்ஞாதா" என்ற நாமத்தாலும் கூறுவர். "நான் கர்த்தா" எனும் படியினால் "அகங்காரம்" எனவும் கூறுவர். எனவே அவ்விடத்து ஒருவனே, விஞ்ஞாதா என்றும், அகங்காரன் என்றும் இரண்டு பெயர் அடைந்தான். குற்றம் பொருந்திய சரீரத்தைப் பெற்று நடத்துகின்றதால், "சீவன்" என்றும் சொல்லலாயினன். ஆகையினால் எப்படிப்பட்ட பிறப்பும், சுகதுக்கங்களும், அகங்கார தத்துவத்திலிருப்பவனால் உண்டாகின்றனவாம். (8)

94. அழகினையுடைய அறிவுருப ஜீவனுக்கு, கொண்டு அனுபவிக்கும் சாதனம் மனமாகும். அம்மனத்தால் அவிவேகம் வந்து பொருந்தும்; அவிவேகத்தால் துன்பம் உண்டாகின்றது. மயக்கத்தை செய்கின்ற பிரகிருதியில் புருஷன் வைத்த சம்பந்தத்தினால் அந்த காலதத்துவம் செய்கின்ற ஜனன மரணத்திற்கு சதாகாலமும் அந்தப் பிரகிருதி புருஷ சம்யோகமே காரணமாம். (9)

(வேறு) (தனதன தான தான)

95. படைப்பதுங் காலந் தானே
படைத்தவை யாவு நேராய்த்
துடைப்பதுங் காலந் தானே
தொல்லையீ றில்லாக் காலத்
திடைப்படத் தோன்றி மாயு
மியாவையு மியாவ ரேனும்
கடப்பவ ரில்லைக் காலங்
காலமே கடந்து நிற்கும். (10)

(வேறு) (தனன தனன தனதனன
தான தனன தானதன)

96. நிகில வுலகு நடக்கும்வகை
நேரே நியமிக் கின்றதது
சகல வுயிர்க்கு முயிருமது
தானே யுள்ளா யிருக்குமது
வகில வறியு முடையதது
வாத லான்மற் றக்காலம்
பகர வுறுவர் சநாதநனும்
பகவான் புருடோத் தமனகை. (11)
(2.3.16-17)

(கலி நிலைத்துறை) (தான தானன தனதன தனதன தான)

97. இந்தி யங்களிற் பரமந மநத்திலாங் கார
மந்த மானவாங் காரத்திற் பரமவ்வி யத்தம்
பந்த மாமதிற் புமான்பர மதிற்பரங் கால
மிந்த யாவைக்கு முயிரிதிங் கிதனின லெல்லாம். (12)

(அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்) (96ப் போல)

98. சகத்தி னுயிராங் காலபரந்
தன்னில் வியோமம் பரமதனை
யிகுத்துநின்ற வியல்பதனல்
வியோமாதீத னயெல்லாந்
தெகித்த வதன லநலென்று
செப்பப் பட்ட யானகும்
பகுப்பொன் றில்லாப் பரப்பிரம
மென்னில் வேறோர் பரமில்லை. (13)

95. காலமே சகலத்தையும் சிருஷ்டி செய்வதும், காலமே சிருஷ்டித்த எல்லாவற்றையும் நேரே சம்மரிப்பதும் ஆகும். அனுதியாக நாசமில்லாத காலத்தின் மத்தியில், உண்டாய் அழிகின்ற சகல பதார்த்தங்களும் கொண்டு எப்படிப்பட்ட பெரியோரேனும் காலத்தை கடந்தவர்களில்லை. காலமே சகலத்துக்கும் அதீதமாய் இருக்கும். (10)

96. அந்தக்காலமே சகலபிரபஞ்சங்களையும் நடக்கும் தன்மையாக சாக்ஷாத் நியமனஞ் செய்கின்றது. அந்தக்காலமே சகல ஜீவர்கட்கும் உயிராக உள்ளதும், அந்தக்காலமே சகல பதார்த்தங்களிலும் ஆந்தரமாய் இருக்கும். அந்தக்காலமே சகல ஞானமும் உடைத்தாயிருக்கின்றது. ஆகையினுல் அந்தக் காலத்தை நித்தியனுயுள்ள ஷட்குணங்களையுடைய புருஷோத்தமனுகக் கூறுவார்கள். (11)

97. இந்திரியங்கட்கும் ஆந்தரமாயுள்ளது (மேலானது) மனம் ஆகும். மனத்திலும் அகங்காரம் ஆந்தரமாயுள்ளது. முடிவான அகங்காரத்திலும் ஆந்தரமாயுள்ளது அவ்வியத்த மாகும். சம்சார முடிச்சாயுள்ள அவ்வியத்தத்தில் புருஷன் மேலாம். அந்தப் புருஷன் ஆகிய எல்லாவற்றிற்கும் மேலாய் உயிராய், உள்ளது காலதத்துவமாகும். இந்தக் கால தத்துவத்தினுலேயே எல்லாம் உண்டாகின்றன. (12)

98. பிரபஞ்சத்திற்கு உயிராயுள்ள காலதத்துவத்திற்கு மேலாம் வியோமம் (சிதாகாயம்). அவ்வியோமத்தையும் கடந்து இருக்கின்ற தன்மையினுல் "வியோமாதீதன்" என்றும், யாவற்றையும் (திரிபுடியை) பஸ்மம் செய்வதனுல் "அக்னி" என்றும் சொல்லப்பட்ட யானே பிறிதற்கு வேறென்றும் இன்மையால் மேலான "பிரம்மமாம்". என்னை விட மேலாம் வஸ்துவும் இல்லை. (13)

99. பரமா மெல்லாப் பொருளுக்கும்
பரமா யுள்ள வெனையறிந்த
வரமா முநிவன் முனென்று
மரியான் பிறவான் மன்னுசரா
சரமா முலக மெனையொழியத்
தானுண் டாகா தொருகாலுந்
திரமாநானே யுலகனைத்துஞ்
செய்கின் றேனுஞ் சிதைப்பேனும். (14)

(வேறு) (தானனா தானா தானா)

100. ஏகமாய் நின்ற வென்ற
னேவலா லெல்லை யில்லா
மோகமாஞ் சகத்தை யென்றன்
முன்னரே நின்று காலம்
பாகமாய்ப் பண்ணு மென்று
பரம்பர னருளி யீதே
யாகும்வே தங்க ளெல்லா
மறைந்ததென் றருளிச் செய்தான். (15)
(2.3.23)

99. ஆந்தரமாயுள்ள சகலவஸ்துக்கட்கும் ஆந்தரமாய் இருக்கின்ற என்னை சாக்ஷாத்கரித்துள்ள சிரேஷ்டம் பொருந்திய முனிவன் எப்பொழுதும் மரணத்தை அடையான், ஜன்மத்தினை அடையான். நிலையாயுள்ள சர அசரமாகிய பிரபஞ்சம் யாவும் என்னையன்றி ஒருபொழுதும் உண்டாகமாட்டாது. நிலையாயுள்ள நானே சகல பிரபஞ்சங்களையும் சிருஷ்டிப்பவனும் அழிப்பவனுமாம்.

(14)

100. அத்வைத ரூபமாயிருக்கின்ற என்னுடைய ஆக்ஞையினால் அளவிடமுடியாத மயக்கத்திற்கு ஏதுவாயுள்ள பிரபஞ்சத்தை என் சந்நிதானத்திலேயே இருந்து காலதத்துவமானது பக்குவமாகச் செய்யும் என, பரத்துக் கெல்லாம் மேலாகிய பரமேசுவரன் இவ்வாறு உபதேசித்து, யாவுமாகிய வேதங்கள் இதையே கூறுகின்றது என திருவாய் மலர்ந்தருளினான்.

(15)

## நான்காவது அத்தியாயம்

# பத்திமை

(கலிப்பா) (தனதன தானன தான தானன)

101. விரிந்ததிங் கேவனல் விண்மு தற்பொருள்
பெருந்தகை யாமவன் பெருமை பேசிடப்
பரந்தெழு சிந்தையை யொருக்கிப் பத்தியா
லருந்தவர் கேண்மினென் றருளிச் செய்குவான். (1)

(நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா)

102. சகத்துளோ ரியாவர்க்குஞ் சான்றாகி யானென்று
மகத்துளே நின்றாலும் பழகியபத் தியினன்றி
மகத்திறைற் றநத்தான் மாதவத்தான் மற்றுமொரு
முகத்தினை லொருவர்க்கு முன்னிற்கு மவனல்லேன்.
(2)

(எழுசீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்)

103. ஈங்கென துள்ளா யிருக்கவெப் பொருளு
மெதுக்குமுள் ளாகியா னிருப்பன்
றுங்குவன் முழுதுந் தருகுவ னெல்லாஞ்
சகலமு மழிவதென் றனனல்
வோங்கிய முனிவர் பிதிரர்மற் றும்ப
ரொளிமிகும் பிரமரிந் திரர்வே
றுங்கொளி மிகுத்தோ ரியாவரே யாக
வவரு மென்னுண்மையை யறியார். (3)

# நான்காவது அத்தியாயம்

## பத்திமை

101. இவ்விடத்து எந்தப் பரமேசுவரனுல் ஆகாயம் முதலிய சகல வஸ்துக்களும் உண்டாயினவோ, மேன்மை பொருந்திய அந்த பரமேசுவரனது மகிமையை சொல்ல, விரிவாகச் செல்லுகின்ற மனதை பக்தியினுல் வசம்பண்ணி அருமையான தவத்தினே உடைய ஸனகாதி ரிஷிகளே! சிரவணிப்பீர்கள் என்று பரமேசுவரன் சொல்ல ஆரம்பித்தனன்.

102. நான் பிரபஞ்சத்திலுள்ள அனைவருக்கும் சாக்ஷியாய் எப்பொழுதும் மனதினிடத்து இருப்பினும் நீண்ட காலமாக வழிபட்ட பக்தியினுலல்லாமல், யாகத்தாலும், தானத்தினுலும், கிருச்சிர சாந்திராயணுதி தவங்களினுலும், வேறு ஒரு மார்க்கங்களினுலும் எப்படிப்பட்டவர்கட்கும் சாக்ஷாத்கரிப்பவன் அல்லன். (2)

103. இவ்விடத்து எல்லா வஸ்துக்களும் என்னிடத்து இருக்கவும், நான் எல்லாவற்றிற்கும் ஆந்தரமாயிருப்பேன், எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பேன். யாவற்றையும் உண்டாக்குவேன், பரமேசுவரனுகிய என்னுல் சகலமும் நாசத்தை அடைவது. சிரேஷ்டம் பொருந்திய முனிவர்களும், பித்ருக்களும், தேவர்களும், பிரகாசம் மிகுந்த பிரம்மாக்களும், இந்திரர்களும், வேறு பிரகாசம் பொருந்திய எவராயினும் அவர்களும் எனது எதார்த்த சொரூபத்தை உணரார்கள். (3)

104. சந்ததம் வேத மியாவையும் பரமாச்
சாற்றவும் படுவதிங் கெனேயே
யந்தண ரெல்லாம் வேள்வியி னலு
மங்கியிற் போற்றுவ தெனேயே
யெந்தலோ கத்தும் பிதாமகன் முதலா
மியாவரு மிறைஞ்சுவ தெனேயே
சிந்தையை யொருக்கி யோகிக ளுளத்தே
தியாநமுற் றிருப்பது மெனேயே. (4)
(வடமொழி கூர்மபுராணம் 2.4.6-7)

(அறுசீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்)

105. ஏக ஞகி நிற்கின்ற
யானே யெல்லா விமையவர்க்குந்
தேகம் பண்ணி யவற்றுள்ளே
திதனுய் நிற்ற லாய்ச்செய்யு
மியாக மெல்லா மெனேக்குறித்தே
யியற்று கின்ற ரவற்றிலவிர்ப்
பாகங் கொள்வே னவற்றின்
பயனுங் கொடுக்கப் படுவேனன். (5)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

106. பத்தியின லியாவர்சிலர் பரவியெனேப் பணிகின்றார்
சத்தியமே யவர்களுக்குச் சந்நிதிபண் ணுறிற்ப
னித்தமுன்ன நால்வேத நிட்டர்களா யறநெறிசே
ருத்தமரா மவரெனினு மொழிவறவே யுணர்கில்லார். (6)

(எழுசீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்)

107. மறையவ ரரசர் மாதவஞ் சிறந்த
வணிகர்தா மநத்தினல் வணங்கிற்
குறைவறு பரமா நந்தமாம் பதத்தைக்
கொடுப்பனன் குலமிலா வெந்தக்
கறையுறுங் குலத்தோ ராயினு மதனேக்
காலபா கத்திலே பெறுவர்
இறையென வெனேயே பத்தியான் மலரிட்
டிடைவிடா திறைஞ்சுவ ராகில். (7)
(2.4.10-11)

104. இவ்விடத்து பரமேசுவரனுகிய என்னையே சதாகாலமும் வேதங்களெல்லாம் உயர்வாகச் சொல்லப்படுவதும் ஆகும். என்னையே பிராமணர்களெல்லோரும் யாகத்திலுைம், அக்னியில் மந்திரங்களை வணங்குவதுமாம். எல்லா உலகங்களிலும் பிரமா முதலிய எல்லோரும் என்னையே நமஸ்கரிப்பதுமாம். யோகிகள் சித்தத்தை வசம் பண்ணி மனதின்கண் என்னையே தியானித்துக் கொண்டு இருப்பதுவுமாகும். (4)

105. அத்வைத ரூபனுன நானே எல்லா தேவர்களுக்கும் சரீரம் உண்டாக்கி அந்தச் சரீரத்தினுள்ளே ஸ்திதனுக நிற்கும்படி செய்கின்றவனும் நானே. என்னை நினைந்தே சகல யாகங்களையும் செய்கின்றுர்கள். அந்த யாகங்களில் ஆவிர்ப்பாகம் கொள்ளுபவனும் நானே. அந்த யாகங்களின் பலன்களையும் கொடுப்பவனும் நானே ஆகின்றேன். (5)

106. பரமேசுவரனுகிய என்னை பக்தியோடும் எவர்களேனும் வாக்கால் தோத்திரம் செய்து, காயத்தால் வணங்குகின்றுர்களோ, உண்மையாகவே அந்த பக்தர்களுக்கு சதாகாலமும் விளங்கிக் கொண்டு இருப்பேன். நித்தியமாயும், அநாதியாயுமுள்ள நான்கு வேதங்களையும் தியானித்துக் கொண்டு இருப்பவர்களாய், தர்ம மார்க்கங்களை பொருந்தி யுள்ள உத்தமர்களாயினும் அவர்கள் என்னை இடையீடின்றி அறியார் (ஏகதேசமறிவார்கள்). (6)

107. பிராமணர்களும், க்ஷத்திரியர்களும், மகாதவத்திற் சிறப்புப் பொருந்திய வைசியர்களும் மனத்தால் நமஸ்காரம் செய்யின் பூரணமான பிரம்மானந்தமாகிய பதத்தினை பரமேசுவரனுகிய நான் அவர்களுக்கு அனுக்கிரகஞ் செய்வேன். நல்லகுலமில்லாத எப்படிப்பட்ட தாழ்ந்த குலத்தவராயிருப்பினும் என்னையே பரமேசுவரன் என்று இடையறுது பக்தியோடும் புஷ்பங்களைக்கொண்டு அர்ச்சித்து நமஸ்காராதி சேவைகளைச் செய்வாராகில் அந்த பிரமானந்த பதத்தை அவர்களும் பரிபக்குவ காலத்து அடைவார்கள்.

(7)

(கலிவிருத்தம்) (தனதனன தானதன தானதன தானு)

108. பழுதிலவ ரென்னுடைய பத்தரொரு காலு
மழிவிலர்க ளென்றடியி லேயறைத லுற்றேன்
றெழுதவரெ னன்பனையே னைத்தொழுத லுற்றோ
ரொழியவிகழ் வாருமெனை யேயிகழ்த லுற்றார். (8)

(கலிப்பா)

109. கலையாள ரியாவரினுங் காயாதன் மலராத
விலையாத னீராத லியன்றதுகொண் டென்பாலே
நிலையாய பத்தியினு னித்தமெனை வழிபடுவான்
றலையாய வன்பனெனக் கியாவரினுந் தானினியான்.
(9)

110. படைத்தவனைப் படைத்தவர்க்குப்
பண்டையே மறையனைத்துங்
கொடுத்தவனு னுதலிலெக்
குரவர்க்குங் குருபரனுன்
றுடைப்பவனு னசுரர்களைத்
தொல்லறத்தி னிற்றேரை
யிடர்ப்படுமா றெழித்தவர்கட்
கின்பளித் திடுபவனுன். (10)
(2.4.16)

(எழுசீர் அடி ஆசிரியச் சந்த விருத்தம்)
(தான தானதன தான தானதன, தான தானதன தானனு)

111. ஓதுமி யோகியர்க டங்க ளுற்பவமொ
ழிப்ப னுனுருபி றப்பினுக்
கேதுநா னெருபி றப்பி றப்புமில
னுவ னுனிவகி லத்தினுக்
காதிநா னதுது டைப்ப னுனதுபு
ரப்ப னுன்முழுத ளிப்பனு
னீதிதா னினைய லற்ற மாயை செய்து
நித்த னுய்மறைய நிற்பனுன். (11)
(2.4.17)

108. பரிசுத்தமானவர்களும் எனது பக்தர்களும் ஓர்பொழுதும் நாசமடையார்கள் என இரண்டாவது அத்தியாயத்தில் பிரதமத்தில் 3வது கவியிலேயே கூறியுள்ளேன். என்னுடைய பக்தனை வணங்கியவர்கள், என்னை வணங்கியவராகின்றார்கள். என் அன்பனை நிந்தித்தவர் என்னையே நிந்தித்தவராகின்றார், அதனால் நாசத்தை அடைவார்கள். (8)

109. எப்படிப்பட்ட வித்துவான்களாயிருப்பினும், கனி, காய்களைக்கொண்டாயினும், புஷ்பங்களைக் கொண்டாயினும், இலைபத்திரங்களைக் கொண்டாயினும், ஜலத்தினைக் கொண்டாயினும் தன் சக்திக்குத் தகுந்தவற்றைக் கொண்டு பரமேசுவரனாகிய என்னிடத்து ஸ்திரமான அன்பினால் சதாகாலமும் என்னை பூசிப்பவன் எனக்கு முதன்மையான பக்தன். எல்லோரினும் இவனே விரும்பத்தகுந்தவன். (9)

110. முதலிலேயே இப்பிரபஞ்சத்தை சிருஷ்டிக்கின்ற பிரமாவை சிருஷ்டித்து அந்த பிரமாவுக்கு வேதங்கள் எல்லா வற்றையும் பரமேசுவரனாகிய நானே உபதேசித்தவன். ஆகையினால் எல்லா ஆசிரியர்கட்கும் நானே தலைமை ஆசிரியன் ஆவேன். தேவர்கட்குத் துன்பத்தைச் செய்யும் அசுரர்களை நானே சம்ஹரிப்பவன். பழமையான தர்மங்களை வழுவாது அனுஷ்டிப்பவர்கட்கு வரப்பட்ட துன்பமார்க் கங்களை நிவர்த்தித்து அவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவன் நானாகின்றேன். (10)

111. சொல்லாநின்ற யோகிகளுடைய ஜன்மத்தினை நானே நிவர்த்தி செய்பவன். கருமாதீனமாகப் பொருந்துகின்ற ஜன்மத்திற்கு நானே காரணமாயுள்ளவன். நான் ஒரு ஜனனமும், மரணமும் இல்லாது இருக்கின்றவன், நானே இந்தப் பிரபஞ்சத்திற்கு முதன்மையாயுள்ளவன். அந்தப் பிரபஞ்சத்தை ரக்ஷிப்பவனும், சம்மரிப்பவனும் நானாகின்றேன். எல்லாவற்றையும் ரக்ஷிப்பவனும் நானாகின்றேன். கிரமமாக உணரமுடியாத மாயையினைச் செய்து, நித்தியனாய் பரமேசுவரனாகிய நான் அதில் மறைந்து இருப்பேன். (11)

112. வஞ்ச மாயையொரு சத்தி யென்றனது
மற்றி யாரையும மயக்குமாம்
விஞ்சை யாகுமொரு சக்தி மற்றெனது
விமல யோகுபுணர் வார்கடந்
நெஞ்சின் மேவியத னலம் மாயையினை
நீக்கி யேநிகழு கிற்பனை
னஞ்சி டாதெனைய நந்த சத்திகளு
மியானி னைத்தவண மாகுமார். (12)
(2.4.18-19)

(அறுசீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்)

113. ஆலம் பநமாஞ் சத்திகளுக்
காலம் பநனு னடங்கவுமென்
பாலங் கிருக்கு முத்தியுமென்
பாலே யெவர்க்கு முள்ளாமென்
மாலொன் றியமா யையயடைந்து
மலரோன் வடிவு கொண்டொன்று
ஞாலந் தன்னை யுண்டாகப்
பண்ணு நாநா விதமாக. (13)
(2.4.20-21)

(கலிவிருத்தம்) (தான தானன தானன தானன)

114. ஓதி யாவையுந் தானுயு யிர்க்கெலா
நாதனாகிய நாரா யண னெனுந்
தீதி லாதவென் சத்திதி தித்தலா
லீதெ லாநிலை பெற்றேயி லங்குமால். (14)

(கலிப்பா)

115. மூன்ற வதுருத் திரமூர்த் தியதாய்த்
தோன்ற வகைநின் றுதுடைப் பதனைச்
சான்றோர் பலர்தா மதகா லமென
வூன்ற வெனதா கவுரைப் பர்களால். (15)

112. என்னுடைய வஞ்சகத் தன்மையோடு கூடிய மாயையாகிய ஓர் சக்தியானது எப்படிப்பட்டவர்களையும் மோகமடையச் செய்யும். என்னுடைய வித்தையாகிய ஓர் சக்தியானது, நிர்மலமான யோகத்தை பொருந்தியவர்கள் மனதில் பொருந்தி யிருத்தலினால், அம்மாயையினை ஒழித்து நான் விளங்கிக் கொண்டு இருப்பேன். நான் எண்ணுகின்றபடி பயப்படாது தயக்கமின்றி என்னிடத்து அநேக சக்திகளு முண்டாகும். (12)

113. பற்றுக்கோடாய் பொருந்திய சக்திகளுக்கு நான் ஆந்தரமாயிருப்பவன். என்னிடத்திலேயே யாவும் இருக்கும், என்னிடத்திலேயே மோக்ஷமுமாகும். எல்லார்க்கும் ஆந்தரமாயிருக்கும் என்னிடத்துள்ள சக்தியானதொன்று மயக்கம் பொருந்திய மாயையைப் பொருந்தி பிரமனாகி உருவெடுத்து, இப்பிரபஞ்சத்தை அநேக விதமாக சிருஷ்டி செய்யும். (13)

114. வேதம் விளம்பாநின்ற, எல்லாம் தனது சொரூபமாகவும் சகல ஜீவர்கட்கும் தலைவனாகிய விஷ்ணு என்னும் குற்றமற்ற என்னுடைய மற்றோர் சக்தியானது இரக்ஷித்தலினால் இந்தப் பிரபஞ்சங்கள் யாவும் நிலைத்து இருந்து விளங்கும். (14)

115. மூன்றாவதாக உள்ள தமோகுண சக்தியானது உருத்திர மூர்த்தியாக மறைந்திருந்து சகலவற்றையும் சம்ஹரிப்பதனால் அநேக பெரியோர்கள் தமோம்சமான கால தத்துவம் என்ற நிலையை என்னுடையதாகச் சொல்லுவார்கள். (15)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

116. நித்தநிய மத்துடனே நெறியுறப்பார்ப் பார்கள்சிலர்,
பத்தியாற் பார்ப்பர்சிலர் பாவனையாற் பார்ப்பர் சிலர்,
சத்தியமா ஞானத்தாற் பார்ப்பர்சிலர் சாற்றுகின்ற,
வெத்திறத்தா ரினுமிவனே யெனையுணரு மெய்ஞ்ஞாநி.
(16)
(2.4.24)

(கலிநிலைத்துறை)

117. அறிவால் வழிபா டுறுவா னெவன்மற் றவனென்னிற்
பிறியா னவனியா னெனவே நினைமின் பிறர்தாமு
முறவால் வழிபா டுடையா ரடையா ரொருகாலம்
பிறவா ழியிடைப் பிறிவா யெனையே பெறுகின்றார். (17)
(2.4.25-26)

118. எல்லா வுலகங் களுமென் பாலே யென்னுலே
செல்லா நின்றுஞ் செயலொன் றிலனுன் சிவயோகி
யல்லா னடவா தெனவு மந்தச் செயலென்பா
லில்லா தமையு மறிவா னென்றும் பிறிவானல். (18)

(அறுசீர் விருத்தம்) (தானதான தனதான தானதன
தானன தான தானன)

119. கால மாகிய பரஞ்செயு முழுவதுங்
கண்டுகொண் டிருப்பேன
னூலி னுநுண் ணுணர்விறற் பிறிதின
னுவன்றிடப் படுவேனன்
மாலி லாதமா யோகிமா தேவனன்
மகத்துவ மெனக்குண்டா
மூல மாகிய பரத்தினிற் பரமமா
முறைமையான் மொழிகின்றேன். (19)
(2.4.29-30)

116. கிரமமாகப் பொருந்திய நித்திய கர்மாநுஷ்டான முதலிய நியமத்தோடு சிலர் பரமேசுவரனாகிய என்னை உணருவார்கள். சிலபேர் பக்தியினால் உணருவார்கள். சிலபேர் பாவனையினாலே உணருவார்கள். சிலபேர் உண்மையாகிய ஆத்ம (விசார) ஞானத்தினால் உணருவார்கள், இப்போது கூறிய ஆத்ம (விசார) ஞானியே முன்னர்க் கூறியவருள், எல்லாரினும், என்னை அறிந்திருக்கின்ற உண்மை ஞானியாவன். (16)

117. எந்தப் புருஷன் ஞானத்தினால் வழிபடுகின்றானோ அந்த ஞானியானவன் என்னில் வேறகான். அவனே நான் என்று உணருங்கள். மற்றும், அன்ய பாவத்துடன் பக்தி கொள்பவர்களும் பிறவியாகிய சமுத்திரத்தில் விழமாட்டார்கள். அன்போடு அவர்களும் என்னையே அடைகின்றார்கள். (17)

118. அந்த ஞானியானவன், என்னிடத்திலேயே எல்லா லோகங்களும் உண்டாகின்றது என்றும் என்னாலேயே சகல ஜகத்தையும் நடத்துபவனாயிருந்தும் நான் ஒரு செய்கையுமின்றிய நிஷ்கிரியனாவேன் என்றும், சிவயோகியாகிய நான் இல்லாமல் பிரபஞ்சம் நடக்காதென்றும் அந்தத் தொழில் என்னிடத்து இல்லாது இருப்பதையும் எப்பொழுதும் தெரிந்து இருப்பவன் என்னிடத்து அன்புடையவனாவான். (18)

119. காலதத்துவமாகிய பரம் செய்கின்ற எல்லாவற்றையும் நான் பார்த்துக்கொண்டிருப்பேன். சாஸ்திரங்களினாலும், சூக்ஷ்ம புத்தியினாலும் மற்றையவற்றாலும் நானே பரமேசுரனாக சொல்லப்படுபவன். யாதொரு மயக்கமுமின்றிய மகாயோகியும், மகாதேவனும், நானே ஆகின்றேன். மேன்மை எனும் பெருமை எனக்கே பொருந்தும். இப்பிரபஞ்சத்திற்குக் காரணம் என்று சொல்லக்கூடிய பரவஸ்துவையும் கடந்து நின்ற பரம்பொருளாம் நான் அத் தன்மையினால் இதைச் சொல்லுகின்றேன். (19)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

120. படைப்பவனு னெப்பொழுதும்
பரம்பரயோ கிக்கிருந்து
நடத்துவனு னநவொடுக்க
மிலாஞாந யோகத்தாற்
கிடைத்திடுமென் றனையாகக்
கெழுமியயோ காநந்தத்
திடைப்படலா னடஞ்செய்வே
னெல்லையில்பே ரின்பத்தால். (20)

121. யானுடு மியல்பறிவா னெல்லாவே தமுமறிவான்
வானுடர் மாமறைக ளறைகின்ற மறைவிதனைத்
தானுளும் பெறவுரியான் றவமுடையா னிசமுடையா
னுதை வன்புடைய னுகிதவ நலமுடையான். (21)
(2.4.33-34)

120. எல்லாவற்றையும் பிரம்மாரூபமாகவிருந்து சிருஷ்டிப்பவன் நானே. சதாகாலமும் மேலான பிரமயோகி களினது இருதயத்திலிருந்து நடத்துபவனும் நானுகின்றேன். நனவு, துயில் இல்லாத சஹஜ நிர்விகல்ப ஞானயோகத்தினுல் அடைகின்ற எனது சொரூபம் மிகு சிரேஷ்டம் பொருந்திய யோகானந்தத்தில் தானுக விளங்குதலின் அளவில்லாத பிரமானந்தத்தினுல் நடனஞ் செய்து கொண்டு இருப்பேன்.

(20)

121. நான் இருதயத்திலிருந்து நர்த்தனம் செய்கின்ற தன்மையை உணருமவன் சகல வேதங்களேயும் உணர்ந்தவனுகின்றன். தேவர்கள் விரும்புகின்ற பெருமை பொருந்திய வேதங்கள் சொல்லுகின்ற இந்த ரகசியத்தை சதா காலமும் அடையத்தக்கவனுகின்றன். நல்ல தவத்தினே உடையவனுகின்றன். உயர்ந்த பக்தியை உடையவனுகின்றன். அவனே அக்னிஹோத்ரியுமாகின்றன்.

(21)

# ஐந்தாவது அத்தியாயம்

## விசுவரூபம்

(கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தானா)

122. இவ்வளவு தானருளி யின்பமுட னன்பர்க்
கவ்வளவி லாததிரு மேனியத னாலே
யெவ்வொளியு மானவனி லங்கியவ ருள்ளே
செவ்வொளிவி ளங்கநட நின்றுசெய லுற்றான். (1)

123. எண்ணமதி றந்தபர யோகவித யத்தே
வண்ணமதி லாதபர மாகியம கேசன்
விண்ணினிடை யேவிமல னைவரி யோடுங்
கண்ணினெதி நின்றுநட மாடவவர் கண்டார். (2)

(அறுசீர்விருத்தம்)

124. ஏவன் மாயை யிந்தவுல
கெல்லா மாகி யிருப்பதுவா
மேவ னாலே நடக்கின்ற
தேவன் பதங்கள் சிந்தித்தே
பாவ மான வஞ்ஞானந்
தன்னா லுண்டாம் பயம்போகு
மாவ வந்தப் பரம்பொருணின்
றாடக் கண்டா ரன்போடும். (3)

# ஐந்தாவது அத்தியாயம்

## விசுவரூபம்

122. ஸனகாதி ரிஷிகட்கு அன்போடு தான் இந்தப் பிரகாரம் பக்தியை உபதேசித்து, அளவிடமுடியாத திவ்விய மங்கள விராட் சொரூபத்தினுல் ஸனகாதி ரிஷிகளுடைய இருதயத்திலே எல்லா பிரகாச ரூபமாயுள்ள பரமசிவன் சிவந்த திருமேனி தோன்றும்படியாக பிரகாசித்துக்கொண்டு நர்த்தனம் செய்ய ஆரம்பித்தான். (1)

123. சங்கல்பம் நாசமாயுள்ள மேலான யோகத்தினை அப்யாசித்துள்ளவர் இருதயத்தின்கண் தனக்கென ஓர் நிறமு மில்லாத மேலாகிய மகேசுவரன், ஆகாயத்தில் நிர்மலமான மஹா விஷ்ணுவோடும் சௌனகாதி ரிஷிகளது நேத்திரத்திற்கு முன்னர் நின்று ஆனந்த தாண்டவம் செய்ய, ஸனகாதி ரிஷிகள் அதனைப் பார்த்தார்கள். (2)

124. எந்த பரமேசுவரனது மாயையினின்றும் சராசராத்மகப் பிரபஞ்சங்களனைத்தும் உண்டாகி இருக்கின்றனவோ, எந்தப் பரமேசுவரனுல் இந்தப் பிரபஞ்சங்கள் யாவும் நடத்தப் படுகின்றனவோ, எந்த பரமேசுவரனுடைய திருவடிகளை தியானித்தலினுல் பாவமாகிய அஞ்ஞானத்தினுல் உண்டாகின்ற பீதியானது நிவிர்த்தியாகுமோ, ஆச்சரியம்! அந்த காரணமாகிய வஸ்து நின்றிருந்து ஆனந்த நடனம் செய்ய, பக்தியோடும் ஸனகாதி ரிஷிகளனைவரும் பார்த்தார்கள். (3)

(கலிவிருத்தம்)

125. நித்திரையு முதவதில் வாயுவைநி றுத்திப்
பத்தியொடு சாந்தியைய டைந்தபர யோகத்
துத்தமர்க ளாதலுத யாத்தமந மில்லாச்
சுத்தவொளி யோடவ்வொளி கண்டனர்க டீயோர். (4)
(வடமொழி கூர்மபுராணம் 2.5.6)

(வேறு) (தனன தனன தனன தனன)

126. கணமாத் திரையிற் கழல்கை தொழுவோ
ருணரா மையழிக் குமுருத் திரனே
வணறா டறியா னையம்மா முநிவர்
கணமா வெளிகண் டனர்கம் மிசையே. (5)

(கலிவிருத்தம்) (தனத னதன தானன தானன)

127. சிரங்க ளாயிரஞ் சேவடி யாயிரங்
கரங்க ளாயிர மாய்க்கரத் தேந்திய
வுரங்கொ டண்டமு மோங்கிய சூலமும்
பரந்த வேணியும் பான்மதிக் கண்ணியும். (குளகம்)
(6)

(நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா) (தானதன தனதனன
தானதன தனதானன)

128. புண்டரிக வுரியுடையும்
பொன்னொளியாற் பூமகன்பே
ரண்டமெலா மாவரித்த
வநலிரவி மதியென்னக்
கொண்டிலகு முக்கண்ணுங்
கூரெயிறுங் கோடிபெய
ருண்டருக்க ரெறிக்கின்ற
ரெனத்திகழு மோருருவும். (குளகம்) (7)
(2.5.9-10)

125. தூக்கத்திற்கிடங்கொடாது, பிராணனை பந்தனம் செய்து பக்தியுடன் உபசாந்தியைப் பொருந்திய மேலான யோகத்தின்கண் மஹான்களாயுள்ளவர்கள் உணரும், ஜனனமரணம் இல்லாத பரிசுத்தமான பிரகாசத்தோடு, பொருந்திய ஒளியாக பரமேசுவரனை ஸனகாதி ரிஷிகள் பார்த்தார்கள். (4)

126. தனது திருவடிகளை நமஸ்கரிப்பவர்களது அஞ்ஞானத்தினை க்ஷணநேரத்தில் நாசம் செய்கின்ற ருத்திரமூர்த்தியை, "இவ்வண்ணம்" என்று சுட்டறிய முடியாதவனை, அந்த ஸனகாதி ரிஷிகள் ஆகாயத்தின் மீது, கூட்டமாக நேரே பார்த்தார்கள். (5)

127. ஆயிரம் தலைகளும், ஆயிரம் திருவடிகளும், ஆயிரம் கைகளுமாக, கையின்கண் பொருந்திய வலுவு கொண்ட தண்டாயுதமும், பிரகாசமுடைய சூலாயுதமும் விரிந்த ஜடா பாரமும் அதில் மூன்றும் பிறை பூமாலையும், (6)

128. புலித்தோல் ஆடையும், பிரமதேவனால் சிருஷ்டிக்கப்பட்ட பிரமாண்டங்கள் யாவும் சோமன், சூரியன், அக்னி என்று சொல்லும்படியாக இருந்து பிரகாசிக்கின்ற திரி நேத்திரங்களின் பொன்போன்ற பிரகாசத்தினால் சூழப்பெற்று கூர்மை பொருந்திய பற்களும், கோடி பெயர்கள் இருக்கின் றார்களோ, கோடி சூரியர்கள் எறிக்கின்றார்களோ என்று சொல்லும்படி பிரகாசிக்கின்ற ஒரு சொரூபமும், (7)

129. தனதான திருவுருவிற் சகமெலாம் பிறந்துதன
தநலாலே யழியமிக வதிசயமாம் படிகாட்டி
யினமான தில்லாத விந்தவடி வந்தானே
யனையாநின் முகாசந் தனிலாடி யருளினனல். (8)

130. ஞாலமெலாஞ் செய்கின்ற நாதனைஞா நச்சுடரைக்
காலவுரு வினைக்கலைக ளியாவையுமாங் காரணனை
யாலமமர் களத்தனையிவ் வினைத் துயிர்க்கு மதிபதியைச்
சீலமிகு யோகிகடஞ் சிந்தனையிற் றிகழ்தேசை.
(குளகம்) (9)
(2.15.12)

131. உற்பவனோ யுற்றவர்க ளொழிப்பதனுக் கொருமருந்தாங்,
கற்பகத்தை யோகிகடங் காரணத்தை யாரணந்தேர்
தற்பதத்தைப் பரமான சத்திகட்குச் சத்தியா
மற்புதவா தாரத்தை யமரேசர் தொழுமரசை.
(குளகம்) (10)

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

132. ஆகா தழியா திருந்தபர
மாநந் தத்தை யகிலத்துக்
கேகா திபனை யெத்தேவு
மெல்லா முனிவர் களுமிறைஞ்சி
நீகா வென்னு நின்மலனை
நித்யத் துவத்தை நிரந்தரமா
மியோகா லடையு முயர்பதியை
யொளிகட் கெல்லா முள்ளொளியை.
(குளகம்) (11)

129. தன்னுடையதாகிய திவ்விய மங்கள சொரூபத்தில் பிரபஞ்சங்களனைத்தும் உண்டாகி, தன்னுடைய அக்னியினுலே நாசமடைவதை, மிகவும் ஆச்சரியம் உண்டாகும்படி காண்பித்து, "இத்தன்மைத்து" எனக் கூறமுடியா இந்த சொரூபமே "அத்தன்மைத்து" எனக் காணும்படியாகயிருந்து, ஆகாயத்தின் கண்ணே அவர்கட்கு நர்த்தனம் செய்துகாட்டினுன். (8)

130. பிரபஞ்சங்கள் யாவற்றையும் பிரம்மா ரூபமாக யிருந்து சிருஷ்டிக்கின்ற தலைவனே, ஞான சூரியனே, யம சொரூபனே, எல்லா கலைகட்கும் காரணபூதமாயுள்ளவனே, விஷம் பொருந்திய கண்டத்தையுடைய நீலகண்டனே, சகல ஜீவர்கட்கும் தலைவனுக உள்ளவனே, ஒழுக்கம் மிகுந்த யோகிகளுடைய சித்த விருத்தியில் விளங்குகின்ற சைதன்ய சொரூபனே, (9)

131. ஜன்மமாகிய வியாதியை அடைந்தவர்கள் அதை நிவிர்த்திப்பதற்கு விரும்பும் ஒப்பற்ற ஒளஷதமாகிய கற்பக விருக்ஷத்தை, யோகிகளுடைய இருதயத்தின்கண் விளங்கும் காரணமாயிருப்பவனே, வேதங்களால் நிச்சயிக்கப்பட்ட "தத்"பத வஸ்துவை, மேலாயுள்ள சக்திகளுக்கு சக்தியாகிய அதிஆச்சரியமுடைய ஆதாரமாயுள்ளவனே, தேவேந்திரன் வணங்குகின்ற தலைவனை கடவுளே, (10)

132. உற்பத்தி நாசம் இன்றிய பிரமானந்தத்தினே, இந்தப் பிரபஞ்சத்திற்கு ஏகமாயுள்ள கடவுளே, எல்லாத் தெய்வங்களும் எல்லா ரிஷிகளும் தோத்திரம் செய்து நமஸ்கரித்து தேவரீர் எங்களை இரக்ஷிப்பீராக என்று வணங்கும் நின்மல ஸ்வரூபனே, நித்தியமாயுள்ள பிரமத்தை இடையீடின்றி அப்யாசிக்கின்ற யோகத்தினுல் அடைகின்ற மேலான கடவுளே, எல்லாப் பிரகாசங்கட்கும் ஆந்தரமாயுள்ள பிரகாசத்தினே, (11)

(கலிப்பா) (தனதனு தனதனு தான தானனு)

133. துறவின ரறிவிடைத் தோன்றுஞ் சோதியை
யுறவினி லறிபவர்க் கெளிய வுண்மையைப்
பிறிவினி லறிவரி தாய பெற்றியை
யறிவினை யறிபவர்க் கருளு மண்ணலே. (குளகம்)
(12)

(அறுசீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்)

134. மாதா விலியா கியகருணை
மாதே வனைமா மாதவத்தி
ஞதா ரத்தை யொருகாலு
மழியாச் செல்வ மளிப்பவனைப்
பேதா பேத மற்றெல்லாந்
தானு யிருந்த பிரமத்தை
யோதா துணரு மியோகத்தை
யளித்தற் குரிய வொண்சுடரை. (குளகம்) (13)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

135. உருவோவிங் கருவோவென்
றும்பர்க்கு முணர்வரிதாய்க்
கருவாகி நின்றபெருங்
கண்ணுன காரணனைச்
சொரூபாநந் தனைத்தனது
சோதியுளத் தேதோன்றக்
குருவாகுந் திருமேனி
கொண்டாடக் கண்டார்கள். (14)

(எழுசீர் சந்த விருத்தம்) (தான தானன தனுன தானதன
தான தானதன தானனு)

136. கண்டு மாயையை யதற்குளே யொருவர்
காணெணு வகைக ரந்துதான்
னண்டர் மாயையை மறைத்து மீண்டுவெளி
யாகி யாடி யருளண்ணலே
வண்டு ழாய்முடிய னுன வச்சகல
லோக யோநியையி டத்திலே
கொண்ட கோலமொடு கண்டு மாமுநிவர்
கூறெ ணுவுவகை கூடினுர். (15)
(2.5.17-18)

133. சன்னியாசிகளது புத்தியின்கண் விளங்குகின்ற பிரகாச சொரூபனே, பக்தியினுல் உணருபவர்க்கு சுலபமான சத்தியப் பொருளே, வேறுபாட்டால் உணரமுடியாத தன்மையை, அறிவுறுவாம் ஆத்மாவை உணருபவர்கட்கு அனுக்கிரகஞ் செய்யும் பெருமையிற் சிறந்த பரமசிவனே, (12)

134. தாயில்லாதவனுகிய, கிருபையே சொரூபமாக உடைய மகாதேவனே, பெரிய மகாதவத்திற்கு ஆதாரமா யுள்ளவனே, எப்பொழுதும் நித்தியமாயுள்ள ஐசுவரியத்தினே கொடுப்பவனே பேதாபேதங்கள் இறந்து சகலமும் தனது சொரூபமாக யிருக்கின்ற பிரமத்தினே வாக்கால் சொல்லாது மனத்தினுலேயே அறிகின்ற யோகத்தை கொடுக்கக் கூடிய பிரகாசம் பொருந்திய ஞானசூரியனே, (13)

135. இவ்விடத்து ரூபமோ, அரூபமோ என தேவர்கட்கும் அறியமுடியாததாய் பீஜமாகியிருக்கப்பட்ட பெருந்தகைமையினே உடைய காரண சொரூபனே, சொரூபானந்த ஸ்வாமிகளே, தன்னுடைய பிரகாசமானது மனதில் விளங்கும் படியாக குரு மூர்த்தமாகிய திவ்ய மங்கள் மூர்த்தத்தினேக் கொண்டு நர்த்தனம் செய்ய அதனே ஸனகாதி ரிஷிகள் தரிசித்தார்கள். (14)

136. அவ்வாறு தரிசனம் செய்தும், மாயையினுள்ளே, ஒருவரும் அறியமுடியாதபடி தான் மறைத்து தேவர்கள் மாயையினே மூடியும் மறுபடியும் வெளிப்படத் தோன்றி நர்த்தனம் செய்து அனுக்கிரகம் செய்கின்ற பரமசிவனே, வளப்பம் பொருந்திய துளபமாலைகளே முடியிலணிந்துள்ள அந்த சகல லோகங்களேயும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருப்பவனுகிய மகாவிஷ்ணுவை வாம பாகத்திலே உள்ள கோலத்தோடு, ஸனகாதி ரிஷிகள் பார்த்து வாக்கால் சொல்ல முடியாத சந்தோஷத்தை அடைந்தார்கள்.

(15)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

137. குரம்பையினுள் ளேயிதயக்
குகையின்மறைந் திருக்கின்ற
பரம்பொருளைக் கண்ணாலே
பார்த்துப்பல் காற்பணிந்து
கரந்தலையிற் குவித்துத்தங்
காதல்கரை யழிவுறநின்
றுரந்தர வோங் காரத்தை
யுச்சரித்தங் குபநிடத்தால். (குளகம்) (16)
(2.5.18-20)

(கலிவிருத்தம்)

138. பகுதி லீசன்முன் பாவகற் கண்டதோ
ரிழுது போலவி தயமெ லாமுக
வழுது மன்பினொ டாடியும் பாடியுந்
தொழுது தோத்திரஞ் செய்யத் தொடங்கினர். (17)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

139. ஆகமுறு மாருயிர்நீ யவ்வுயிர்க்கு மதிபதிநீ
யோகநுகர் புருடனுநீ நுகர்விக்கும் புராதநனீ
யோகிநீ யுணர்பவனீ யுளந்தொறுநின்றுணர்கின்ற
வேகனீ நின்மலமா யாவையுமாம் பரம்பொருணீ.
(18)

(அறுசீர்விருத்தம்)

140. கரண மெல்லா மொடுங்கினவர்
காயத் துள்ளே கதியாகிப்
பிரம யோநி யாயுள்ள
பெரும வென்றும் பிறவாதாய்
மரண மில்லா நின்செம்பொன்
வடிவே பரமாய் மற்றெதிலும்
பரம மாகி யுயிர்க்குயிராய்
நிற்கும் பரமாய்ப் பார்க்கின்றோம். (19)
(2.5.22)

137. சரீரத்தினுள்ளே இருதயமாகிய குகையில் ரகசிய மாயிருக்கின்ற பிரம வஸ்துவை ஞானக் கண்ணினுல் பார்த்து, பலதரம் நமஸ்காரம் செய்து சிரசில் கைகளை கூப்பி, தம்முடைய அன்பாகிய அணையானது உடையும்படி நெக்கு நெக்காக உருகிநின்று உபநிஷத்து வாக்கியத்தால் ஓம் என்னும் பிரணவத்தை அழுத்தமாக சொல்லி, (16)

138. அக்னியின் முன் வைக்கப்பட்டு உருகுகின்ற ஒப்பற்ற நெய்யைப் போல குற்றமற்ற ஈசுவரனது சன்னிதா னத்தில் மனமானது நெக்கு நெக்காக உருக ஆனந்தக் கண்ணீர் சொரிந்தும், பக்தியோடு நடனம் செய்தும், பரமேசுவரனது கீர்த்தியைச் சொல்லிப் பாடியும், நமஸ்காரம் செய்தும், தோத்திரம் பண்ண ஆரம்பித்தார்கள். (17)

139. சரீரத்தின்கண் பொருந்திய நிறைந்த ஜீவனும் நீயே ஆகின்றாய், அந்த ஜீவனுக்கும் தலைவன் நீயாயிருக்கின்றாய், போகங்களை அனுபவிக்கின்ற புருஷனும் நீயாயிருக்கின்றாய், அனுபவிக்கும்படி செய்யும் பழையோனும் நீயாயிருக்கின்றாய், யோகியாகவும் நீயேயிருக்கின்றாய், எல்லாவற்றையும் நீயே அறிகின்றாய், அந்தக்கரணங்கள் தோறுமிருந்து அறிகின்ற அத்வைத சொரூபனும் நீயாகின்றாய், நின்மலமாயுள்ள எல்லாமும் ஆகிய காரணவஸ்து நீயே ஆகின்றாய். (18)

140. அந்தக்கரணம் யாவும் லயத்தை யடைந்தவர்களின் சரீரத்தினுள்ளே இருப்பவனாய், பிரம ரூப காரணமாயிருக்கின்ற தலைவனே, எப்பொழுதும் ஜனனம் அடையாதவனே, நாசமில்லாத தேவரீரது இரண்யகர்ப சரீரமே, எல்லாவற்றிற்கும் மேலுக்கு மேலாகி பசுபதியாய் இருக்கின்ற பிரம சொரூபமாகப் பார்க்கின்றோம். (19)

141. பரமா ணுவின துருவாகிப்
படைப்பாய் நீபல் லுலகுகளுந்
திரமா முன்னு லேயுண்டாஞ்
சிறிதிற் சிறிதாய் மிகப்பெரிதிற்
பெரிதாய் நின்னில் வேறில்லாப்
பெருமை காணும் பெருந்தகமைக்
குரியா ரெல்லா மொருநீயே
வேறென் றிலதென் றுரைப்பர்களால். (20)

(அறுசீர் சந்த விருத்தம்) (தானதான தனதான தானதன தான தானன தனதான)

142. போத னாகிய புராணமும் புருடனைப்
பொருட்கெலா முயிராக
வாதி நாள்படைத் தனையவன் படைத்தன
னகிலமு மந்நாளே
வேதம் யாவையும் விரித்தனை யுன்னிலே
மீளவு மனைத்திற்கு
மேதுபூதன யுளந்தொறு மிலங்குநின்
னியல்புகண் டனமெந்தாய். (25)
(2.5.24-25)

(கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தானு)

143. இப்பிரம சக்கரமி யங்குவது முன்பா
லப்பெரிய மாயையுடை யாயமல நீயே
சிற்பரம யோகபதி திவ்யநட நாநின்
பத்மசர ணங்கள்சர ணென்றுபணி கின்றோம். (22)
(2.5.26)

141. தேவரீர் சூக்ஷ்மமான அணு சொரூபமாயிருந்து சகல பிரபஞ்சத்தையும் சிருஷ்டி செய்கின்றீர். நிலையாயுள்ள அனைத்தும் உன்னாலேயே உண்டாகின்றன. சூக்ஷ்மத்தில் சூக்ஷ்மமாயிருந்த மகத்தில் மகத்தாய், உன்னினின்றும் அன்னியமில்லாத பெருமையை உணரும் பெருந்தன்மைக்கு உரித்தானவர்கள் எல்லாரும் ஒப்பற்ற தேவரீரே உன்னைத் தவிர அன்னியமா யொன்றுமில்லை என்று கூறுவார்கள். (20)

142. எமது தந்தையே! பிரமாவாகிய பழமையான இரண்யகர்ப புருஷனை சகல வஸ்துகட்கும் பிராணனாக முதலில் சிருஷ்டி செய்தீர். அந்தப் பிரமதேவன் எல்லாவற்றையும் சிருஷ்டி செய்தான். அக்காலத்திலேயே வேதங்கள் எல்லாவற்றையும் உண்டாக்கினீர். தேவரீரிடத்திலேயே மறுபடியும் அடங்குகின்றன. எல்லாவற்றிற்கும் காரணபூதனாக அந்தக்கரணங்கள் தோறும் பிரகாசிக்கும் உன்னுடைய தன்மையை யாம் அறிந்தோம். (21)

143. பாபமற்றவனே, தேவரீரே, சித்தாய் பிரமரூபமாய் யோகத்திற்குத் தலைவனே, ஆனந்ததாண்டவம் செய்பவனே, இந்தப் பிரமரூப சக்கரம் நடப்பதுவும் உன்னிடத்திலே யேயாம். அப்படிப்பட்ட மகத்தான மாயையினை உடையவனே, தேவரீரது தாமரை மலர் போன்ற திருவடிகளை அடைக்கலம் என்று கருதி நமஸ்கரிக்கின்றோம். (22)

(அறுசீர்விருத்தம்)

144. எந்தைநீ பரமா காசத்
திடையுறு நிறுத்தங் கண்டோ
மிந்தவெப் பொருளு மானு
யேகநீ யாகி நின்ற
வந்தநின் மகிமா வைக்கண்
டதிசய மாக வுன்ன
தந்தமில் பரமா நந்த
மநுபவித் தநுப வித்தேம். (23)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

145. உன்னுரையா மோங்கார
முயர்முத்திக் கொருவிதைநீ
துன்னியுட ரேறுநீ
தோன்றுமை மறைந்திருத்தி
நின்னிடையெல் லாமாய
நீமாயாய் நின்னொழிய
வந்நியமா யுள்ளவெல்லா
மசத்தியமென் றறைவர்களால். (24)
(2.5.28)

(கலிப்பா) (தனதன தனதன தனதை னதன)

146. தொழுதரு மறையெலாந் துதிப்ப துன்னையே
பழுதறு முநிவர்கள் பணிவ துன்னையே
யொழிவற வுணர்பவ ருணர்வ துன்னையே
யழிவற நினைபவ ரடைவ துன்னையே. (25)

(அறுசீர்விருத்தம்)

147. ஒருமறை யநந்த சாகை
கொண்டுன துருவ மொன்றி
னருமையை யறிவிக் கின்ற
வப்படி யறிய வுன்றன்
பெருமையை யறிவார் சாந்தி
பெறுபவர் பெறுதா ரெல்லாங்
கருமய லுறுவார் சாந்தி
கநவிலுங் காணமாட்டார். (26)
(2.5.32)

144. எமது பிதாவே! தேவரீர் சிதாகாயத்தின்கண் பொருந்தி செய்யப்பட்ட ஆனந்த தாண்டவத்தை தரிசித்தோம். இங்கு தோற்றப்பட்ட எல்லா வஸ்துக்களும் ஆயினீர். அத்வைத சொரூபமாயிருக்கின்ற அப்படிப்பட்ட தேவரீரது மகிமையைப் பார்த்து ஆச்சரியமாகக் கருதி தேவரீரது நாசமில்லாத பிரமானந்தத்தினை அனுபவித்து மேலும் அனுபவித்தோம். (23)

145. தேவரீரது வசனமாகிய ஓம் என்னும் பிரணவமானது அனர்த்த நிவிர்த்தி, ஆனந்த பிராப்தி, ரூப மோக்ஷத்திற்கு ஒப்பற்ற காரணம் ஆகும். தேவரீர், சரீரங்கள் தோறும் பொருந்தி, தோன்றுமல் ஆவரணம் செய்து இருக்கின்றீர். தேவரீரிடத்து எல்லாம் நாசம் அடைய, தேவரீர் நித்தியனு யிருக்கின்றீர். தேவரீரை இன்றி வேறுயிருக்கின்ற எல்லா வஸ்துக்களையும் பொய் என்று சொல்லுவார்கள். (24)

146. வணங்குதற்குரிமையான வேதங்கள் யாவும் தோத்திரம் செய்வது தேவரீரையேயாகும். பாபமற்ற ரிஷிகள் வணங்குவதும் தேவரீரையேயாகும். இடையீடின்றி அறிபவர்கள் அறிவதும் தேவரீரையேயாகும். நித்தியமாயிருத்தற் பொருட்டு தியானிப்பவர்கள் அடைவதும் தேவரீரையேயாகும். (25)

147. ஒரு வேதமானது அநேக சாகைகளினுல் தேவரீரது ஓருருவத்தின் அருமையினை சொல்லுகின்றன. அவ்வாறு அறியக்கூடிய தேவரீரது கீர்த்தியினை உணர்ந்த மகான்கள் சாந்தியை அடைந்தவராவார்கள். தேவரீரது சொரூபத்தை உணராத யாவரும் இருட்டாகிய மயக்கத்தினை அடைவார்கள். அவர்கள் சொப்பனத்திலும் சாந்தியினை அடையார்கள். (26)

(சந்த கலிவிருத்தம்) (தான தான தான தான தான தானனு)

148. ஆதி தேவ னீயுலக னைத்து யிர்க்கு மாதியா
யீதெ லாம மைக்குமண்ண லெல்லை யற்ற வின்பமெய்ப்
போது மேவி யென்று மைம்பு லப்படாதி ருப்பதோர்
சோதி யாகி நித்தமுத்த சுத்த னுயி ருக்குமால். (27)

(தனதன தனதன
தனதன தனதன)

149. படைத்திநீ யளித்திநீ
படைத்த யாவு முன்னிலே
யுடைத்திநீ யொருத்தனே
யுணர்ந்து கொண்டி ருத்திநீ
யடைத்திநீ யுளத்திலே
நினன்பை யேயொ ளிக்குமா
தடைப்படா மலென்றுநின்
சரண்ப ணிந்து சாருகோம். (28)

(அறுசீர்விருத்தம்)

150. யோகி யாகி யுயிராகி யுணர்வா னுகி யிணையில்லா
வேக னுகி யிந்திரனு மரியு மயனு மீசனுமாஞ்
சேகி தாவுந் தாதாவுந் தீயு மதியுந் திநகரனு
மாகி வெவ்வே றனைத் துருவு மானு யெனவே
யறைகுவரால். (29)

151. அகில உலகு மிருப்பிடநீ
யறிய வேண்டு மக்கரநீ
சகல தருமங் களும் வளர்க்குந்
தாய்நீ புருடோத் தமன்றனீ
புகலு மரிநீ பூமகனீ
புராரி நீயெப் பொருளுக்கும்
பகுதி நீநீ யொழிவின்றி
நிலையாய் நிற்கும் பரம்பரநீ. (30)
(2.5.35)

148. தேவரீரே முதற்கடவுளாவீர், எல்லா உலகங்கட்கும், எல்லா ஜீவர்கட்கும் நீர் முன்னே இருந்து இவைகள் யாவற்றையும் உண்டாக்குகின்ற பெருமையில் சிறந்த கடவுளுமாவீர். சதாகாலமும் அளவிட முடியாத ஆனந்தத்தை பொருந்தி, எப்பொழுதும் பஞ்சேந்திரியங்களின் வழியாக விஷயங்களின் வசப்படாது இருப்பதும் ஆகிய ஒப்பற்ற பிரகாசமாயும், நித்தியமாயும், முத்தமாயும் (விடுபட்டதாயும்) சுத்தமாயும் இருக்கின்றீர். (27)

149. தேவரீரே எல்லாவற்றையும் உண்டாக்கினீர், தேவரீரே எல்லாவற்றையும் இரக்ஷிக்கின்றீர். உம்மால் உண்டாக்கப் பட்ட யாவும் உம்மிடத்திலேயே இருக்கின்றன. தேவரீர் ஒருவரே எல்லாவற்றையும் அறிந்து கொண்டிருக் கின்றீர். தேவரீரது இருதயத்திலே எல்லாவற்றையும் வைத்துக் கொண்டிருக்கின்றீர். தேவரீருடைய அன்பையே பிரகாசிக்கும் படியாக மகா பிரதிபந்தகமில்லாமல் எப்பொழுதும் தேவரீருடைய திருவடியை நமஸ்கரித்து அடைகின்றோம். (28)

150. மனோ நிக்ரகத்தில் யோகியாகவும், பிராணனாகியும், எல்லாவற்றையும் அறிவானாகியும், சமானமில்லாத அத்வைத ரூபனாகியும், இந்திரனாகியும், மஹாவிஷ்ணுவாகியும், பிரமாவாகியும், ஈசுவரனாகியும், சேகிதா என்னும் தேவதையும், தாங்குகின்ற தாதாவென்னும் தேவதையும், அக்னியும், சந்திரனும், சூரியனாகியும் இன்னும் நாநாவான எல்லா சொரூபமுமாய் இருக்கின்றாய் என்று பெரியோர் கூறுவார்கள். (29)

151. சகல பிரபஞ்சங்களுக்கும் இருத்தற்கு நீயே இடமாய் இருக்கின்றாய். உணரத்தக்கனவாகிய அக்ஷரரூபமாகவும் நீயேயிருக்கின்றாய். எல்லாத் தருமங்களையும் விருத்தி செய்கின்ற தர்ம மாதாவும் நீயாகின்றாய். புருஷர்களில் உத்தம னாகவும் நீ இருக்கின்றாய். சொல்லுகின்ற மகாவிஷ்ணுவும் நீயாயிருக்கின்றாய். பூமியை சிருஷ்டிக்கும் (தாமரைப் பூவிலிருக்கும்) பிரம்மாவும் நீயாயிருக்கின்றாய். திரிபுரதகனம் செய்த ருத்திரனும் நீயாயிருக்கின்றாய். எல்லா வஸ்துக்களுக்கும் பிரகிருதியும் நீயாயிருக்கின்றாய். தேவரீர் இடையீடின்றி ஸ்திரமாயிருக்கின்ற பரத்துக்கெல்லாம் பரவஸ்துவும் நீயாய் இருக்கின்றாய். (30)

(வேறு) (தனன தானதன தான தான தானன
தானன தானன)

152. கரண மியாவையுங் கடந்திருள் கடந்துனைக்
கண்டவ ராதித்த
வருண மானசிந் மாத்திர நேத்திர
முதற்புலன் மனஞ்செல்லாப்
பிரம மேகமாம் புருடனோர் பிறிதிலாப்
பெருமையாற் பேச்சற்ற
பரம வான்முதற் பகுதிநிர்க் குணம்வெறும்
பாழெனா நிகழ்கின்றார். (31)

(கலிநிலைத்துறை) (தான தனன தனதன தானன தனன
தான தானன தனதன தானன தானன)

153. ஓது மொலியூ றுருச் சுவைநாற் றந்தனக்கற்
றுதி முடிவி லபர மாய சிந்திதமாய்
பூத மனைத்தி னுக்கு முள்ளாய்ப் புறம்புமாஞ்
சோதி நினைய றிந்தார் துஞ்சார் பிறவாரால். (32)

(எழுசீர்சந்த விருத்தம்) (தானதானதன தானதானதன
தானதானதன தானன)

154. எந்த யோகிகளு நாடு கின்றபர
யோகி நின்னடியி றைஞ்சுகோ
மந்த மாதியில நந்த சத்தியுடை
யண்ண னின்னடியி றைஞ்சுகோஞ்
சந்த மின்னதென நாடு மாறரிய
சம்பு வேயடியி றைஞ்சுகோம்
பந்த மொன்றில்பரி சுத்த நற்பரம
பாத பங்கயமி றைஞ்சுகோம். (33)
(2.5.38)

(எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

155. கூடுநின் றருகு மிறைவநின் ஞாநக்
கூத்தினைக் கண்டுகும் பிட்டே
நாடுமெங் கண்க ளுன்றிரு மேனி
யன்றிமற் றென்றையு நாடா
வோர்டுமிம் மநமு மொழிவற நிறைந்த
வுனையல தொருபொரு ளுணராப்
பீடுறு கமல மலர்ப்பதம் பணிந்தெம்
பிறவிவே ரறுத்தனம் பிரானே. (34)

152. அந்தக்கரணம் எல்லாவற்றையும் நிக்ரகஞ்செய்து, அஞ்ஞானத்தினேயும் போக்கி உன்னுடைய சொரூபத்தை யுணர்ந்தவர்கள், சூரிய வர்ணமான சிதாகாச சொரூபம் என்கின்றார்கள். கண் முதலிய இந்திரியங்களால் பார்க்க முடியாததாயும், மனதினாலும் சிந்திக்க முடியாததாயும் உள்ள பிரமமானது அத்வைத ரூபமாம் என்கின்றனர். ஒப்பற்ற புருஷன் என்கின்றனர். வேறுபடுதலில்லாத பெருந்தன்மையால், வாக்கால் வசனிக்க முடியாத மேலான ஆகாயம் முதலிய மூல பிரகிருதி என்றும், நிர்குணம் என்றும் வெறும் சூனியமென்றும் சொல்லு கின்றார்கள். (31)

153. சுட்டிக் கூறப்படும் சப்த, பரிச, ரூப, ரச கந்தங்கள் இன்றி, உற்பத்தி நாசமில்லாத பிரமமாய் சிந்திக்க முடியாததாய் எல்லாப் பூதங்கட்கும் ஆந்தரமாகியும், வெளியாகியும் உள்ள பிரகாசமான உன்னே உணர்ந்தவர்கள் மரணமடையார்கள், ஜனனமடையார்கள். (32)

154. எப்படிப்பட்ட மகா யோகிகளும் இருதயத்தின்கண் தியானிக்கின்ற மேலான யோகியே! உன் திருவடியை நமஸ்காரம் செய்கின்றோம். உற்பத்தி நாசமில்லாத அநேக சக்திகளை உடைய பரமசிவனே, உன் திருவடியை நமஸ்காரம் செய்கின்றோம். சந்தங்கள் இப்படிப்பட்டது என்று கருதுதற்கு அருமையான கடவுளே உன்னுடைய திருவடியை நமஸ்காரம் செய்கின்றோம். யாதொரு பந்தமுமில்லாத தூய்மையான உயர்ந்த பரமசிவனே உமது பாதமாகிய தாமரை மலரை நமஸ்காரம் செய்கின்றோம். (33)

155. பரமசிவனே! தேவரீரது ஞானனந்த தாண்டவத்தினே தரிசித்து சரீரம் அனலில் காட்டிய மெழுகுபோல இருந்து உருகும்படியாக நமஸ்காரம் செய்கின்றோம். ரூபங்களைப் பார்க்கின்ற எனது கண்கள் தேவரீரது திவ்ய மங்கள சொரூபத்தையல்லாது வேறென்றையும் பார்க்காது, விஷயங்களிற் செல்லுகின்ற இந்த மனமும் இடையீடின்றி பரிபூரணமாயுள்ள தேவரீரை அன்றி ஓர் வஸ்துவையும் அறியமாட்டாது. பரமசிவனே! பெருமை பொருந்திய தாமரை மலர் போன்ற உபய திருவடியை நமஸ்கரித்து, எங்களுடைய ஜென்மமாகிய மூலத்தை நாசம் செய்தோம். (34)

(அறுசீர்விருத்தம்)

156. பவனே நின்னடி பணிகோம்
பவோற் பவனேயடி பணிகோந்
தவனே நின்னடி பணிகோஞ்
சங்கர னேயடி பணிகோ
மிவனே சென்றிட விங்ங
னெழுந்தரு ளும்பே ரருளே
சிவனே யெத்தே வர்க்குந்
தேவே நின்னடி பணிகோம். (35)

(கலிவிருத்தம்) (தான தானன தானன தானன)

157. காம னீறுசெய் கண்ணேவ ணங்குதுங்
கால னூறிய காலேவ ணங்குதும்
சாம கீதனே நாளும்வ ணங்குதுந்
தாளி லெந்தலே யாரவ ணங்குதுஞ்
நாம ரூபம தின்றிய னேத்துமா
நாம ரூபனே நாளும்வ ணங்குதுஞ்
சேம மாகிய வீடரு ளெந்தையாஞ்
சிவப்ர காசனே யென்றும்வ ணங்குதும். (36)

(எழுசீர்சந்த விருத்தம்)

158. உருப்ப நேகவித மாகி யோருருவ
னுமு ருத்திரநி னுள்குவார்
விருப்ப னேயவர்க டற்பெ ரும்பிறவி
வெந்து நீறெழவி ழிப்பதோர்
நெருப்ப னேநினேவு றப்ப டாவொருநி
ருத்த னேநிமல நெஞ்சகத்
திருப்ப னேயிறைவ னேசி வாயநம
வென்று சேவடியி றைஞ்சினர். (37)
(2.5.40)

156. மேலானவனே! உன்னுடைய திருவடியை நமஸ்கரிக்கின்றோம். ஜென்மத்தை உண்டு பண்ணுபவனே! உன் திருவடியை நமஸ்கரிக்கின்றோம். மேலான தவத்தை உடையவனே! உன்னுடைய திருவடியை நமஸ்கரிக்கின்றோம். சுகத்தைக் கொடுப்பவனே! உன் திருவடியை நமஸ்கரிக்கின்றோம். இவனே என்று சொல்லும்படியாக இவ்விடத்து (நீர் ஆலங்கட்டியாய்த் தடித்தது போலும், உருகியிருந்த நெய் கெட்டியானது போலும்) எழுந்தருளியுள்ள பெரிய கிருபா மூர்த்தியே! பரமசிவனே! எல்லாத் தேவதைகட்கும் தேவனுயுள்ளவனே, தேவரீரது திருவடியை நமஸ்காரம் செய்கின்றோம். (35)

157. மன்மதனை பஸ்பமாக்கிய நெற்றிக்கண்ணை நமஸ்கரிக்கின்றோம். இயமனை உதைத்துத் தள்ளிய பாதத்தை நமஸ்கரிக்கின்றோம். சாமகானப் பிரியனை சதாகாலமும் நமஸ்கரிக்கின்றோம். தேவரீருடைய திருவடியில் எமது சிரசு பொருந்தும் படியாக நமஸ்கரிக்கின்றோம். ஒரு நாமம் ஒரு உருவம் இல்லாது, எல்லாமாகிய பெயரும் ரூபமும் உடைய கடவுளை சதா காலமும் நமஸ்கரிக்கின்றோம். உயர்வாகிய அனர்த்த நிவர்த்தி, ஆனந்தப் பிராப்தி ரூப மோக்ஷத்தினை அனுக்கிரகஞ் செய்த எமது தலைவனுகிய சிவப்பிரகாச ஸ்வாமிகளை (தத்துவராயரின் பரமகுருவுமானவர்) எப்பொழுதும் நமஸ்கரிக்கின்றோம். (36)

158. உருவங்கள் அநேக பிரகாரமாயிருந்தும் ஒப்பற்ற சொரூபத்தையுடைய ருத்திர மூர்த்தியே! உன்னை மனதில் தியானிப்பவர்களிடத்து பிரியமுடையவனே! அவர்களது பெரிய ஜென்மத்தினை தகித்து பஸ்பமாகும்படி விழிக்கின்ற ஒப்பற்ற நெருப்பாகிய நெற்றிக்கண்ணை உடையவனே! சிந்திக்க முடியாத ஒப்பற்ற ஆனந்தத் தாண்டவஞ் செய்பவனே! நின்மலமான மனதின் கண் இருக்கின்றவனே, கடவுளே! சிவன் பொருட்டு நமஸ்காரம் என்று சொல்லித்துதித்து, பெருமை பொருந்திய திருவடியை நமஸ்காரம் செய்தார்கள். (37)

(கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தானா)

159. எந்தையள வற்றதிரு மேனியையி றைஞ்சி
சிந்தைகளி கூருமள விற்சிவனை நேரே
யந்தமறு தன்னையருள் செய்யவரு ளாலே
வந்ததிரு மேனியினை மாலினொடு கண்டார். (38)

(கலிநிலைத்துறை) (தனன தானனா தனதனா தனதனா தானா)

160. அளவி றந்தவ னளவுபட் டிருந்தவவ் வருள்கண்
டுளம்வி யந்துநின் னொப்பிலா வுருவுகண் டுய்ந்தோங்
களவொ ழிந்துளங் காதலிக் கின்றதுன் கரைதீர்
வளமை யின்னமுங் கேட்கவென் றடிவணங் கினரால்.
(39)

161. மேல தானதன் பெருமையைக் கேட்கமேன் மேலுஞ்
சால தாந்தவஞ் செயத்தகு தபோதநர் தமக்குக்
கால காலனைக் கடவுளுந் தொழுதெழுங் கடவுண்
மூலமாதவன் றன்முகம் பார்த்துமேன் மொழிவான்.
(40)
(2.5.46)

159. எமது தந்தையாகிய பரமேசுவரனது எண்ண முடியாத திவ்ய மங்கள சொரூபத்தை நமஸ்காரம் பண்ணி மனது சந்தோஷத்தை அடைந்த சமயத்தில், பரமசிவனே நேரே, நித்தியமாயுள்ள தனது சொரூபத்தை அனுக்கிரகஞ் செய்ய கிருபையினலே எழுந்தருளி வந்த திவ்ய மங்கள சொரூபத்தை மகா விஷ்ணுவோடு தரிசித்தார்கள். (38)

160. ஒரு விதத்திலும் அளக்கமுடியாத பரமசிவன், ஒரு அளவோடு கூடியிருந்த அந்த கிருபையைப் பார்த்து, மனதில் சந்தோஷத்தையடைந்து, தேவரீரது சமான ரகிதமான சொரூபத்தை தரிசித்து ஈடேறினேம், மனது பரிசுத்தமாயிருந்து தேவரீரது அளவிடமுடியாத வளப்பத்தை மேலும் கேட்டு ஆனந்தமடைய விரும்புகின்றது என விண்ணப்பஞ் செய்து, ஸனகாதி ரிஷிகள் திருவடியில் நமஸ்கரித்தார்கள். (39)

161. உயர்வாயுள்ள தன்னுடைய மகிமையைக் கேட்க, மீண்டும், மீண்டும் மிகுந்த தவத்தினை செய்கின்ற தவத்தையே தனமாகவுடைய ஸனகாதி ரிஷிகட்கு, காலனுக்குக் காலனும் எந்தத் தேவதைகளும் எழுந்து வணங்குகின்ற பரமசிவன் மஹாவிஷ்ணுவினது முகத்தினைப் பார்த்து மேலே சொல்ல ஆரம்பித்தார். (40)

## ஆறுவது அத்தியாயம்

# சிவசக்தியின் செயலுரைத்தல்

(எழுசீர் சந்த விருத்தம்) (ஈ.கீ. 154 காண்க)

162. காத லான்முனிவர் கேண்மி னென்பெருமை
காணு மாறருமை கண்டுதா
னேத லான்மறையெ னுள்ள வாறறியு
முற்ப விப்பதுல கென்றனை
லீதெ லாமுநிலை பெற்றி யங்குவது
மென்றனை லழிவு மென்றனை
லாத லாலழிவி லாத றப்பழைய
னை நான்முழுது மாகுவேன். (1)

(அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்) (தனதன தான தான
தானன தான தான)

163. அகிலபூ தங்க ளுக்கு மந்தரி யாமி யாய்நான்
சகலபூ தமுமென் னுள்ளே சாரநான் றங்கி நிற்ப
னிகலமு மதிலெங் கண்ணு நிற்பவ னெனவு மென்னைப்
புகலவும் படாதே யென்னிற் பொருள்பிறி
தின்மையாலே. (2)

(கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தான)

164. செப்பிடவொ ணுதெதிர்தெ ரிந்திடவு முங்கட்
கெப்படிநி கழ்ந்ததது வென்னுடைய மேனி
யப்படியி ருந்தவெனை மாயையத னலே
யொப்பிடநி னைந்திடுவ ரேயுணர்வி லாதார். (3)

## ஆறுவது அத்தியாயம்

# சிவசக்தியின் செயலுரைத்தல்

162. ஸனகாதி ரிஷிகளே! பிரியத்தோடு கேட்பீர்களாக!! வேதங்களானது என் அருமையை உணர்ந்து மகிமை தெரியும்படி சொல்லுதலினுல் என்னை உள்ளபடி அவ்வேதங்கள் உணரும். இந்தப் பிரபஞ்சத்தை உண்டாக்குவதும் என்னுலேயே ஆம், இந்தப் பிரபஞ்சம் யாவும் என்னுலேயே ஸ்திரமாயிருந்து நடப்பதுவும் ஆம், என்னுலேயே நாசமாக்கப்படுவதும் ஆம். ஆகையினுல் நித்தியமாயுள்ள அத்தியந்தம் புராதனனுகிய நான் எல்லாமுமாய் இருக்கின்றேன். (1)

163. சகல பூதங்கட்கும் உள்ளேயிருந்து அசைப்பவனுக நான் இருக்கின்றேன். என்னிடத்திலே எல்லாப் பூதங்களும் பொருந்துதலினுல் நான் அவற்றிற்கு ஆதாரமாயிருக்கின்றேன். (இப்படியிருப்பினும்) சகல வஸ்துக்களிலும் எல்லா விடங்களிலும் பொருந்தியிருப் பவனென்று என்னைச் சொல்லக்கூடாது. (ஏனெனில்) என்னைத் தவிர வேறு வஸ்து இல்லாமையால். (2)

164. உங்களுக்கு வாக்கினுலே (என்னை) வசனிக்க முடியாது; நேரே சாக்ஷாத்கரிக்கவும் எப்படி எப்படி விளங்கியதோ அதுவே எனது சொரூபம். அவ்வாறன என்னை மாயையின் வசத்தினுலே அஞ்ஞானிகள் ஆராய்ந்து உவமையில் கூறலாம் என எண்ணுகிறுர்கள், (3)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

165. மேவியா தினுமுளனுய் வியனுலகை நடத்துவனுன்
றுவிலா வென்னுலே சகலகலே களுநடக்கு
மோவிலா வொருகூற்று லுண்டாகு முலகனேத்து
மாய்வதா மற்றென்று லிருமையுமென் மாயையதால். (4)

166. ஈங்காதி யிடைமுடிவற் றிருப்பேனென் மாயையினுற்
பாங்காகப் பகுதிபுமான் பண்ணினன்முற் பவத்தாமா
ளுங்கார முதலாக வனைத்தும் விரிந் தனவதனு
லோங்காரப் பொருளாமென் ளொளியின்விரி
வுலகெல்லாம். (5)

(எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

167. கரியதாய் நின்றிவ் வுலகினுக் கெல்லாம்
காலசக் கரந்தனே நடத்து
மிரணிய கருப்ப னுகுமார்த் தாண்ட
னென்னிடைத் தோன்றின னென்றற்
புரியும்வே தங்க ளுன்கையு மொன்றுய்ப்
பொருளதாய் புராணமாய்ப் புணர்தற்
கரியதி லரிதா ஞாநயோ கதையு
மடியிலே யவர்க்களித் தனனுல். (6)

(வேறு)

168. எந்த நாளுமெனே யேநி னைந்தவியல்
பாலே யென்னருளி னுலயன்
சந்த நாடரிய திவ்ய மாமெனது
தன்மை தானவத ரிக்கிறு
னந்த மாதியிலென் னேவ லாலவனிவ்
வகில லோகமும மைக்கிறு
னிந்த நாரணன ளிக்கு மாறுமிவ
னென்னில் வேறெனவி லாமையால். (7)

165. எல்லா வஸ்துக்களிடத்தும் பொருந்தி இருப்பவனுய் ஆச்சரியப்படத்தக்க பிரபஞ்சத்தை நான் நடத்துகின்றேன். அழிவு இல்லாத என்னுலேயே எல்லா வித்தைகளும் நடக்கின்றன. ஒழிவு இல்லாத ஒரு சக்தியினுல் எல்லா உலகங்களும் உண்டாகின்றன. வேறொரு சக்தியினுல் சகலமும் நாசத்தையடைகின்றன. என்னுடைய மாயையினுலேயே உற்பத்தி நாசம் இரண்டுமுண்டாகின்றன. (4)

166. இவ்விடத்து உற்பத்தி திதி நாசம் இல்லாதவனுக இருப்பேன். என்னுடைய மாயா சக்தியினுல் சிருஷ்டிக்கு முன்னர் பக்குவமாக, சிரேஷ்டமாக பிரகிருதி, புருஷன் ஆகிய இரண்டையும் சிருஷ்டித்தேன். அதனினின்றும் மகத் தத்துவம் (அகங்கார தத்துவம்) முதலிய யாவும் உண்டாயின. இந்தப் பிரபஞ்சம் யாவும் ஓங்கார அர்த்தமாகிய என்னுடைய பிரகாசத்தின் விரிவேயாம். (5)

167. இந்தப் பிரபஞ்ச முழுமைக்கும் சாக்ஷியாகவிருந்து காலமாகிய சக்கரத்தினை நடத்துகின்ற இரணியகர்ப்பனுகிய சூரியனுனவன் என்னிலிருந்து உண்டாயினுன். அந்த சூரியனுக்கு என்னுல் செய்யப்பட்ட நான்கு வேதங்களையும் ஏகமான அர்த்தங்களுள்ளதாய் பழமையாய், அடைதற்கு அருமையிலும் அருமையாகவுள்ள ஞானயோகத்தினையும் முதலிலே உபதேசித்தேன். (6)

168. எப்பொழுதும் பரமேசுவரனுகிய என்னையே ஸ்மரிக்கின்ற தன்மையினுல் பிரமாவானவன் என்னுடைய கிருபையினுல் சதாகாலமும் கருதுதற்கு அருமையான, திவ்யமான என்னுடைய தன்மையினுலேயே தான் உற்பத்தியாகின்றனன். உற்பத்தி நாசமில்லாத என்னுடைய ஏவுதலினுலே பிரமா இந்த சகல ஜகத்தையும் சிருஷ்டி செய்கின்றுன். (என் பக்கத்தில் வீற்றிருக்கும்) இந்த மஹாவிஷ்ணு வானவர் எனக்கு வேறுக இன்மையினுல் இந்த சகல பிரபஞ்சத்தையும் இரக்ஷிக்கின்ற முறையுமாகும். (7)

(கலிப்பா) (தனதனன தானதன தானதன தான)

169. கடையுகம திற்கடிய காலவந லாய்நின்
றடையவுமு ருத்திரன ழிப்பதுமெ னலே
யுடையவலி யாலுலவு மூதையுட லுய்த்தே
நடையைமுத லானவைந டத்துவது மென்னல். (8)

(அறுசீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்)

170. தெய்வங் களுக்கும் பிதிரர்க்குஞ்
செய்யும் பூசை யாகின்ற
வவியங் கவியம் பாகஞ்செய்
தநலோ னளிப்ப தென்னலே
யுய்வந் திடுமா றுதரத்தீ
யாகு மவனுண் டனவெல்லா
மெய்வெந் திடாம லென்னியமத்
தாலே வேவித் திடுகின்றன். (9)

(கலிப்பா) (தனதனன தனதனன தனதனன தனதனன)

171. வருணனெனு மகிலசல பதியுமழை வரவுதவு
மருணனெனு முலகுதிகழ் வதுசெயம லனுமமிர்த
கிரணனெனு முயிர்மகிழ்வு கெழுமவருள் பவனுமெம
பரணமென விவரெனது பணிவகைசெய் தொழுகுமவர். (10)

(எழுசீர் சந்த விருத்தம்)

172. மிகப்ப யஞ்செயும ரக்கர் கோனிருதி
யாகும் விண்ணவனும் வெவ்விதா
மகப்ப யன்றனைய ளிக்கு மந்தகனு
மாட காதியள வற்றதோர்
சுகப்ப யன்செய்யள கேச னுமெனது
தோழ னுஞ்சுருதி சொன்னவா
மகப்ப யன்றனைய ளிக்கு மிந்திரனு
மற்றெ னேவல்செய்து வாழ்வரால். (11)

169. யுகாந்தத்தில் பிரளய காலத்தில் கடுமையான காலாக்னி ரூபமாயிருந்து பொருந்தவும், ருத்திரமூர்த்தி கலியுகத்தில் சங்காரஞ்செய்வதும் என்னுலேயே ஆம். உள்ள வலிவினுல் சஞ்சரிக்கின்ற காற்று ரூபமாயிருந்து உடலின்கண் பொருந்தி நடப்பதும், நடத்துகின்றதும் யாவும் என்னுலேயே ஆம். (ஊதை=வாயு) (8)

170. தேவதைகட்கும், பிதிரர்களுக்கும் செய்யப்பட்ட பூசை ஆகிய அவிசும் பஞ்சகவ்யமும் பக்குவம் செய்து அக்னி கொடுப்பதும் என்னுலேயேயாம். புசிக்கப்பட்ட யாவும் ஜீவித் திருக்கும் படியாக உதராக்னி ரூபமானவன் உதராக்னியால் சரீரம் வேகாமல் என்னுடைய ஆக்ஞையினுலே பக்குவம் செய்கின்றுன். (9)

171. மழையைப் பொழிகின்ற வருணனென்னும் தேவதையும் எல்லா ஜலங்களுக்கும் தலேவனும், எல்லா உலகங்களேயும் விளக்குகின்ற சூரியனென்னும் நின்மலமாகிய தேவதையும், அமிர்த கிரணன் எனும் குளிர்ச்சி பொருந்திய கிரணங்களே உடைய ஜீவர்கள் சந்தோஷத்தையடையும்படி பூரணமாக கொடுப்ப வனுகிய சந்திரனும் எமனது தொழிலேப்போல இவர்களும் என்னுடைய ஏவலேச் செய்து நடப்பவராவார்கள். (10)

172. மிகுதியான பீதியை உண்டாக்குகின்ற இராக்கதர் தலேவனுகிய நிருதி திக்கில் வசிக்கப்பட்ட தேவனும், கொடிதாகிய பாபத்திற்குத் தக்க துக்கத்தினேக் கொடுக்கும் இயமனும், அளவிடமுடியாத ஒப்பற்ற பொன் முதலியவாகிய சுகரூபப் பிரயோசனத்தை கொடுக்கின்ற குபேரனுகிய என்னுடைய நண்பனும், வேதத்தில் கூறிய பிரகாரம் யாகத்திற்கு தக்க பிரயோசனத்தைக் கொடுக்கின்ற இந்திரனும், என்னுலேவப்பட்ட தொழிலேச் செய்து வசிப்பார்கள். (அகப் பயம்=பாப பீதி; மகப் பயன்=யாகபலன்) (11)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

173. பொல்லாத பேய்களுக்கும்
பூதங்க ளனைத்தினுக்கு
மல்லாத கணங்களுக்கு
மதிபதியா கியவீச
னல்லார்க்கு நன்மைபெற
நல்குவது நாடொருமென்
சொல்லாலே மற்றவர்க்குச்
சொல்லவேண் டுவதுண்டோ. (12)

(கலிப்பா) (தனதன தானன தனன தானன)

174. அருத்திசெய் தங்கிரா வடிவ ணங்குவோ
னுருத்திர கணத்திலுத் தமனி யோகிகள்
வருத்தம தொழித்துவாழ் வாம தேவனுந்
திருத்தமா யென்னுடை யேவல் செய்குவார். (13)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

175. தக்ககரு மங்களிலே நடத்துவதுஞ் சார்பிலர்பால்
விக்கமளித் திடுவதும் விநாயகனென் னேவலினாற்
செக்கநிறத் தமரர்கள்சே நாபதியாய் ஞானத்தான்
முக்கியமா மறுமுகனென் னேவலையே
முயல்கின்றான். (14)

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

(தனன தானன தனதன தானன, தானன தனதான
தனன தானன தனதன தனதன தனதன தனதான)

176. மதியி னன்மிகு மரீசியே யாதியாய்
மன்னுயி ரனைத்திற்கும்
பதிக ளாகிய பதின்மரு முலகெலாம்
படைப்பதென் பணியாலே
திதிசெய் நாரணன் றேவியா கியதிரு
செல்வநல் குவதென்றன்
விதியி னலென்றன் பணியினாற் கலைமகள்
விமலவாக் களிக்கின்றாள். (15)

173. துஷ்ட பிசாசுகளுக்கும் எல்லாப் பூதங்களுக்கும் இவை ஒழிந்த பூதக் கூட்டங்களுக்கும் தலைவனாகிய ஈசான திக்கிலுள்ள ஈசானன் சதாகாலமும் சாதுக்களுக்கு சுகம் உண்டாகும்படி கொடுப்பதுவும் என்னுடைய ஏவுதலினாலேயே ஆம். ஏனையோர்க்கு சொல்ல வேண்டுவது என்ன இருக்கிறது! (12)

174. பக்தி பண்ணி அங்கிரா ரிஷியினுடைய திருவடியை நமஸ்கரிப்பவனாயும் ருத்திர கூட்டங்களில் உத்தமனாகியும், யோகிகளது துன்பங்களை நிவிர்த்தித்து வாழ்கின்றவருமாகிய வாமதேவரிஷியும் செவ்வையாக யான் ஆக்ஞாபித்த பணிவிடையினை செய்வார். (13)

175. நேர்மையான கருமங்களில் இருந்து நடத்தி வைப்பதும், பக்தி இல்லாதவர்கட்கு விநாயகக் கடவுள் விக்கினங்களை செய்வதும் பரமேசுவரனாகிய எனது ஆக்ஞையினாலேயாம். சிவந்த நிறமுடைய தேவர்களது சேனைகட்குத் தலைவனாயும், ஞானத்தினாலே பிரதானமாகவுள்ள ஷண்முகக் கடவுள் நான் ஆக்ஞாபித்த பணி விடைகளிலேயே முயற்சி செய்கின்றான். (14)

176. புத்தியில் சிரேஷ்டமுடைய மரீசி முதலிய நிலைபெற்ற பிரஜைகள் யாவருக்கும் தலைவர்களாகிய பத்து பெயர்களும் உலகங்களைச் சிருஷ்டிப்பது என்னுடைய ஆக்ஞையினாலேயே ஆகும். இரக்ஷித்தலை செய்கின்ற மகா விஷ்ணுவினது மனைவியாகிய மகாலக்ஷ்மி ஐஸ்வரியத்தைக் கொடுப்பதும் என்னுடைய ஆக்ஞையினாலேயாம். என்னுடைய ஆக்ஞையினால் சரசுவதி தேவியானவள் நின்மலமான வாக்கு சாதுரியத்தினைக் கொடுக்கின்றாள். (15)

(வேறு) (தானனு தனனு தானு)

177. வேமெரி நரகி னுள்ளே
வீழ்பவர் தம்மை யந்தத்
தீமையி னின்று சாவித்
திரியெடுப் பதுவு மென்னு
லோமெனும் பொருளே ஞாந
யோகியர்க் குமையாம் விஞ்சை
யாமக ளருளு மாறு
மலகிலென் னருளி னலே. (16)

(எழுசீர்விருத்தம்)

178. படவர வரசென் னேவலா லுலகம்
பரிப்பதும் பரவையு ணின்று
வடிவையுண் பதுமென் னேவலாற் பதினன்
மநுக்கள்பா லநமுமற் றென்னுற்
சுடருடை யருக்க ருருத்திரர் வசுக்க
டொன்மருத் துக்களச் சுநிக
டிடமுற மற்றுந் தேவர்க டத்தந்
தேவையென் னேவலாற் செய்வார். (17)

(கலிநிலைத்துறை)

179. பொருவில் கின்னரர் கருடர்கிம் புருடர்சா ரணர்கந்
தருவர் சாத்தியர் சித்தர்விச் சாதர ரியக்கர்
வெருவ வந்திடு மரக்கர்வே தாளபூ தங்க
ளொருவ ரிங்கொழி யாமஞன் விதித்தவா றுறைவார்.
(18)

177. அதி வெப்பத்தோடு கூடிய ஜ்வலிக்கின்ற ரௌரவாதி நரகத்தினுள் விழுபவர்களை அந்த துக்கத்திலிருந்தும் சாவித்திரி தேவியானவள் காப்பாற்றுவதும் எனது ஆக்ஞையினாலேயேயாம். ஞானயோகிகளுக்கு பிரணவ அக்ஷரத்தினை உமா தேவியாகிய வித்தியா தேவியானவள் அனுக்கிரகஞ் செய்வதுவும் அளவு கடந்த என்னுடைய ஆக்ஞையினாலேயேயாம். (16)

178. படத்தினை மேன்மையாக உடைய ஆதிசேஷனாகிய அரசன் உலகத்தை தாங்கி நிற்பதுவும் என்னுடைய ஆக்ஞை யினாலேயே ஆகும். வடவா முகாக்னியானது சமுத்திரத்திற்குள் இருந்து ஜலத்தினை வற்றச் செய்வதும் என்னுடைய ஆக்ஞையினாலேயே ஆகும். (ஒரு பிரம்மாவினது ஒரு நாளில் வந்து உலகத்தை அரசாக்ஷி செய்து போகின்ற) பதினான்கு மனுக்களது பரிபாலிப்பதுவும் என்னுடைய ஆக்ஞையினாலே யேயாம். கிரணங்களை உடைய பனிரெண்டு சூரியர்களும், ஏகாதச ருத்திரர்களும், அஷ்ட வசுக்களும், பழமையான வாயு தேவதைகளும், அஸ்வினி தேவர்களும் வலிமை பொருந்திய வேறு தேவதைகளும், தத்தமக்கு வேண்டிய தேவைகளை என்னுடைய ஆக்ஞையினாலேயே செய்வார்கள். (17)

179. சமானரகிதமான கின்னரர்கள், (பதினென் கணத்துளொருவராகிய) கருடர், கிம்புருஷர்கள், சாரணர்கள், கந்தருவர்கள், சாத்தியர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், இயக்ஷர்க்கள், பயப்படும்படி வருகின்ற இராக்கதர்கள், வேதாளங்கள், பூதங்கள் இவ்விடத்து ஒருவர் நீங்காமல் நான் ஆக்ஞாபித்த பிரகாரம் இருப்பார்கள். (18)

(எழுசீர் விருத்தம்)

180. நிகழ்ந்திடும் கலைகள் காட்டைக ணிமிட
நீதிசெய் சாந்திநாண் முகூர்த்தம்
பகர்ந்திடு மிருது வாண்டுமா தங்கள்
பக்கங்க ளென்விதிப் படியே
யுகங்களு மநுக்கட் குள்ளவெல் லேகளு
முரைத்திடு பராபரார்த் தங்க
ணிகழ்ந்திடுங் கால பேதமியா வையுநா
னியமித்த படியிலே நிலேயாம். (19)

(கலிசந்த விருத்தம்)

181. உற்பவச ராசரவி யோநியொரு நாலும்
பற்பலவ தாகமொழி பாதலம னைத்து
மெப்புவந முப்பிரம ரண்டமவை யாவு
மிப்படியி ருக்குமது வென்றனிய மத்தால். (20)

(எழுசீர் விருத்தம்)

182. அந்நிய மின்றி யென்னிலே தோன்று
மநந்தபிந் நாந்மக மாயென்
றன்னிடை நிகழும் பிரமரண் டங்க
டனக்கொரு முடிவுதா னிலதான்
முன்னிறந் தனவு முடிவிலே யென்பான்
முளைத்திடப் படுவதப் படியே
யென்னிய மத்தாற் தோற்றமு நிலேயு
மிறுதியும் பெறுவதிங் கெல்லாம். (21)

180. உண்டாகிய கலைகளும், காஷ்டைகளும், நிமிடங்களும், கிரமமாயுள்ள பகலும், பகலிரவாகிய ஒருநாளும், மூன்றேமுக்கால் நாழிகையுடைய ஓர் முகூர்த்தமும், பெயர்பெற்ற அறு ருதுக்களும், பிரபவ முதல் அக்ஷய பரியந்தமான அறுபது வருஷங்களும், சித்திரை முதல் பங்குனி பரியந்தமான பனிரெண்டு மாதங்களும், கிருஷ்ண பக்ஷம், சுக்கில பக்ஷங்களும் என் ஆக்ஞைப் பிரகாரமே நடக்கும். கிரேதாயுகம் முதலியவைகளும், மனுக்கட்கு உள்ளனவான அளவுகளும், சொல்லாநின்ற பிரமாவினது ஐம்பது வருஷமாகிய கர்ப்பமும் விளங்கிநின்ற கால வேற்றுமைகள் எல்லாம் என்னால் நியமித்த பிரகாரமே நிலையாக நடக்கும். (19)

181. உத்பவித்த சரவஸ்த்துக்களும், அசர வஸ்த்துக் களுமாகிய ஒப்பற்ற சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜ்ஜம் ஆகிய நான்கு யோனியும் அநேக பிரகாரமாகச் சொல்லப்பட்ட கீழ் ஏழ் உலகங்களும், மேல் ஏழுலகங்களும், பிரமாண்டங்களும் அவை அனைத்தும் என்னுடைய ஆக்ஞை யினால் நான் நியமித்த பிரகாரமேயிருக்கும். (20)

182. என்னில் வேறாகயில்லாமல் என்னிடத்திலே உண்டாகின்ற அனந்த வேறுபாடுடைய பிரமாண்டங்கள் என்னிடத்திலேயே விளங்கும். அவற்றிற்கு ஒரு முடிவும் இல்லாமையால் முன்னே நசித்தனவும் அளவில்லை, என்னிடத்து தோன்றப்படுவதும் அது போலவேயாகும். என்னுடைய நியமனத்தினால் இவ்விடத்து யாவும் உண்டா வதையும், ஸ்திதி பெற்று இருப்பதையும், அழிவதையும் அதுபோலவே அடைவதாம். (21)

(அறுசீர் விருத்தம்)

183. பூத மைந்தி ஞெடுமநமும்
புத்தி மமதை பூதாதி
யாதிப் பகுதி யென்னியமத்
தாலே யென்பா லாயிருக்கு
மோதி வந்த வனேத்திற்கு
மியோநி யாகியுளமாயை
பேதஞ் செய்வ தென்னேவ
லாலே யன்றிப் பிறிதில்லே. (22)

(நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா)

184. ஆகமெடுத் தவர்க்கெல்லா மதிபதியா மாந்மாவாம்
போகநுகர் பரம்புருட னென்னேவல் புரிகின்ருன்
மோகமெலா மறமாற்றி முடிவில்பர மாநந்த
ஏகளனேத் தரும் விஞ்சை யென்னருளா
லியங்குவாள். (23)

185. பலவுரை செய்குவதென் பலபர சத்தியிஞ
லுலகமெ லாமெனிலே யொழுகவெ னுள்ளொழியத்
துலகுப ரப்பிரம மாகிய சோதியதா
யிலகுவ ஞனெனில்வே றில்லேயோ ரந்நியமே. (24)

(கலிவிருத்தம்)

186. தொல்லே யுள்ளவென் சோதியைச் சுத்தமா
நல்ல வன்பொடு நானுமக் கோதினே
ளெல்லே யுண்மையு ணர்ந்தவர்க் குறபவ
மில்லே யில்லேயென் றிசனி யம்பிஞன். (25)

183. ஆகாசம், வாயு, தேயு, அப்பு, பிருத்வி எனப்பட்ட பஞ்ச பூதங்களோடு மனதும், புத்தியும், அகங்காரமும், பூதத்திற்கு ஆதியான மகத் தத்துவமும், இவைகட்கு முன்னருண்டான மாயப் பிரகிருதியும் என்னுடைய ஆக்ஞையினாலே என்னிடத்திலேயே இருக்கும். கூறி வந்த யாவற்றிற்கும் காரணமாயிருக்கப்பட்ட மாயையானது வேறுபடுத்துவது என்னுடைய ஆக்ஞையினாலே யல்லாமல், எனக்கு வேறாக இல்லை. (22)

184. சரீரம் உண்டான யாவருக்கும் தலைவனாகிய ஆத்மாவாக உள்ள போகங்களைப் புசிக்கின்ற மேலான புருஷன் எனது ஆக்ஞையினை செய்கின்றான். அஞ்ஞானம் யாவற்றையும் அத்தியந்தம் கெடுத்து, நித்தியமாயுள்ள பிரமானந்த அத்வைத ரூபனான என்னை உபதேசிக்கின்ற வித்தியா தேவியானவள் என்னுடைய கிருபையினால் விளங்கிக் கொண்டிருக்கின்றாள்.

(23)

185. அநேக பிரகாரமாக சொல்லப்படுவதால் யாது பிரயோஜனம். அநேக பராசக்தியினால் சகல ஜகத்தும் என்னிடத்திலேயே உண்டாகின்றன. விளங்கிய பரப்பிரம சொரூப மான பிரகாசமாய் நான் என்னிடத்திலேயே விளங்கிக் கொண்டிருப்பேன். என்னுள்ளேயே தவிர ஓர் அன்னியமும், விலக்ஷணமாக இல்லையாம். (24)

186. அநாதியாக உள்ள என்னுடைய பிரகாச சொரூபத்தை, பரிசுத்தமாக மிகுந்த பிரியத்தோடும் பரமேசுவரனாகிய யான் உங்களுக்கு உபதேசித்தேன். அநாதியான உண்மையினை அறிந்தவர்களுக்கு பிறப்பானது இல்லவே இல்லை என ஈசுவரன் ஸனகாதி ரிஷிகளுக்கு உபதேசித்தான். (25)

# ஏழாவது அத்தியாயம்

## தத்துவநிஜ விபூதி

(கலிவிருத்தம்)

187. அறிய மானதற் றறிகு வார்கள்பின்
செறியு முதவா திகமுந் தேவனுந்
தனிய னைவென் றன்மை யோதநான்
முனிவர் கேண்மெனு முதல்வ னேதுவான். (1)

(கலிப்பா)

188. சிரந்தந மாய்மிகத் திரமாய்ச் சிறசுகந்
தரந்தனு ருவாயவி கார மாய்ச்சதா
நிரந்தர மாகிநிட் களமாய் நித்தமாய்
பரம்பர மானதென் பழைய தாமமால். (2)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

189. சங்கரனு னுருத்திரரி லியோகிகளிற் சம்புநான்
பங்கமில்சீர் வசுக்கடமிற் பாவகனு கின்றேனுன்
மங்கையரின் மலைமகளுன் வலியவரில் வாயுவுநான்
சிங்கமிரு கங்களினுன் றினகரரில் விண்டுவுநான். (3)

# ஏழாவது அத்தியாயம்

## தத்துவநிஜ விபூதி

187. தனக்கு அந்நியமாக உள்ள வேறுபாடுகள் யாவும் நீங்கி அபேதமாய் உணர்ந்தவர்கள் மீண்டும் ஜனனத்தை அடையாதபடி, விளங்குகின்ற கடவுளாகியும் கேவல ஸ்வரூபமாக உள்ள என்னுடைய பெருமையை நான் சொல்ல ஸனகாதி ரிஷிகளே கேளுங்கள் என்று பரமேசுவரன் சொல்ல ஆரம்பித்தார். (1)

188. மிகப் பழமையாகி, நிலையாகி சித்சுகத்தை தருகின்ற தன்னுடைய சொரூபமாய் எப்பொழுதும் விகாரம் அற்றதாய், இடையீடின்றியதாய், களங்க மற்றதாய், நித்தியமாய் பரத்துக் கெல்லாம் பரமாயுள்ளது என்னுடைய பழைய ஸ்தானமாம். (2)

189. ஏகாதச ருத்திரர்களில் சங்கரனென்னும் உருத்திரன் நானாகின்றேன். யோகிகளிலே சம்பு நானாகின்றேன். குற்ற மின்றிய சிறப்புப் பொருந்திய அஷ்ட வசுக்களில் அக்னி என்னும் வசு நானாகின்றேன். ஸ்திரிகளில் இமய பர்வத ராஜன் புத்திரி நானாகின்றேன். பலாட்டியர் (வலியவர்)களில் வாயுவும் நானாகின்றேன். விலங்குகளிலே நான் சிங்கமாகின்றேன். பனிரெண்டு சூரியர்களில் ஒருவனான விஷ்ணுவும் நானாகின்றேன். (3)

190. இந்திரனு னிமையவரி லியக்கரில்வச் சிரவணநான்
சந்திரனுன் றுரகையில் விரதத்திற் சத்தியநா
னெந்திரத்தில் வில்லுநா னிலங்கியசா வித்திரியா
மந்திரநன் மந்திரத்தின் மாதவரில் வசிட்டநான். (4)

191. ஞாநமதி லென்னுடைய ஞாநநா னன்றுன
யானையயி ராவதாநா னுச்சிரமத் தில்லறநான்
கானமுறு பறவைகளிற் கருடனுன் பதியதனி
னீனமிலா முத்திநா னிராக்கதரி னிருதிநான். (5)

192. எண்ணுமதிற் காலநா னெல்லையிலா மாயைபல
பண்ணுமவர் களிலரிநான் பாசத்தின் மாயையுநான்
புண்ணியமாந் தீவுகளிற் புட்கரநான் பூதத்தில்
விண்ணுநான் றத்துவத்தின் மிருத்தியுமா கின்றேனுன்.
(6)

193. சித்தர்களிற் கபிலனுன் றேசங்க டனிற்பிரம
மத்தனு மீசர்களின் மகேசனுன் மறைகடமி
லுத்தமவோங் காரநா னூர்களில்வ ரணசிநான்
றத்துவஞா நிகடம்மிற் சதுர்முகனு கின்றேனுன். (7)

190. தேவர்களில் தேவேந்திரனும், இயக்ஷர்களில் வச்சிரவணனென்னும் இயக்ஷனும், நக்ஷத்திரங்களில் சந்திரனும், விரதங்களில் சத்தியவிரதமும், எந்திரங்களிலே வில்லாகிய எந்திரமும் நானாகின்றேன். மந்திரங்களில் விளங்கும் சாவித்திரியாகிய மந்திரமும், தவசிரேஷ்டர்களில் வசிட்டனும் நானே ஆகின்றேன். (4)

191. ஞானத்தில் என்னுடைய ஞானமும், சிரேஷ்டமான யானைகளிலே ஐராவதமாகிய யானையும், ஆசிரமங்களிலே இல்லற ஆசிரமும், காட்டில் பொருந்தியுள்ள பக்ஷிகளில் கருடப்பக்ஷியும், அடையத்தக்க கதிகளில் உயர்வு பொருந்திய மோக்ஷமும், இராக்ஷதர்களில் நிருதியும் நானாகின்றேன். (5)

192. எண்ணிக்கைகளிலே காலமாகிய எண்ணிக்கையும், நானாகின்றேன். அளவிட முடியாத பலவிதமான மாயை செய்பவர்களில் மாயாவியாகிய விஷ்ணுவும், பந்தத்தில் மாயையும் நானாகின்றேன். புண்ணிய தீவுகளில் புட்கரத் தீவும், பூதங்களிலே ஆகாய பூதமும், தத்துவங்களில் (இ)யம (மரண) தத்துவமும் நானாக இருக்கின்றேன். (6)

193. சித்தர்களிலே கபிலசித்தனும் தேசங்களிலே (இருதய வெளியாகிய) பிரமமும், சகலத்தையும் புசித்து இருப்போனாகிய ஈசுவரர்களில் மகேசுவரனும், வேதங்களில் உயர்வான ஓங்காரமும், ஊர்களிலே காசி க்ஷேத்திரமும், நானாகின்றேன். தத்துவ ஞானிகளிலே பிரம்மாவாகவும் நான் இருக்கின்றேன். (7)

(அறுசீர் விருத்தம்)

194. கர்ப்பங் களின்மா கர்ப்பநான்
கணேசர் களிலே விநாயகனுன்
சர்ப்பங் களிலே யநந்தனுன்
சாயம் பவுநான் மநுக்களிலே
வெற்புக் களின்மா மேருநான்
விசுவ கர்மா நானெனலாஞ்
சிற்பஞ் செய்ய வல்லவரிற்
சேநா பதிக ளிற்குகநான். (8)

(எழுசீர் சந்த விருத்தம்)

195. ஏவ லார்களிலி ராம னுனசுரர்
தங்க ளிற்பிரக லாதனுன்
மேவ லாரகல வெல்லும் வீரர்களில்
வேளும் விரபத் திரனுநான்
றுவில் சாமமறை தன்னி லத்தின்மிகு
சேட்ட சாமமது தானுநா
ேளவி லாதடைவி லேசு ழுன்றிடுமு
கங்க ளிற்கிருத யுகமுநான். (9)

(அறுசீர் விருத்தம்)

196. தக்க பிரசா பதிதம்மிற்
றக்க னுனெக் கணங்களினும்
விக்கி நவிநா யகனுன்றன்
வியாத னுன்மெய் முநிவர்களிற்
றெக்க சூத்தங் களிற்புருட
சூத்த மாவே னுன்சோதி
மிக்க விஞ்சை யாவையினுந்
தன்னே யறியும் விஞ்சைநான். (10)

194. சர்ப்பங்களிலே பெரியசர்ப்பமாக நான் இருக்கின்றேன். கணேசர்களில் விநாயகனுக நான் இருக்கின்றேன். சர்ப்பங்களில் அனந்த சர்ப்பமாக நான் இருக்கின்றேன். மனுக்களில் சுவாயம்பு மனுவாக நான் இருக்கின்றேன். பர்வதங்களில் மஹாமேரு பர்வதமாக நான் இருக்கின்றேன். சிற்பங்களை இயற்ற சாமர்த்திய முடையவரில் விசுவகர்மா நானே என்று சொல்லலாம். சேனைத் தலைவர்களில் சுப்பிரமணியனுக நான் இருக்கின்றேன். (8)

195. வில்வித்தையிற் சிறந்தவர்களில் ஸ்ரீ ராமன் நானுகின்றேன். அசுரர்களில் பிரகலாதன் நானுகின்றேன். பகைவர்கள் புறமுதுகு காட்டி ஓடும்படி ஜயமடைகின்ற வீரர்களில் சுப்பிரமணியரும், வீரபத்திரனும் நானுகின்றேன். அழிவு இல்லாத சாம வேதத்தில் அதில் மிகுந்த சிரேஷ்டமான சாம கானுனந்த அமுது நானுகின்றேன். இடையறுது கிரமமாக சுழன்று வருகின்ற நான்கு யுகங்களில் கிருதயுகமும் நானுக இருக்கின்றேன். (9)

196. தகுதியான பிரஜாபதிகளில் தக்ஷப் பிரஜாபதி நானுகின்றேன். எல்லாக்கணங்களிலும் விக்கின விநாயகன் நானுகின்றேன். உண்மையான முனிவர்களில் வியாஸ மகா முனிவன் நானுகின்றேன். தொகுதியான சூக்தங்களில் புருஷ சூக்தம் நானுக இருக்கின்றேன். பிரகாச மிகுந்த எல்லா வித்தையிலும் தன்னை (ஆத்மாவை) உணர்கின்ற வித்தையாக நான் இருக்கின்றேன். (10)

(எழுசீர் சந்த விருத்தம்)

197. ஒன்ன லர்த்தெறு மாயு தங்களி
லோங்கு வச்சிர மாவனுன்
பன்னு மெவ்வுல கங்க ளிற்பர
மேச ரிற்பர மேசனு
னின்னு மிங்குல கிற்சி றந்தன
யாவை மற்றவை யென்னதா
மன்னு சோதியில் வந்து தித்தன
வென்ன வேமநம் வைம்மினீர். (11)

(அறுசீர் விருத்தம்)

198. எந்தப் பிராணி களும்பசுக்க
ளென்னப் படுமிங் கதிபதியான்
பந்தப் படுக்கு மென்மாயா
பாச மதனுற் பசுபதியாய்த்
தொந்திப் பதுவீழ்ப் பதுவாமித்
தொழிலென் விளையாட்டெனையன்றி
யிந்தப் பசுக்கள் கட்டுனர்க
ளில்லை யவிழ்ப்பார் களுமிலதால். (12)

(கலிப்பா)

199. ஊறதாம் போகமே யூட்டி விட்டிடப்
பேறதா யுயிர்களைப் பிணித்த மாயைதன்
கூறதாங் கணங்களாற் கூறப் பட்டநா
லாறதாம் பாசம தறியக் கூறுவாம். (13)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

200. மறம்புத்தி மமத்துவம்வான் வளிதீநீர் மண்ணெட்டு
முனையுற்ற பகுதிகளா மூக்குவிழி செவிநாமெய்
பனவுற்ற வாய்கைகால் பாயுருபத் தஞ்சத்தந்
தனுவுற்ற வுருச்சுவைநாற் றங்களெனுந் தத்துவமும்.
(14)

197. பகைவர்களை வெல்லுகின்ற ஆயுதங்களிலே சிரேஷ்டமான வச்சிராயுதம் நானாக இருக்கின்றேன். எல்லா உலகங்களிலும் வழங்கும் பரமேசுவரர்களில் பரமேசுவரன் நானாகின்றேன். இந்த லோகத்தில் மேலும் சிறப்புப் பொருந்தியுள்ளன எவையோ அவைகள் என்னுடையதாகிய நிலைபெற்ற பிரகாச சொரூபத்தில் தோன்றி உண்டாயின என்று, ஸனகாதி ரிஷிகளே! திடமாக நீங்கள் மனதின்கண் அறிவீர்களாக. (ஒன்னலர்=பகைவர்) (11)

198. எல்லாப் பிராணிகளும் பசுக்கள் என்று சொல்லப்பட்டு இவர்களுக்குத் தலைவன் நான். பந்தத்தினை உண்டாக்கும் என்னுடைய மாயையாகிய பாசத்தினால் பேத உணர்வு உண்டாக்கி பசுபதியாக பந்தப் படுத்துவதும், பின்னர் பந்தத்தினின்று விடுபடச் செய்வதுமான இந்த கிருத்தியம் என்னுடைய லீலையாகும். என்னைத்தவிர இந்தப் பசுக்களை பந்தப்படுத்துபவர்களும் இல்லை, விடுவிப்பவர்களும் இல்லை. (12)

199. நிக்கிருஷ்டமான போகங்களை கிரமமாகப் புசிக்கும்படி செய்யும் பிரயோஜனமாகி, ஜீவர்களை பந்தித்த மாயையின் பாகுபாடாகிய கூட்டங்களினால் சொல்லப்பட்ட இருபத்து நான்காகிய பாசத்தினை உங்களுக்கு தெரியும்படியாகச் சொல்லுவோம். (13)

200. மனமும், புத்தியும், என்னுடையதெனுமகங்காரமும், ஆகாயமும், வாயுவும், அக்னியும், அப்புவும், பிருதிவியும் ஆகிய எட்டும் முன்னர் பொருந்திய பிரகிருதிகள் ஆகும். மூக்கிந்திரயமும், கண்ணிந்திரியமும், காதிந்திரியமும், நாக்கிந்திரியமும், துவக்கிந்திரியமும், சொல்லிய வாக்கும், பாணியும், பாதமும், பாயுருவும், உபஸ்த்தமும்; (தன் மாத்திரைகளாம்) சத்தமும், பரிசமும், ரூபமும், ரசமும், கந்தமும், என்று மேற் சொல்லப்பட்ட இருபத்துமூன்று தத்துவமும், (குளகம்) (14)

201. ஆகவிவை யிருபத்து மூன்றிவற்றுக் காதிதா
ஞகியநா தியதாகி யகிலத்தின் காரணமாய்
மோகசமு சயகுணமாய் முதற்பகுதி தெரியாமை
யேகமுமாந் தத்துவங்க ளிருபதுட னீரிரண்டாம். (15)

(கலிப்பா)

202. ஒத்தமுக் குணங்களாம் பகுதி யுத்தமஞ்
சத்துவ ஞாநமாந் தமமஞ் ஞாநமா
மத்திமங் கலப்பதா மற்றிம் மூன்றையும்
புத்தியின் விகாரமே புலப்ப டுத்துமால். (16)

(கலிவிருத்தம்)

203. தரும பாவமி ரண்டுள தப்புதற்
கருமை யாகிய பாசம தாகிலு
மிருமை யாதர வின்றியெ னக்குநேர்
கரும முத்தியின் காரண மாகுமார். (17)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

204. அறியாமை காமம்வெறுப் பாமாசை யகஞ்செறிதற்
பொறியாகப் புகுந்தொருவர் போக்கரிய பாசமிவை
முறியாத வினைத்தளையான் முடிச்சிட்டே யென்மாயை
பிறியாதென் பாலுளதாம் பிறவிகளுக் கடியாக. (18)

(கலிப்பா)

205. பின்னிய பகுதியாம் பிரதாந மாயையு
மன்னிய புருடனு மானு மாதியாய்த்
துன்னிய விகாரமுந் தொல்லை யீசனி
லன்னிய மின்மையா லவனே யாகுமால். (19)

201. (குளகம்) முன்னர் கூறிய அஷ்டப்பிரகிருதிகள் ஞானேந்திரிய கர்மேந்திரிய பஞ்சதன்மாத்திரை ஆகிய இருபத்து மூன்றும், இவைகளுக்கு முதன்மையாய் அநாதியாக உள்ள எல்லா வற்றிற்கும் ஏதுவாய் மோகமும் சமுசயமுமாகிய குணமுடையதாய் மூல பிரகிருதியாம் அவ்வியத்தமும் சேர்த்து தத்துவங்கள் இருபத்து நான்காகும். (15)

202. முக்குணங்களையும் சமமாகப் பொருந்தி உள்ளது பிரகிருதியாம். அதனது சுத்த சத்துவகுணமானது ஞானமாம், தமோ குணமானது அஞ்ஞானமாம், இரஜோகுணமானது சத்துவம் தமம் ஆகிய இரண்டினையும் சேர்ந்து இருக்கும். இம்மூன்று குணங்களையும் புத்தியினுடைய விகாரமே தோற்றுவிக்கும். (16)

203. புண்ணியபாவமாகிய இரண்டு இருக்கின்றன. ஜென்மத்தினின்றும் மீளுதற்கு அருமையாயுள்ள பந்தமது ஆகும். ஆனாலும் பாவபுண்ணியம் இரண்டினிடத்தும் விருப்பு இன்றி பரமேசுவரனாகிய எனக்கு சாக்ஷாத் நிஷ்காமியமாகச் செய்யும் கருமம் மோக்ஷத்திற்கு ஏதுவாகும். (17)

204. அவித்தை, அஸ்மிதை, துவேஷம், இராகம், அபிநிவேசம் ஆகிய இவ்வைந்தும் இந்திரியங்களின் வழித்தாகச் சென்று, ஒருவராலும் போக்கமுடியாத பாசமாம். இந்தப்பாசங்களை நாசமாகாத புண்ணியபாவரூப வினைகளாகிய தளையினால் முடிச்சுப்போட்டு என்னுடைய மாயையானது ஜென்மத்திற்கு ஏதுவாக என்னிடத்திலேயே நீங்காது இருக்கின்றது. (18)

205. ஒன்றோடொன்று முடிச்சாக உள்ள பிரகிருதியாகி முதன்மையான மாயையும், அதில் பொருந்திய புருஷனும், மகத் தத்துவம் முதலாகவும் நின்ற பதினாறு விகாரங்களும் அநாதியான ஈசுவரனில் வேறாகாமையினால் யாவும் அந்தப் பரமேசுவரனேயாகும். (19)

(அறுசீர் விருத்தம்)

206. அவனே பாச மவனேகட்டுண்
டவனே கட்டு மதிபதியு
மவனே பசுக்க ளாகின்ற
னனைத்து மாகி யுள்ளானு
மவனே யவனை யொருவர்களு
மறிவா ரில்லை யனைத்திற்கு
மவனே யநாதி புருடனென
வவனை யறிவா ரறைகுவரால். (20)

206. அவனே பாசமாகவும், அவனே கட்டப்பட்டு, அவனே கட்டுகின்ற அதிபதியுமாகும். அவனே ஜீவர்களு மாகவும் இருக்கின்றன். அவனே எல்லாமும் ஆகி இருப்பவனும் ஆகும். அந்த பரமசிவனை உணர்பவர் ஒருவரும் இல்லை. அவனை உணர்ந்தவர்கள் சகலபிரபஞ்சத்திற்கும் அந்த ஈசனே அநாதி புருஷன் என்று சொல்லுவார்கள். (20)

# எட்டாவது அத்தியாயம்

## பிரபஞ்ச சர்வ காரண புராண புருஷப் பிரதிபாதநம்

(கலிப்பா)

207. வருந்தியு மறைகளீ றறியு மன்னுயி
ரிரும்பவக் கடல்கடந் தேற வுய்ப்பதாந்
திருந்திய வுணர்வது செப்ப வின்னமு
மருந்தவர் கேண்மினென் றருளிச் செய்குவான். (1)

(வடமொழி கூர்மபுராணம் 2.8.1)

(எழுசீர்விருத்தம்)

208. பகருபர மீசன் வெறுமொருவ னீறில்
பரமனெனு மாதி பகவனை
னிகரிலழி யாத பிரமமய மாகி
நிமலநிலை யேயெ னெழிவுறக்
ககநவடி வான பிரமமெனி லியோநி
கருவையுற மேவி விடுவனை
னகிலசக மாக வறிவருமென் மாயை
யெனைவிதய னுகி யமருமால். (2)

(2.8.2-3)

## எட்டாவது அத்தியாயம்

# பிரபஞ்ச சர்வகாரண புராணபுருஷப் பிரதிபாதநம்[1]

207. வேதத்தின் அந்தங்களை (கிருச்சிர சாந்தராயணுதி தவத்தினுலேயும் பின், சிரவண மனனுதி செய்து) வருத்தமுற்று உணர்கின்ற, "இருப்பு" நிலைபெற்ற ஜீவர்கள் பெரிய ஜனன சமுத்திரத்தை தாண்டிச்செல்ல ஓடமாகிற நேர்மையான ஞானத்தினை மேலும் நான் உங்களுக்குச் சொல்ல, அரிய தவத்தினை உடைய ஸனகாதி ரிஷிகளே! கேட்பீர்கள் என்று சொல்ல ஆரம்பித்தார். (1)

208. உரைத்த பரமேசுவரனுயும், கேவலனுகியும், ஏகனுகியும், அழியாத பரமன் ஆகியும் உள்ள ஆதி பகவான் நானுகின்றேன். சமான ரகிதமான நித்தியமாயுள்ள பிரம சொரூபமாய் நின்ற, நின்மலமான தன்மையே எனது இடையறுத சிதாகாய ரூபமான பிரமமாம். என்னிடத்தில் உள்ள யோனியாம் (மாயையானது) கர்ப்பத்தை பொருந்தி அகில பிரபஞ்சமாக உண்டாக்கப் பண்ணிவிடுவேன். அறியமுடியாத என்னுடைய மாயையானது என்னை இருதயனுகப் பொருந்தி இருக்கும்.[2] (2)

---

[1] பிரதிபாதனம் = விளக்கம்

[2] "என் மாயையானது இருதய மன்றாக (பீடமாக) அமைய, அவிடம் அசலமா நடமிடும் அருணமலையெனும் எல்லை அறும் அருள் ஒளிக்கடலே யாம்!" (அருணுசல அஷ்டகம், 7).

(அறுசீர்விருத்தம்)

209. சென்மா தியதாம் பகுதிபுமான்
சிறந்த மான்பூ தாதிமநம்
தன்மாத் திரைகள் பூதங்க
ளிந்தி யங்கள் சமைத்ததனுற்
பொன்மா லிரவி பலகோடி
போலு மண்டம் போதாவே
டென்மா சத்தி யெல்லையிலா
வுயிரு முளதா யிழைத்திடுமால். (3)
(2.8.4-5)

(நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா)

210. எந்தயோ நியிற்பிறப்பா ரியார்க்குந்தா யென்மாயை
தந்தையா னெனவறிவார் சநநவினை தப்புவரா
லெந்தையா யெனையறியா திருப்பவரென் மாயையினுற்
பந்தமா மியோநிதொறுற் பவித்திறந்து பதைப்பர்களால். (4)
(2.8.6-8)

211. பாங்காய விச்சைகட்கும் பகர்பூத மனைத்தினுக்கு
மீங்காரு மிலரிறைவ ரென்னையலா லியானேயா
நீங்காத வதிபதியாய் நின்றுலகம் படைக்கின்ற
வோங்கார வுருவான பிரமமென வுள்ளேனும். (5)
(2.8.9)

209. உற்பத்தியை முதன்மையாகவுடைய பிரகிருதியும், புருஷனும், சிறப்பினையுடைய மகத் (அகங்கார) தத்துவமும், பஞ்ச சூக்கும பூதங்களும், மனமும், பஞ்சதன்மாத்திரைகளும், பஞ்சதூல பூதங்களும், ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களும், ஆகிய (இருபத்தைந்து) தத்துவங்களும் உண்டாக்கிய தன்மையினால் அநேக கோடி பொன்பொருந்திய சூரியர்களைப் போலும் பிரமாண்டத்தை பிரமாவுடன் என்னுடைய மாயாசக்தியானது அளவில்லாத பிரஜைகளும் பொருந்தியிருப்பதாய் சிருஷ்டி செய்யும். (3)

210. நால்வகை யோனி, எழுவகைத் தோற்றமாயுள்ளவை களில் ஜனிப்பவர்களாகிய எல்லா ஜீவர்கட்கும் என்னுடைய சக்தியானது மாதாவாகும், பரமேஜவரனாகிய நான் பிதாவாகும் என்று உணருமவர்கள் புண்ணிய பாவங்களால் வரப்பட்ட பிறவியினின்றும் மீளுவர். பரமேசுவரனாகிய என்னை தந்தையாக உணராதிருப்பவர்கள் என்னுடைய மாயா சக்தியினால் பாசமாகிய சராயுஜம், சுவேதஜம், அண்டஜம், உத்பிஜம் ஆகிய நால்வகை யோனிகள் தோறும் பிறந்து மரித்து துன்பத்தை அடைவார்கள். (4)

211. உயர்வு பொருந்திய வித்தைகளுக்கும், சொல்லா நின்ற பூதங்கள் எல்லாவற்றிற்கும், இவ்விடத்து என்னைத் தவிர்த்து ஒருவரும் தலைவர் இல்லை. நானே எல்லாவற்றிற்கும் தலைவனா கின்றேன். இவைகளை விட்டு நீங்காத தலைவனாக இருந்து பிரபஞ்சத்தைச் சிருஷ்டி செய்கின்ற பிரணவ சொரூபமான பிரமமாக இருப்பவனும் நானாகின்றேன். (5)

212. பொன்றுகின்ற பொருள்கடோறும் பொன்றுதே
புரையறநான்
நின்றதறிந் தவனென்னை நேராக வறிகின்று
னன்றியுமிங் கவன்றன்னைத் தன்னுலே யறிந்தழியா
தென்றுமுள பரமபத வின்பமடைந் திடுகின்றுன். (6)
(2.8.10-11)

213. சங்கையறத் தத்துவங்க டன்னுடைய நுண்மையுமென்
னங்கமென மொழிகின்ற வாறினையு மகிலத்தின்
பங்கமறு பகுதியுமப் பகுதிவிநி யோகமுமென்
றிங்கெனது நிலையறிந்தா னென்னையடைந்
திடுகின்றுன். (7)
(2.8.12)

(கலிப்பா)

214. இறைவனுக் கநாதியா யிலங்கு போதமு
மறிவது முழுதையு மநந்த சத்தியு
நிறைவொடு சுதந்தர நித்த சத்தியென்
றறைவர்க ளறிபவ ராறு மங்கமாய். (8)
(2.8.13)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

215. நுண்ணியதத் துவங்களென நுகல்வனதா நுகர்சீவன்
வண்ணமிலா மநமொடுதன் மாத்திரைகண் மற்றெதுக்கு
மெண்ணுவதா மிவையடியா மியாதினுக்குங் காரணமாய்ப்
பண்ணுவது பகுதியதன் விநியோகம் பந்தமதாம்.
(9)
(2.8.14)

212. நாசத்தை அடைகின்ற வஸ்துக்கள் தோறும் நித்தியமாய் குற்றமின்றி பரமேசுவரனுகிய நான் பொருந்தியிருப்பதை உணர்ந்தவன் என்னே சாக்ஷாத்தாக உணர்ந்தவனு கின்றுன். அல்லாமலும் இவ்விடத்து ஜீவனுகிய தன்னுலே கூடஸ்தனுகிய தன்னே (விசாரித்து) உணர்ந்த புருஷன் எப்பொழுதும் நித்தியமாயுள்ள பிரமானந்தத்தினே அனுபவிக்கின்றுன். (6)

213. சமுசயமின்றி தத்துவங்களுடைய (கீழ்காணும்) ஏழு சூக்ஷுமங்களேயும், என்னுடைய அங்கமாகச் சொல்லுகின்ற ஆறையும், ஜகத்தினிடத்து பொருந்திய ஞானத்தாலன்றி நாசமாகாத பிரகிருதியும், அந்தப் பிரகிருதியின் விநியோகமும் ஆக இவ்விடத்து என்னுடைய தன்மையை உணர்ந்தவன் பரமேசுவரனுகிய என்னே அடைந்தவனுகின்றுன். (7)

214. பரமேசுவரனுக்கு விளங்குகின்ற அனுதி ஞானமும், சர்வக்ஞத் தன்மையும், சர்வ சக்தித்துவமும், திருப்தியும், சர்வ சுதந்திரத்துவமும், நித்திய சக்தியும் என ஆறையும், உணர்ந்தவர்கள் (இவற்றை) பரமேசுவரனது அங்கமாக சொல்லுவார்கள். (8)

215. ஏழு சூக்ஷுமதத்துவங்களென்று சொல்லப்படுவன: கருமாதீனமாக போகங்களே அனுபவிக்கின்ற ஜீவனும்; இவ் வண்ணம் என்று சொல்ல முடியாத மனமும், பஞ்ச தன்மாத்திரைகளுமாம், கருதுவனவாகிய எல்லாவற்றிற்கும் இவை காரணமாம். எல்லாவற்றிற்கும் ஏதுவாகச் செய்வது பிரகிருதியாம். அந்தப் பிரகிருதியின் செயற்பாடு பந்தமாகும்.

(9)

(எழுசீர்விருத்தம்) (தானன தான தானன தான
தானன தானன தான)

216. ஆரண மந்த வுண்மையிற் கரப்ப
தாகுமென் றறைந்திடப் பட்ட
வோரண வின்றி யுள்ளவெப் பொருட்கு
மியோநியா தொன்றதிவ் வுலகின்
காரண மந்தப் பகுதியி லதனைக்
கடந்துமே லாகுமொ ன்றுன
பூரண மான மகேசனென் றுரைக்கும்
பொய்மைதீர் பரமனும் புருடன். (10)
(2.8.15)

(வேறு) (தானதானதன தானதானதன
தானதானதன தானன)

217. மோக மாமுலக மற்றி னுக்குமொரு
மூல மானதெரி யாமையும்
போகு மாசெயும்வி ருத்தி யும்பொருள
னைத்தை யுந்தருபு ராணன
யேக னுகியிறை யாகி வாறமென
வெங்கு முள்ளபர மீசன
மியோகி யாயுளவொ ருத்த னேயெனவொ
ருக்கி மாமறையு ரைக்குமால். (11)
(2.8.16)

(கலிவிருத்தம்)

218. பாக மென்பர்ப குதிப்ப ரமனே
டேக மென்பர் சிலரணு வுக்கணு
வாகி மற்றது மப்படி யாமென்பர்
யோகி யுள்ளதெ லாமென்ப துண்மையாம். (12)
(2.8.17)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

219. என்னையுற நினைப்பவரி லெங்கேனு மொருவனவன்
றன்மதியைக் கடந்தருளாற் றன்னிதயக் குகைதன்னிற்
பொன்மயனைப் புராணமாம் புருடனைப் பொருந்துமெனி
லந்நியம தறவறிவா னவன்பரமத் திடையடைவான்.
(13)
(2.8.18)

216. வேதமானது அந்த சத்தியத்தில் லயப்பட்டிருப்ப தாகும் என்று சொல்லப்பட்ட சம்பந்தமின்றி உள்ள எல்லா வஸ்துக்களுக்கும் கருவாக உள்ளது யாதோ, அது இவ்வுலகிற்கு முதன்மையாம். அந்தப் பிரகிருதியினிடத்தில் அதை தாண்டி மேலாய் உயர்வான பூரணம் ஆகிய மகேசுவரன் என்று சொல்லுகின்ற நித்தியமாயுள்ள பிரமமாகிய புருஷன் ஒருவனுளன். (10)

217. மயக்கமாகிய சகல உலகங்கட்கும் ஒப்பற்ற காரணமான அவ்வியத்தமும் நிவர்த்தியாகும்படி செய்கின்ற அகண்ட பிரம்மாகார விருத்தியும், சகல வஸ்துக்களேயும் உண்டாக்கின்ற பழையோனுகியும், அத்வைத ரூபனுகியும், தலேவனுகியும் ஆகாயம் போல எவ்விடங்களிலும் வியாபகமாய் உள்ள பிரமமாகிய ஈசுவரனுகியும், யோகியாக ஒருவனே உள்ளவனுகும் என்று பெருமை பொருந்திய வேதங்கள் நிச்சயமாகச் சொல்லும். (11)

218. பிரகிருதி பிரமத்தோடு பின்னம் என்று சொல்லுவார்கள். சிலபேர் பிரமத்தோடு அபேதம் என்று சொல்லுவார்கள். அணுவுக்கு அணுவாய் அந்தப் பிரகாரம் மகத்துக்கு மகத்தும் ஆகியிருக்கின்றது என்று சொல்லுவார்கள். (வேறுபாடுடன்) தோன்றும் இங்குள்ள அனேத்துமே யோகியான அவ்வொருவனே என்று சொல்லுவது சத்தியமாம். (12)

219. பரமேசுவரனுகிய என்னே அடைய விருப்பமுள்ள வர்களில் எவ்விடத்தாயினும் ஒரு புருஷன் தன்னுடைய புத்தியைத் தாண்டி எனது கிருபையினுல் தன்னுடைய இருதயமாகிய குகையில் இரண்ணியகர்ப்பனுய் பழமையான புருஷனுய் இருக்கின்ற என்னிடத்தில் வேறுபாடு இன்றி உணருமவன் யாவனே அந்த புருஷன் பிரமத்தினே அடைந்தவனுகின்றன். (13)

# ஒன்பதாவது அத்தியாயம்

## மாயாவிகாரம்

(நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா)

220. நின்மலமா யவிகாரி வேறுபடா நிட்களனாய்ச்
சின்மயனாய் நித்தனுஞ் சிவனேநீ செகத்தான
தன்மையினை யருளென்னத் தபோதநரோர்
தனையொழிய
வின்மையினா னப்பரிசை யின்னமவர்க்
கெடுத்துரைப்பான். (1)
(வடமொழி கூர்மபுராணம் 2.9.1)

221. என்னொழிய வில்லைசக மியானவ்வு ருவல்லே
னுன்னிலொரு மாயையுல குக்குமுத லாகு
ஞன்னுருவ மானவெனை யன்றியது நாளுந்
தன்னியல்பி னனிகழ்வு றத்தகுவ தன்றால். (2)
(2.9.2)

(அறுசீர் விருத்தம்)

222. யாதொன் றெருவ ராலேனு மறியப் படாத
வியல்பாமென்
னுதி முடிவின் றியசத்தி யந்த மாயை யதனாலே
பேத வுலக முண்டாகிப் பிறங்கு மதனாற்
பிறர்க்கென்றும்
போதப் படாத வென்னலா யுள்ள பொருளிப்
பொருளெல்லாம். (3)
(2.9.3)

## ஒன்பதாவது அத்தியாயம்

# மாயாவிகாரம்

220. மலமற்றதாய், நிர்விகாரியாய், பின்னமின்றிய களங்க மற்றவனுய், சித்ரூபனுய், நித்தியனுயுள்ள பரமசிவனே! தேவரீர் பிரபஞ்சரூபமான காரணத்தை எங்களுக்கு திருவாய் மலர்ந்தருளுவீர் என்று விண்ணப்பஞ் செய்ய, ஒப்பற்ற தன்னே அல்லாமல் அன்னியமாக (ஜகத் என்று ஒன்றும்) இல்லாத தன்மையுடையவனுன பரமேசுவரன் அந்தத் தன்மையினே மீண்டும் ஸனகாதி ரிஷிகளுக்கு சொல்லலாயினுர். (1)

221. என்னேத் தவிர பிரபஞ்சம் இல்லே. நான் அந்தப் பிரபஞ்ச ரூபம் அல்லன். விசாரிக்கில், ஒப்பற்ற மாயை பிரபஞ்சத்திற்கு காரணமாகும். ஞான ரூபமாயுள்ள என்னே அல்லாமல் அந்த மாயையானது எப்பொழுதும் தானே தன்னுடைய சுதந்தரமாக விளங்குவது அன்று. (2)

222. எந்த வஸ்துவானது ஒருவராலும் உணரமுடியாத தன்மையனவாக இருக்கின்றனவோ அது எனது உற்பத்தி நாசம் இல்லாத சக்தியாம். அந்த மாயாசக்தியினுலே நாநா கூறுபாடுடைய பிரபஞ்சம் உற்பத்தியாகி விளங்குகின்றது. அந்த தன்மையினுல் அன்னியருக்கு எப்பொழுதும் உணர முடியாத இந்த வஸ்துக்கள் யாவும் என்னுலே உண்டாக்கப்பட்ட வஸ்துக்களாம். (3)

(வேறு)

223. சோதியா நந்த மாகுந் தோன்றிடா வேறே தொல்லை
யாதிகா ரணமா மென்றே யறைவர்க ளறிய வொன்றுய்
நீதியாய்ப் பரமா நந்த நிமலமாம் பிரம நானே
பேதியா வென்னில் வேறுண்டாவது
பிறிதொன்றில்லை. (4)
(2.9.4)

(கலிவிருத்தம்)

224. அன்றி யின்மைய றிந்தவ ராதலா
லென்று மிச்சகந் தானது மியானென
வொன்று மாகியு லப்பில னைத்துமாய்
நிற்றல் கண்டிவர் நிச்சயித் தார்களால். (5)

225. சிந்ம யாநந்த மாய்த்திகழ் கின்றதோர்
தன்மை யாய்ப்பர மாகிய சாந்தமாய்த்
தொன்மை யானசு டரால்வி காரமொன்
றின்மை யாமெனக் கேதமொன் றில்லையால். (6)

(எழுசீர் சந்தவிருத்தம்)

226. எனந்த மற்ற வேக மேனி யெண்ணில் பேத மாக்கவற்
றநந்த சத்தி யென்னி லேய வற்றின் மாயை யாதியா
வனந்த வந்த மாயை யான வாறி லேம நத்தினு
னினைந்தி டப்ப டாத வவ்வி யத்த மாகி நிற்பனுன். (7)
(2.9.7)

(அறுசீர் விருத்தம்)

227. சத்தியொன் றலே யாளுந் தக்கசா யுச்ச மான
முத்தியுண் டாகு மொன்றன் முழுதுசெல் வமுமுண் டாகுஞ்
சித்தியா நிற்ப தெல்லாஞ் சிதையுமொன் றலே யெல்லா
நித்திய மாக வென்ற னியமத்தா னிகழு மன்றே. (8)

223. பிரகாச ரூபமான ஆனந்த சொரூபமே அன்னியமாக ஒன்றும் காணமாட்டாது முதன்மையான உற்பத்திக்கு ஏதுவாம் என்று கூறுவார்கள். உணர்வுள்ளவர்களுக்கு அத்வைத ரூபமாய் நியதியாக உள்ள மேலான ஆனந்தமாய் நிர்மலமான பிரமம் நானுகின்றேன். அபேதமாயுள்ள என்னிடத்தில் அன்னியமாக உற்பத்தியாவது வேறே ஒன்றும் இல்லையாம். (4)

224. பரமேசுவரனுகிய என்னை அன்றி வேறே இல்லாமையை உணர்ந்தவர்கள், ஆனடியினுல் எப்பொழுதும் இந்தப் பிரபஞ்ச ரூபமாயிருப்பதுவும் யானே எனவும், ஏகமாகியும் நாசமில்லாத சர்வான்மகமாயும் இருத்தலைப் பார்த்து இந்த ரிஷிகள் நிச்சயம் செய்தார்கள். (5)

225. சித்ரூப ஆனந்தமாய் விளங்குகின்ற ஒரே தன்மையனவாக மேலாகிய சாந்தமாய் அநாதியாயுள்ள ஞானப் பிரகாசத்தினுல், ஒரு விகாரமும் இல்லாதவனுகிய எனக்கு ஒரு தோஷமும் இல்லை. (6)

226. என்னுடைய நித்தியமாயுள்ள ஏக சரீரத்தில் அளவில்லாத நாநா கூறுபாடாகப் பிரிந்து என்னிடத்தில் அநேக சக்திகள் பொருந்த, அந்த சக்திகளில் ஆதியாக வுள்ளது மாயையாம். அந்த மாயையான ஆகாயத்திலே மனதினுல் கருத முடியாத அவ்வியத்த ரூபமாகி நான் இருப்பேன். (7)

227. ஒரு சக்தியினுலே எனது சொரூபமாகிய தகுந்த சாயுஜ்யமான மோக்ஷமுண்டாகும். மற்றொரு சக்தியினுல் எல்லா ஐசுவரியங்களும் உண்டாகும். வேறொரு சக்தியினுல் எல்லாம் கிடைப்பதாகும். கிடைத்த யாவும் வேறொரு சக்தியினுல் நாசத்தை யடையும். என்னுடைய ஆக்ஞையினுலேயே சகல வஸ்த்துக்களும் நியமமாக உண்டாகும். (8)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

228. மத்தியமாய்ப் பரஞ்சுடரா மண்டலத்தான் மண்டிதமா
யத்தகுமக் கரமாகி யறிவரிதா மநாதியாம்
வித்தகமாம் விட்டுவின்மெய்ப் பரமபதம்
விச்சையெனுஞ்
சத்தியினு னிகழுமிது தக்கோர்க ளறிவர்களால். (9)
(2.9.10)

(அறுசீர்விருத்தம்)

229. உடுக்கு மாடை யினைப்போல
வுலக மியாதொன் றிற்குருக்கு
நெடுக்கு மாகு நிகிலமுமாய்
நினைத்தற் கரிதா மியாதொன்றின்
மடக்கும் வாக்கு மநஞ்செல்ல
மாட்டா மையினுற் பவக்கடலைக்
கடக்கும் பிரம வாநந்தங்
கண்டா னடுக்கங் காணுனல். (10)
(2.9.11-12)

230. ஈநஞ் செய்யு மஞ்ஞாந
விருளைக் கடந்து மேலான
பாநந் தனக்கே யுளதான
பரம வொளியாம் பரம்பரனை
ஞாநந் தன்னுல் வேறறவே
நானென் றறிந்த நல்லோனவ்
வாநந் தமதாம் பிரமமய
மாகி வீடே யடைகின்றுன். (11)
(2.9.13)

228. ஆதி அந்த ரகிதமாய், (இது அது எனுதபடி) மத்தியமாய், மேலான பிரகாசம் என்னும் அவ்வியக்த பூமியாகிய மண்டலத்தினுல் அலங்கரிக்கப்பட்டதாயுள்ள, அந்த தகுதியான அழியாத (பரை எனும் பிரணவ ரூபமாய்) உணர முடியாததாயுள்ள, முதன்மையான ஞானமாகிய விஷ்ணுவின் உண்மையான பரமபதம், வித்தை என்கின்ற எனது சக்தியினுலே உண்டாகும். இதனை பெரியோர்கள் உணருவார்கள். (9)

229. கட்டிக் கொள்ளுகின்ற வஸ்த்திரத்தில் நூல் குறுக்கு நெடுக்குமாயுள்ளது போல இந்தப் பிரபஞ்சமானது எந்தப் பிரமத்தில் ஓதப்புரோத (நெசவின் இழைகள்) பாவமாக இருக்கின்றதோ, அது சகல வஸ்த்துக்களாய் மனதினுல் நினைக்க முடியாதனவாக உள்ளது. எந்த பிரம வஸ்துவினிடத்தில் நிர்ணயமே தொழிலாகவுள்ள வாக்கும் மனமும் போய் அடையாமல் மீண்டும் திரும்புகின்றனவோ, ஜனனமாகிய சமுத்திரத்தினை கடக்கின்ற அந்த பிரமானந்தத்தினை அடைந்தவன் மீண்டும் ஜென்மத்திற்கு பீதியடையான். (10)

230. அதி இழிவதைத் தருகின்ற அஞ்ஞான அந்தகாரத்தை தாண்டி, கூடஸ்தனுகிய தனக்கே, உயர்வான விளக்குந் தன்மை உடையதான பிரமப் பிரகாசமாம், பரத்துக்கெல்லாம் பரமாயுள்ளவனை, ஆத்ம ஞானத்தினுல் அபேதமாக அஹம் என்று உணர்ந்த மகான், அந்த பிரமானந்தமாகிய பிரம சொரூபமாகி, மோக்ஷத்தினையே அடைகின்றுன். (11)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

231. ஒப்பதுமிக் கதுகுறைந்த வொன்றுதனை யொழித்தில்லா
தெப்பொருளெவ் வொளிகட்கு மெவ்வொளிதா
ளொளியாகுஞ்
சிற்பரமா காயத்தே திகழ்கின்ற வதுதெளிந்த
வப்பெரியோ ளுநந்த மாய்ப்பிரம மாகின்ருன். (12)
(2.9.14)

(வேறு)

232. உலகங்கண் முழுதுந்த னுளதென்ன வுளதா
யலகின்றி யழிவின்றி யறிவின்றி யமிர்தா
யெலேயொன்று மறநின்ற பரவின்ப மிதிலே
நிலேநின்ற வவனின்ற நிலேயென்று மழியான் (13)
(2.9.15)

(கலிப்பா) (தானன தானன தான தானன)

233. புன்மய கோசமுள் புக்கொ ளிக்குளே
நன்மைய தாகிய ஞாநக் கண்ணிறற்
சிந்மய மாய்த்திகழ் தேசை நோக்கிய
தன்மையால் வியோமநற் றுமங் காண்பரால். (14)
(2.9.16)

(அறுசீர்விருத்தம்)

234. அப்பரந் தன்னேத் தன்பா லநுபவித் தநுப வித்தா
ரெப்படிக் கண்டா ருள்ளத் திலங்குமா முநிவ ரந்தச்
செப்பரு மின்ப மாய்த்தன் றேசிறைற் றிகழ்ந்து தன்னே
டொப்பறு மவனே யார்க்கு முன்பனென் றுணரப்
பட்டான். (15)
(2.9.17)

231. சமமானதும், உயர் உடையதும், தாழ்வானதும் இல்லாத எவ்வஸ்துவையன்றி எப்பொருளுமின்றே, எல்லாப் பிரகாசங்கட்கும் எந்தப் பிரகாசமானது நிஜபிரகாசமாகின்றதோ, சித்ரூப ஆகாயத்திலே விளங்குகின்ற அதனை தெளிவாக உணர்ந்துள்ள அந்த மகாநுபவன் ஆனந்த சொரூபமாகிய பிரமம் ஆகின்றன். (12)

232. பிரபஞ்சங்கள் எல்லாம் தன்னிடத்தில் இருக்கின்றது என்று உள்ளதாய் குறைவுபடுதலில்லாமல், நாசமில்லாமல், சுட்டியறிதலில்லாமல், அமிர்தமாய் ஒரு அளவும் இல்லா திருக்கின்றது பிரமானந்தம். இந்த பிரமானந்தத்திலே, லயித்து இருக்கப்பட்டவன், இருக்கும் தன்மையினின்றும் எப்பொழுதும் நாசத்தை அடையான். (13)

233. இழிவு பொருந்திய அன்னமய கோசத்தினுள் பொருந்திய சைதன்யத்தில், தீரர்கள் நன்மையாயுள்ள ஞானக் கண்ணினல் சித்ரூபமாக விளங்குகின்ற சைதன்யத்தினை விசார நோக்குற்று சாக்ஷாத்கரித்த தன்மையினல் பரமாகாயமாகிய இடத்தை பார்ப்பார்கள். (14)

234. தேசுபொருந்திய ஸனகாதி ரிஷிகள், அந்த பிரமத்தினை மனதில் எப்படி எப்படி பார்த்தார்களோ, அப்படி அப்படியே தன்னிடத்து அனுபவித்து அனுபவித்தார்கள். அவ்வாறு சொல்வதற்கு அருமையான ஆனந்தமாய் தனது சைதன்ய ரூபத்தினல் விளங்கி, தனக்கு சமான ரகிதமாயுள்ளவனே எல்லார்க்கும் தலைவன் என்று அறியப்பட்டான். (15)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

231. ஒப்பதுமிக் கதுகுறைந்த வொன்றுதனை யொழித்தில்லா
தெப்பொருளெவ் வொளிகட்கு மெவ்வொளிதா
னொளியாகுஞ்
சிற்பரமா காயத்தே திகழ்கின்ற வதுதெளிந்த
வப்பெரியோ னறைந்த மாய்ப்பிரம மாகின்றன். (12)
(2.9.14)

(வேறு)

232. உலகங்கண் முழுதுந்த னுளதென்ன வுளதா
யலகின்றி யழிவின்றி யறிவின்றி யமிர்தா
யெலையொன்று மறநின்ற பரவின்ப மிதிலே
நிலைநின்ற வவனின்ற நிலையென்று மழியான் (13)
(2.9.15)

(கலிப்பா) (தானன தானன தான தானன)

233. புன்மய கோசமுள் புக்கொ ளிக்குளே
நன்மைய தாகிய ஞானக் கண்ணினற்
சிந்மய மாய்த்திகழ் தேசை நோக்கிய
தன்மையால் வியோமநற் றமங் காண்பரால். (14)
(2.9.16)

(அறுசீர்விருத்தம்)

234. அப்பரந் தன்னைத் தன்பா லநுபவித் தநுப வித்தா
ரெப்படிக் கண்டா ருள்ளத் திலங்குமா முநிவ ரந்தச்
செப்பரு மின்ப மாய்த்தன் றேசினற் றிகழ்ந்து தன்னே
டொப்பறு மவனே யார்க்கு முன்பனென் றுணரப்
பட்டான். (15)
(2.9.17)

231. சமமானதும், உயர் உடையதும், தாழ்வானதும் இல்லாத எவ்வஸ்துவையன்றி எப்பொருளுமின்றே, எல்லாப் பிரகாசங்கட்கும் எந்தப் பிரகாசமானது நிஜபிரகாசமாகின்றதோ, சித்ரூப ஆகாயத்திலே விளங்குகின்ற அதனை தெளிவாக உணர்ந்துள்ள அந்த மகாநுபவன் ஆனந்த சொரூபமாகிய பிரமம் ஆகின்றன். (12)

232. பிரபஞ்சங்கள் எல்லாம் தன்னிடத்தில் இருக்கின்றது என்று உள்ளதாய் குறைவுபடுதலில்லாமல், நாசமில்லாமல், சுட்டியறிதலில்லாமல், அமிர்தமாய் ஒரு அளவும் இல்லா திருக்கின்றது பிரமானந்தம். இந்த பிரமானந்தத்திலே, லயித்து இருக்கப்பட்டவன், இருக்கும் தன்மையினின்றும் எப்பொழுதும் நாசத்தை அடையான். (13)

233. இழிவு பொருந்திய அன்னமய கோசத்தினுள் பொருந்திய சைதன்யத்தில், தீரர்கள் நன்மையாயுள்ள ஞானக் கண்ணினல் சித்ரூபமாக விளங்குகின்ற சைதன்யத்தினை விசார நோக்குற்று சாக்ஷாத்கரித்த தன்மையினல் பரமாகாயமாகிய இடத்தை பார்ப்பார்கள். (14)

234. தேசுபொருந்திய ஸனகாதி ரிஷிகள், அந்த பிரமத்தினை மனதில் எப்படி எப்படி பார்த்தார்களோ, அப்படி அப்படியே தன்னிடத்து அனுபவித்து அனுபவித்தார்கள். அவ்வாறு சொல்வதற்கு அருமையான ஆனந்தமாய் தனது சைதன்ய ரூபத்தினல் விளங்கி, தனக்கு சமான ரகிதமாயுள்ளவனே எல்லார்க்கும் தலைவன் என்று அறியப்பட்டான். (15)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

235. எங்குமுள ஞயிறையா யேகனு யெல்லாப்பூ
தங்கடொறு மறைந்திருக்குந் தன்மையனுய்ச்
சராசரங்கட்
கிங்குயிரா யுள்ளாகு மிறைவனெரு வனையுமறிந்
தங்கடைவார் சாந்தியினை யடைவரல்லா
தவரடையார். (16)
(2.9.18)

(வேறு) (தனதன தனதானு)

236. முகமொடு கிரிவந்தன் முடிபத முடிவின்றுய்க்
குகைமுழு தினுநின்றே குறைவற வுலகெல்லா
மகமொடு புறமேவுற் றழிவறு நிலையாகும்
பகவனி லயலாகப் படுவதொர் பொருளின்றல். (17)
(2.9.19)

(அறுசீர்விருத்தம்)

237. மாசுடை மநத்தர் தம்மின் மறைப்பதாய் மாசி லாத
தேசுடை யோகி கட்குந் தெரிந்திடப் படாத தான
வீசனு னெனதா ஞாந மிப்படி யருளி னுலே
பேசின னுங்கட் கென்று பெருந்தகை யருளிச்
செய்தான். (18)
(2.9.20)

235. சர்வ வியாபியாய், தலைவனாய், அத்வைத ரூபனாய், சர்வ பூதங்களிலும் (காண்பானாய்) மறைந்து இருக்கின்ற தன்மையினை உடையவனாய், சர அசரங்களுக்கு பிராணனாய், ஆந்தரமாயிருக்கின்ற பரமேசுவரனை, ஏகரூபனை, உணர்ந்து அதனை அடைந்தவர்கள் சாந்தியை அடைவார்கள். இவ்வாறு உணர்ந்து அதனை அடையாதவர்கள் சாந்தியை அடைய மாட்டார்கள். (16)

236. முகமும், கழுத்தும், சிரசும், பாதங்களும் அளவில்லாததாய், எல்லா சரீரக்குகைகளிலுமிருந்து, பூரணமாய் எல்லா உலகங்களிலும் உள்ளும் புறம்பும் பொருந்தி நித்திய மாயுள்ள தன்மையினை உடைய பரமேசுவரனுக்கு அந்நிய மாகயிருப்பது ஒரு வஸ்துவும் இல்லவேயில்லை. (17)

237. (விடயவாசனையா பகிர்முகதிருட்டியெனும்) மலதோஷம் உடைய அந்தக்கரணம் உடையவரிடத்து அறியமுடியாத ரகசியமாயுள்ளதாய், குற்றமற்ற பிரகாசம் பொருந்திய யோகிகளுக்கும் (எளிதில்) தரிசிக்கக் கூடாத தாயுள்ள பரமேசுவரன் நான். என்னுடைய ஞானத்தினை இவ்வாறு கிருபையினாலே உங்களுக்கு உபதேசித்தேன் என பெருமை பொருந்திய தன்மையினை உடைய பரமேசுவரன் கூறினான். (18)

பத்தாவது அத்தியாயம்

# தத்துவ தரிசனம்

(கலிப்பா) (தானன தனனதன தானன தனனதன)

238. துக்கரங் குறியில்குறி சூக்கசூ சனைதெரியி
லக்கணஞ் சகலவுல கத்தினங் குரமுமதவ்
வக்கரம் பரமபத மப்பரஞ் சுடர்பிரம
நிர்க்குணம் பரவெளியி னிச்சயம் பெறநிகழும். (1)

(வடமொழி கூர்மபுராணம் 2.10.1-2)

(அறுசீர் சந்த விருத்தம்) (தான தானன தானன)

239. ஒப்ப ரும்பர தத்துவத் தொப்பி டுஞ்சுரு திக்கலை
கப்ப றும்படி புத்தியிற் கற்பி தங்கள்க ழற்றிமெய்த்
தப்ப ருந்தவர் சித்தமெய் தற்ப ரந்தனி லற்றதிங்
கப்ப ரம்பிர மத்தினுக் கத்தை லிங்கமெ னப்படும். (2)

(2.10.3)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

240. அறிவினிற் பிறிதெல்லா மறிவென லறிவாகும்
பெறவரி திதிலல்லாற் பிறிதினில் வெளிநில்லேன்
பிறவிய தறுஞாநம் பெறவரி ததனலே
மறவிய துறுமாயா மயலல திலையெல்லாம் (3)

(2.10.4-5)

## பத்தாவது அத்தியாயம்

# தத்துவ தரிசனம்

238. அங்கமல்லாத அலிங்கத்திலும் அவ்வியத்த லிங்கத்திலும் விசாரிக்கில் அப்பொழுது அந்த அவ்வியத்த லிங்கமானது சர்வ பிரபஞ்சங்களினது பீஜமுமேயுமாகும். அந்த அக்ஷரரூப பீஜமானது மேலான பதமுமாகும். அந்த மேலான பிரகாசம் பிரமமுமாம், நிர்க்குணமுமாம். பர ஆகாயத்தில் நிச்சயமாக அந்தப் பிரமம் விளங்கும். (1)

239. சமான ரகிதமான பிரம தத்துவத்திற்கு சமானமாகச் சொல்லுகின்ற வேதங்களும் கலைகளும், நாநாபேதங்கள் நாசமாகும்படி புத்தியின்கண் உள்ள பாவனைகளை நீக்கிப் பொருந்தின. உண்மையான ஒழுக்ககத்தினையுடைய தவத்தை உடையோர்களால் மனமானது, சத்தியமான அந்த பிரமத்தில் மறைந்தது. பொருந்தியுள்ளதான அம்மகத்துக்களின் நிட்டையே அந்தப் பரமபிரமத்திற்கு லிங்க (அடையாளம்) மென்று சொல்லப்படும். (கப்பு = பேதம், குற்றம்) (2)

240. ஆத்மாவில், வேறுயுள்ள யாவும் ஆத்மாவே என்று கருதுதலே ஆத்ம ஞானமாம். இந்த ஞானம் உண்டாவது மிகத் துர்லபமாம். இந்த ஆத்ம ஞானத்தினலல்லாமல் மற்றவற்றில் வெளியாக யான் உணரப்படேன். ஜென்மத்தினை நாசம் செய்கின்ற ஆத்ம ஞானத்தினை அடைவது மிகவும் அருமை யாகும். ஆகையினலே யாவும் அஞ்ஞானத்தினை பொருந்திய மாயையின் மயக்கமே அல்லாமல் வேறில்லை. (3)

(கலிவிருத்தம்)

241. நின்மல மாகிநி ரஞ்சந மாய்வே
றின்மைய தாயவி காரமி தாமித்
தொன்மைய தாகிய சூக்கும ஞாந
மென்மல மில்லுரு வென்பர றிந்தோர். (4)
(2.10.6)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

242. யோகினி லுளமென்பா லொருபடி யுறவைத்தே
யேகவெ னிலேகண்டா ரவரென தியல்கண்டார்
பாகம தறுமொன்றும் பலவுரு வமுநானே
யாகவு மெனேயன்பா லறிஞரு மயலன்றல். (5)
(2.10.7-8)

243. பேறுறு பிரமாநந் தமுமது பெறுதாமும்
வேறுற வறிகின்ற ரவர்விழி மறைகின்றர்
கூறற வவிகாரங் கூடிய விறைதாமா
யூறற வுணர்கின்ற ருண்மையை யுணர்கின்றர். (6)
(2.10.9)

244. பங்கமில்சீர் பரனுடைய தாதித்தன் பான்மையினே
யிங்கொருவர்க் கறிவரிய தாகியதவ் வியத்தத்தை
யெங்குமுள தாய்த்தம்பா லிலங்கியபே ரின்பத்தைத்
தங்களிலே நிலேபெற்ற சாந்தரடைந் திருப்பர்களால்
(7)
(2.10.10)

(கலிப்பா)

245. மெய்த்தக வீடிது விமல மாய்ப்பரி
சுத்தம தாகிநிர்த் தொந்த மாயொரு
பெத்தமில் பிரமரூ பத்திற் பேதியா
உத்தம மெனதுசா யுச்ச மென்பரால். (8)
(2.10.11)

241. ஆத்ம ஞானத்தினை உணர்ந்தவர்கள் மலதோஷ மற்றதாய், களங்கமற்றதாய், இது யாதொரு விகாரமும் இன்றிய தாயும் இருக்கின்ற இந்த அனுதியான சூக்ஷூமமான பிரம ஞானம், எனது மலமற்ற ரூபமாம் என்று கூறுவார்கள். (4)

242. யோகத்தில் மனதை என்னிடத்து ஏகமாக பொருந்தும்படி செய்து அத்வைத ரூபனுன என்னுடைய தன்மையை உணர்ந்தவர்கள் யாவரோ அவர் என்னுடைய சுவாப சொரூபத்தை அறிந்தவராவார்கள். அபேதமாக உள்ள ஏகமும், நாநா ரூபமும் நானேயாக இருக்கின்றேன். பரமேசுவர னுகிய என்னை பக்தியினுல் வழிபடுகின்ற ஞானிகளும் எனக்கு அந்நியமல்ல. (5)

243. பிரயோஜனத்தைத் தரத்தக்க பிரமானந்தத்தினையும், அதனை அடைகின்ற தம்மையும், வேறுக உணர்கின்றவர்கள் யாவரோ அவர்கள் அறிவிலிகளாகின்றுர்கள். வேறுபாடுகள் நீங்கி நிர்விகாரத்தினைப் பொருந்திய பரமேசுவரனே தானுக, குற்றம் யாவும் நீங்கி அறிகின்றவர்கள் யாவரோ அவர்கள் சத்திய மாயுள்ள பிரமத்தினை அறிகின்றுர்கள். (6)

244. குற்றமின்றிய சிறப்பினையுடைய பிரமத்தினுடையதாகிய சூரியனது தன்மையினை, இவ்விடத்தில் ஒருவருக்கும் அறிய முடியாததான அவ்வியத்த ரூபத்தினை, சர்வ வியாபகமாய் தம்மிடத்து விளங்குகின்ற பிரமானந்தத்தினை தம்மிடத்து ஸ்திரமாகப் பொருந்தியுள்ள சாந்தர்கள் அடைந்திருப்பார்கள். (7)

245. இந்த ஆத்ம ஞானமானது, உண்மையான மோக்ஷமாம், நின்மலமாய் பரிசுத்தமாய், சுகதுக்கங்களாகிய துவந்துவ மற்றதாய், யாதொரு பந்தமுமின்றிய, சொரூபத்தில் வேறுபடாத உத்தமமாயுள்ளது என்னுடைய சாயுச்ச பதவி என்று சொல்லுவார்கள். (8)

246. ஆதியு நடுவுமந் தமுமி லாததொன்
றேதது வெனிற்பர மீச னுநா
னீதியி லெனையறி நிமல நித்தனும்
பேதமி லெனைப்பெறும் பிறவி பின்பெறுன் (9)
(2.10.12)

(கலிப்பா) (தனன தன தனன தன தனன தன தானு)

247. தபநனொளி பெருகிரவி சசியுடுமி னடையச்
சிவனிகழ்வி னிகழ்வுபெற சிறிதுமிவர் நிகழ
ரவனுடைய வொளிகொடொரு வொளிதிகழு மசையா
விவனதொளி சிறிதுபெறி லிவர்நிகழ்வு பெறுவார். (10)
(2.10.13)

(எழுசீர் விருத்தம்)

248. உதியாம லென்று மொழியாமை நின்ற
வொளியாகி யென்று முளதாய்த்
திதியாய்நி றைந்து தெளிவாகி யங்கோர்
செயலான தின்றி யருளான்
மதியாளர் தங்க ளகமேய கண்ட
வடிவாய்நி கழ்ந்த வடிவே
பதியாகியென்று மழியாமை நின்ற
படியாகி நின்ற பரனுன். (11)
(2.10.14)

(கலிநிலைத்துறை) (தானன தானு தானன தானு தனதானு
தானன தானு தனதன தானு தனதானு)

249. நித்தம நந்த நிட்கள மின்ப நிமலஞ்சற்
சித்தமு தந்தற் சிவமெனும் வேதத் திரளெல்லாஞ்
சுத்தனை யந்தச் சுருதியி னந்தத் துணி நெஞ்சத்
துத்தமர் தந்த முளமது ணர்ந்தா ரோமென்றே. (12)
(2.10.15)

246. முதன்மையும் (உற்பத்தி) மத்தியமும் (திதி), இறுதியும் (நாசம்) இல்லாதிருப்பது ஒருபொருள் யாதென்று கேட்கில் பரமேசுவரனுகிய நானுவேன்; கிரமமாக என்னை உணருகின்றவன் நின்மலமாகியும், நித்தியனுகியும், அபேத மாயும் உள்ள என்னை அடைவன்; பின்னர் ஜனனத்தினை அடையான். (9)

247. அக்னி, மிகுந்த பிரகாசத்தையுடைய சூரியன், சந்திரன் நக்ஷத்திரங்கள், மின்னலாகிய இவைகள், பரமேசுவரனுடைய விளக்கமில்லாமல் விளங்கும்படியாக இவர்கள் கொஞ்சமும் பிரகாசஞ் செய்ய மாட்டார்கள். அந்த பரமேசுவரனுடைய பிரகாசத்தைக் கொண்டே ஒன்றென்றற்கும் பிரகாசமுண் டாகும். சலனமின்றிய இந்த பரமேசுவரனுடைய பிரகாசத்தை கொஞ்சமேனுமடையில், இந்த அக்னி, சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், மின்னல் ஆகிய இவர்கள் விளக்கத்தினையடை வார்கள். (10)

248. உற்பத்தியாகாமல், எப்பொழுதும் நாசமில்லா திருக்கின்ற பிரகாசத்தோடும், எப்பொழுதும் இருப்பதாய், ஸ்திரமாகி, பூரணமாய் விளக்கத்தினை உடையதாய், ஒருவித கிரியையும் அற்று, கிருபையினுலே புத்திமான்களது மனதில் பொருந்திய அகண்ட சொரூபமாக விளங்குகின்ற சொரூபமே, தலைவனுகி, எப்பொழுதும் நித்தியமாயிருந்த பிரகாரமே இருக்கும் பரமேசுவரன் நானுகின்றேன். (11)

249. நித்தியம், அனந்தம், நிஷ்களம், இன்பம், நின்மலம், சச்சித்அம்ருதானந்தம், அந்தச் சிவம் (மங்களரூபம்) என்று வேதத்தின் தொகுதிகள் யாவும் குறிப்பிடும் பரிசுத்தனை பரமேசுவரனை முன் சொல்லப்பட்ட வேதத்தின் முடிவாக நிச்சயித்த மனதினை உடைய ரிஷிகள், தங்கள் தங்களது உள்ளத்தின் கண்ணும் ஓங்கார சொரூபம் என்று அறிந்தார்கள். (12)

(அறுசீர்விருத்தம்) (தான தான தனதான
தானன தான தானன)

250. தாரா காயம் பவநம்புத் தானந லல்லன தார
ேனரா தானபி ராணதி யெல்லா வாயுவி னுருவல்ல
ேனரா காசன் மநம்புத்தி யுறுமொரு சேதந
மவனல்லன்
பாரா காச யோகத்திற் கேவல னகும் பரமீசன். (13)
(2.10.16)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

251. எல்லாவே தத்துமறைந் திருப்பதவா யாவர்க்குஞ்
சொல்லாத பரஞாந முங்களுக்குச் சொன்னேன
நல்லானிப் பரயோக ஞாநத்தா லேநலிவொன்
றில்லாத விடத்தடைவா னெனவியம்பி யருளினன். (14)
(2.10.17)

250. பிருதிவி, ஆகாயம், வாயு, அப்பு, தகிக்கின்ற அக்னி, (ஆகிய பஞ்ச பூதங்களும்) யானல்லன்; (இந்த பஞ்ச பூதங்கட்கும்) ஆதாரமாயுள்ளவன்; சடமான உசுவாச நிசுவாசஞ் செய்வதான பிராணுபானன் முதல் கூர்மனிறுதியாகவுள்ள எல்லா வாயுக்களினது ஸ்வரூபமுமல்லன்; ஒப்பற்ற மேலான ஆகாய ரூபத்தையுடையவனும், மனமும், புத்தியும் பொருந்திய ஒப்பற்ற ஒரு (சீவ) சைதன்யமும் அவன் ஆகான்; பரமாகாச யோகத்தின் கண் (வேறெதுவும் பாரா) கேவல ஸ்வரூபமுடைய பரமேசுவரன் நானுகின்றேன். (தார் = பூமி; அம்பு = நீர்) (13)

251. நான்கு வேதங்களிலும் ரகசியமாக இருக்கின்றதாயும், எப்படிப்பட்டவர்க்கும் சொல்லக் கூடாததாகிய பிரம ஞானத்தினை பரமேசுவரனுகிய நான் ஸனகாதி ரிஷிகளாகிய உங்களுக்கு உபதேசஞ் செய்தேன், சத்வமிகு நல்லோன் இந்தப் பிரம யோகஞானத்தினுலே ஒருவித துன்பமும் இல்லாத ஸ்தானத்தை அடைவான் என்று திருவாய் மலர்ந்தருளினுன். (14)

# பதினொன்றாவது அத்தியாயம்

## யோகம்

(அறுசீர்விருத்தம்)

252. இடர்ப்படு பிறவி தீர்க்கு மியார்க்குமெட் டாத தாகி
யுடைத்தன தொளியி னலே யொளிர்வதா யுள்ள ஞானச்
சுடர்த்திரு வுருவ மான சொரூபனை யாதொன் றாலே
கிடைத்திடு மந்த யோகங் கேண்மினென் றருளிச் செய்தான். (1)

(வடமொழி கூர்மபுராணம் 2.11.1)

(வேறு) (தான தனன தனதன)

253. யோக வெரியோ ரிமைப்பிலே
யாது வினையுமெ ரிப்பதாம்
தேக மொழியுமிம் முத்தியே
சேரு முணர்வு செநிப்பதா
மியோக முணர்வை யொழித்துற
யோக மொழியவு ணர்ச்சிதா
னகு தலவீது ளத்துளா
னியாவ னவனைய ளிப்பனன். (2)

(2.11.2-3)

254. ஒருகா லிருகான் முக்கான்மற்
றுள்ள கால முள்ளத்தை
வருகா தலினு லியோகத்தே
வைப்பார் மகேச ரெனப்படுவா
ரரிதா மிதனை மாயோக
மபாவ யோக மெனவறிஞ
ரிருபா லாக வியம்புவரவ்
விரண்டு மிருக்கும் படிகேண்மோ. (3)

(2.11.4-5)

## பதினொன்றாவது அத்தியாயம்

# யோகம்

252. "துன்பத்தில் மூழ்கியிருக்கும் ஜென்மத்தினை நிவிர்த்திப்பதாயும், எப்படிப்பட்டவர்கட்கும் அறியமுடியாததாயும் உள்ள, தன்னுடைய பூரணப் பிரகாசத்தினாலே விளங்கிக் கொண்டிருக்கின்ற, ஞானப் பிரகாசமாகிய திவ்ய மங்கள ரூபமான சொரூபானந்த சேதன சொரூபத்தை, எந்த ஞானத்தினாலே அடையப்படுமோ அந்த யோகத்தினை கேட்பீர்களாக" என பரமேசுவரர் ஸனகாதி ரிஷிகட்கு உபதேசித்தார் (என்று வியாஸர் தொடருகிறார்). (1)

253. **சிவனுபதேசம்:** யோக அக்னியானது ஒரு க்ஷணத்திலே எப்படிப்பட்ட பாப புண்ணிய கன்மங்களையும் பஸ்மஞ் செய்வதாம். அதனால் சரீர நாசமாம் இந்த மோக்ஷத்திலேயே அடைய நின்ற ஞானமானது உண்டாவதாம். யோகமானது ஞானத்தை விட்டு இராது; ஞானமானது யோகத்தை விட்டு இராது (ஆகுது அல). இவ்விரண்டையும் மனதின்கண் அறிந்திருப்பவன் யாவனோ அவனை நான் இரக்ஷிப்பேன். (2)

254. உண்டாகின்ற பிரியத்தினால் ஒரு காலமாகிலும், இரு காலமாகிலும், மூன்று காலமாகிலும், சதா காலமும் மனத்தினை யோகத்தில் அப்யாசிப்பவர்கள் மகேசுவரனென்று சொல்லப் படுவார்கள். அருமையான இந்த யோகத்தினை **மஹா யோகம்** என்றும் **அபாவ யோகம்** என்றும் மஹான்கள் இரண்டு பிரிவாக கூறுவார்கள்; அந்த இரண்டு வித யோகமும் இருக்கின்ற தன்மையை கேட்பீர்களாக. (3)

(கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தானு)

255. தானினையு மாறரிய தத்துவமி யாதொன்
றனிகழ்வ தாகுமத பாவமெனு மியோகம்
வானியல தாகியொரு வத்துவுமி லாதாஞ்
சூநியம தாகவறி கின்றனர்க டுயோர். (4)
(2.11.6)

(எழுசீர் சந்த விருத்தம்)

256. மயலிலா யாதிலொரு மலமிலா தானசுக
வடிவதா மாசி லொளியா
மயலிலா வேகவெனை யயலெனு தேகமென
வறிகைமா யோக மதுவா
முயலுமா றுசையென முடிவிலா நூல்கள் பல
மொழியுமியோ காட வியெலா
மியலுறு தாமரிய விதனிலோர் சோடசியு
மிசையுறு தாகு மியல்பால். (5)
(2.11.7-8)

(அறுசீர்விருத்தம்) (தானனு தானு தானு)

257. சுத்தமா யென்னைக் கண்டெத்
தோற்றமுந் தோன்று தான
வுத்தம யோக மெல்லா
யோகிலும் பரம யோக
மத்திர மின்றி யென்னை
யாயிரங் கோடி காலஞ்
சித்தம தொருக்கி நாளுஞ்
சித்தையிற் றிகழக் காணர். (6)
(2.11.9-10)

(கலிப்பா) (தனதன தானனு தனன தானனு
தனதன தானனு தனுன தானனு)

258. அயர்வறு யோகலா தறிகை யாதந
மயலற விந்திய மடக்கல் வாயுவின்
சயமிகு தியாநதா ரணைச மாதியு
மியமமு நியமமு மெட்டு மங்கமாம். (7)
(2.11.11-12)

255. தான் அறியுமாறு தானாகிய அருமையான தத்துவமானது எந்த பாவனையுனால் உள்ளபடி விளங்குகின்றதோ அது **அபாவ யோக**மென்று சொல்லப்படும். ஆகாயம் போன்ற சொரூபமுடையதாய் யாதொரு வஸ்துவும் பிரதீ தியாகாததாயுள்ள சூனியமாய், அந்த வஸ்துவை பரிசுத்தமுடைய மகான்கள் உணருகிறார்கள். (4)

256. மயக்கம் இன்றி எதனிலும் ஒருவித தோஷமும் இல்லாததாகிய ஆனந்த ரூபமான, குற்றமின்றிய பிரகாசமா யுள்ள அன்னியமின்றிய, ஏகமான என்னை தனக்கு அன்னியமாகக் கருதாது, ஏக ரூபமாக உணர்தல் **மஹாயோகம்** என்று சொல்லப்படும். விருப்பத்தோடு முயற்சி செய்யும்படியாக அளவிடக் கூடாத அநேகயோக சாஸ்திரங்கள் கூறும் யோகக் கூட்டங்கள் யாவும், அருமையான இந்த ஞானத்திற்கு மேலாக பொருந்தாதனவாகிய தன்மையினால், பதினாறில் ஒரு பாகமும் சமமாகச் சொல்ல முடியாததாகும். (யோகாடவி=யோகக்காடு) (5)

257. பரமேசுவரனாகிய என்னை பரிசுத்தமாய்ப் பார்த்து எப்படிப்பட்ட பிரதீதியும் (எத்தோற்றமும்) உண்டாகாத உத்தமமான யோகம், எல்லாவிதமான யோகத்திலும் மேலான யோகமாம். அவ்வாறு உணராது அநேக காலம் சதா மனதை அடக்கினாலும் சித்தத்தின்கண் என்னை சாக்ஷாத்கரியார்கள். (6)

258. துக்கம் இன்றிய ஞானம் அல்லாமல், ஞானத்தை அடைதற்கு சாதனம் ஆசனமும், மயக்கமின்றி பிரத்யாகாரமும், பிராணயாமமும், மிகுதியான தியானமும், தாரணையும், சமாதியும், இயமமும், நியமமும் ஆகிய எட்டும் ஞானத்திற்கு **பகிரங்க சாதனங்களாம்**. (7)

(கலிவிருத்தம்) (தனன தானன தானன தானன)

259. தருக்கி லாதபி ரமச்ச ரியமெய்
வுரைக்கை கள்ளமொ ழிகையின் றுசெயா
திருக்கை யாதொன்று மேருமை என்றிவை
சுருக்க மாகய மமென்று சொல்வரால். (8)
(2.11.13)

(அறுசீர்விருத்தம்)

260. மநத்தால் வாக்காற் காயத்தால்
வாதை யாவ தியாதேனு
மனைத்தா ருயிர்க்குஞ் செய்யாத
தகிஞ்சை யாக வறிகவிது
தனிற்றன் பரமாந் தருமமிலை
சாரு மின்பந் தானுமிலை
யெனைத்தாம் விதியி லுயிர்க்கின்ன
செயினு மதுவு மினிதேயாம். (9)
(2.11.14-15)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

261. உளவாறுரை செயறனுரை
செயுமாறெழு குதறன்
வளவாய்மைய தெனநாடினர்
மதியான்மிகு முதியா
ரளவாரகி லமும்வாய்மையி
லுளதாதலி னதுதா
னுளவாசக வினையாலுடை
யவனியாவையுமு டையான். (10)
(2.11.16)

(கலிப்பா) (தனதன தானன தனதன தானன
தனதன தானன தனன தானன)

262. மறைவினி லாகினும் வலியினி லாகினும்
பிறர்பொருள் வவ்வுதல் பெரிய கள்ளமாம்
கறையுறு மரிவையர் திறங்க ளுவிலும்
பிறழ்வற மறப்பது பிரம சாரமாம். (11)
(2.11.17-18)

259. யாராலும் ஆக்ஷேபிக்கப்படாத பிரமசரியமும் சத்தியமும் அஸ்தேயமும் அகிம்சையும் அபரிக்கிரகமும் என்று சொல்லப்பட்ட இவ்வைந்தையும் சங்கிரகமாக **இயமம்** என்று சொல்லுவார்கள். (8)

260. மனத்தினுலும், வாக்கினுலும், காயத்தினுலும், எப்படிப் பட்ட வாதையையும், நிறைந்த சர்வ ஜீவர்கட்கும் செய்யா திருப்பதுவே **அகிம்சை**யாகும் என்று உணருவாயாக, இதைப் பார்க்கிலும் மேலான தருமம் இல்லையாம், அடையும் ஆனந்தமும் வேறு இல்லை. ஜீவருக்கு வேதத்தில் கூறியுள்ள விதி பூர்வமாக எப்படிப்பட்டதாகிய இம்சை செய்யினும் அதுவும் அஹிம்சையேயாம். (9)

261. சத்தியமாகச் சொல்லுதலும், சொல்லியபடியே நடந்து வருதலும் வளமை பொருந்திய **சத்தியம்** ஆம், என்று புத்தியில் சிரேஷ்டமான மேதாவிகள் கருதினர்கள். பிரமாணங்களிலே (அளவுகளிலே) நிறைந்துள்ள சர்வ பிரபஞ்சமும் சத்தியத்தி லேயே இருக்கின்றது. ஆகையால் கூறிய சத்தியத்தை, உள்ளம், வாக்கு, செயலிலே உடையவன் யாவனே அவன் எல்லா வற்றையும் அடைந்தவனுகின்றன்.

(10)

262. காணமலாயினும், பலாத்காரத்தாலாயினும் பிறருடைய வஸ்துவை அபகரித்துக் கொள்ளுதல் பெரிய ஸ்தேயமாம். அஃதின்றியிருத்தல் **அஸ்தேய**மாம். குற்றம் பொருந்திய ஸ்த்ரீகளினது தன்மையினை மனவாக்கு காயங்களினல் சொப்பனத்திலும் மீண்டும் மீண்டும் பிறட்சியின்றி மறந்து விட்டு விடுவது **பிரமசரியம்** ஆகும்.

(11)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

263. அரந்தைமுழுந் திடவாபத் தடைந்திடினு மன்பாலே
யிரந்தொருவ னீந்திடினு மேராமை யேராமை
வருந்திமநத் தாசையற மடக்குவான் மாசற்ற
நிரந்தரமா மியமமிவை நியமமினி நிகழ்த்திடுவாம்.
(12)
(2.11.19)

(கலிப்பா)

264. படர்தவம் வேதநூல் பயிறல் பத்தியாற்
கடவுளை வழிபடல் கருதி நெஞ்சினோ
டுடலுறு தூய்மைசந் தோட மோங்கிய
சுடர்மிகு நியமமாய்ச் சுருங்கச் சொல்வரால். (13)
(2.11.20)

(அறுசீர்விருத்தம்)

265. பவமார் நோவு கெடநோன்பு
பலவா லாக்கை மெலிவிக்கை
தவமா குவது வேதாந்தஞ்
சதருத் திரியந் தாரகமாஞ்
சிவமா கியமந் திரம் பலவின்
செபமத் தியாயஞ் சிறந்துள்ள
வவமா னதிலா வதன்பேத
மறிவா ரறையும் படிகேண்மோ. (14)
(2.11.21-22)

263. துன்பத்தின் கண்ணே மூழ்கும்படியாக தரித்திரத்தினை உடையவனுயிருப்பினும், ஒருவன் பிரியத்தினுலே விரும்பிக் கொடுப்பினும் திரவியத்தை வாங்காதிருத்தல் **அபரிக்கிரகம்** ஆம். வருத்தமுற்று மனதின்கண் ஆசையின்றி தன்வயமாக்குதற் பொருட்டு குற்றமற்ற இவ்வபரிகிரகத்தை இடையீடின்றி செய்யத்தக்கதாம். இவைகளே இயமம் என்று சொல்லப்படும். (12)

264. விரிவாக உள்ள தவமும், வேதநூல் பயிலல் (சுவாத்தியாயமும்), பக்தியினுல் வழிபடல் ஈசுவரப்பிரணிதானமும், நினைக்கின்ற மனத்தினும் சரீரத்தினதும் தூய்மை (சௌசமும்), சதாகாலமும் விளங்குகின்ற சந்தோஷமும், பிரகாசம் பொருந்திய இவ்வைந்தையும் **நியமம்** என்று சங்கிரகமாகச் சொல்லுவார்கள். (13)

265. பிறவிக்கு ஏதுவாகப் பொருந்தி உள்ள வியாதி நாசமடைய கிருச்சிர சாந்திராயண முதலிய அநேக விரதங்களினுல் சரீரத்தைச் சுருங்கச் செய்தல் **தவம்** என்று சொல்லப்படும். வேதாந்த சாஸ்திரங்களையும், நூறு ருத்திர ஸ்லோகங்களையும், ஜென்மத்தினைக் கடத்தற்கு ஏதுவாயுள்ள பிரணவம், பஞ்சாக்ஷரம் ஆகிய மந்திரங்கள் பலவற்றை செபித்தல் **ஸ்வாத்தியாய**மாம். அந்த ஸ்வாத்தியாயத்தில் மேன்மை பொருந்தியிருக்கின்ற கெடுதல் இல்லாத அந்த ஜெபத்தின் ஒன்றற்கொன்றுள்ள வேறுபாட்டை உணர்ந்தவர்கள் சொல்லுகின்ற பிரகாரம் யாம்கூற நீங்கள் கேட்பீர்களாக. (அத்யாயம் = ஸ்வாத்யாயம்) (14)

(எழுசீர்விருத்தம்) (தானன தான தானன தான
தானன தானன தான)

266. வாசிக முபாஞ்சு மாநத மென்று
மதிலொரோவ் வொன்றினுக் கொன்று
தேசுடைத் தென்று செப்பினர் பிறர்க்குத்
தெரியவே செபித்திடுஞ் செபந்தான்
வாசிக முபாஞ்சு வாயித ழடித்தன்
மாத்திர மானத மடங்கி
யாசறச் சிந்தை செய்தலொன் றினுக்கொன்
றுயிர மடங்குநல் லனவாம்.* (15)
(2.11.23-26)

(கலிப்பா)

267. கூடின கொண்டலம் பாவங் கூடல்சந்
தோடமென் றறிஞராற் சொல்லப் பட்டதா
லாடுறு தூய்மைதா னகம்பு றம்புள
தோடம திரண்டையுந் துடைத்த லென்பரால். (16)
(27-28a)

268. தோயமு மண்ணுமாக் கொண்டு சுத்தமாக்
காயமே வியமலங் கழுவப் பட்டதாம்
வாய்மைய முதலதா மநத்தி னற்செயுந்
தூய்மையை யுள்ளநற் றூய்மை யென்பரால் (17)
(28b)

269. கந்தநன் மலர்கொடு காய பூசனை
வந்தனை செயல்புகழ் வாக்கின் பூசனை
பந்தனை யறமநம் பத்தி யாற்செயுஞ்
சிந்தனை நியதமுஞ் சிவன்றன் பூசையே. (18)
(29)

---

* வழுத்தலில் வாக்குச்ச வாய்க்குட் செபத்தில்
விழுப்பமா மானத முந்தீபற
விளம்புந் தியானமி துந்தீபற
- பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி (உபதேசவுந்தியார்-6)

266. (செபமானது) வாசிகம் என்றும், உபாம்சு என்றும், மானதம் என்றும் மூன்று விதமான பேதமுடையதாகச் சொல்லுவார்கள். அம்மூன்றில் ஒப்பற்ற ஒன்றற்கு ஒன்று உயர்வு உடையது என்று சொல்லுவார்கள். பக்கத்தில் உள்ளவர்களுக்குக் கேட்கும்படியாக உச்சரிக்கின்ற செபமானது வாசிக செபம் என்று சொல்லப்படும், வாயிலுள்ள உதடுகள் ஒன்றேடொன்று பட செபித்தல் உபாம்சு செபம் என்று சொல்லப்படும். குற்றமற மனதினுள்ளேயே அடக்கத்தோடு செபித்தல் மானத செபம் என்று சொல்லப்படும். வாசிக செபத்தைப் பார்க்கிலும் உபாம்சு செபம் உயர்வுடையதும், உபாம்சு செபத்தைப் பார்க்கிலும் மானத செபம் உயர்வுடையதும் ஆகையால் ஒன்றுக்கு ஒன்று ஆயிரம் பங்கு விசேஷமுடையதாகும். (15)

267. பிராரப்த வசத்தால் கிடைத்தது கொண்டு போதுமென்னும் திருப்தியோடிருத்தல் (அலம்பாவம்) **சந்தோஷமென்று** (யதிருச்சாலாப சந்துஷ்டி என்று) புத்திமான்களால் கூறப்பட்டிருக்கின்றது. சரீரத்தின் கண்ணுள்ள வியர்வை துர்நாற்றம் முதலியவற்றையும் மனத்தின் கண்ணுள்ள மலின வாசனைகளையும் போக்குதல் (பாஹ்ய ஆந்தர) **சௌசம்** என்று சொல்லுவார்கள். (சௌசம் = தூய்மை) (16)

268. சரீரத்தின்கண் பொருந்திய மலத்தை ஜலமும் மண்ணும் கொண்டு பரிசுத்தமாக கழுவுகின்றது சரீர சௌசமாம். சத்தியம் முதலியவற்றைக் கொண்ட மனத்தினுலே செய்கின்ற பரிசுத்தத்தினை நல்ல மனத்தினது தூய்மை என்று சொல்லுவார்கள். (17)

269. சுகந்த வஸ்த்துக்களையும் உயர்ந்த புஷ்பங்களையும் கொண்டு காயத்தால் செய்யப்படும் காய பூசையும், தோத்திரம் முதலிய வழிபாடுகளைச் செய்வதாகிய புகழ்கின்ற வாக்கினுலே செய்யப்படும் வாக்கின் பூசையும், பந்தம் நீங்க பக்தியினுலே சதாகாலமும் மனமானது சிந்தித்துக் கொண்டிருத்தலாகிய மானத பூசையும் ஆகிய இவைகள் காயிக வாசிக மானசிகமான **ஈசுவரப் பிரணிதானம்** என்று சொல்லப்படும். (18)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

270. புராதநரோ தியவியம நியமங்கள் புகன்றனமேற்
பிராணனதின் யாமமது பேசுபிரா ணயாமம்
விராவியுட லுறும்வாயு விளம்புவர்கள் பிராணனென
நிரோதநமே செயலதனை நித்தலுமா யாதந்தான். (19)
(2.11.30)

(கலிவிருத்தம்)

271. மந்த முத்தம மத்திம மென்றுமிங்
கந்த நல்லுயிர் யாமம றிபவர்
சந்த முற்றச கற்பவ கற்பமாய்ச்
சிந்தை யுற்றிரண் டாகவுஞ் செப்பினர். (20)
(31)

(கலிநிலைத்துறை)

272. மந்த மாறிரு மாத்திரை மத்திமோத் தமங்க
ளந்த வெல்லிரட் டிரண்டுடன் மாத்திரை யடக்கல்
கந்த வேர்ப்புறுங் கம்பநங் கிளம்புகை யிவையா
னந்த மாச்செயு மொன்றினுக் கொன்றுநன் மையதாம்.
(21)
(32-33)

270. முதியோர்கள் கூறிய இயமம் ஐந்து விதமெனவும் நியமம் ஐந்து விதமெனவும் முன்னர் சொன்னோம். இனி பிராண னுடைய நிரோதம் **பிராணயாமமாம்**. சரீரம் முழுதும் வியாபித்துள்ள வாயுவை பிராணன் என்று சொல்லுவார்கள். அந்த வாயுவை சதாகாலமும் அடக்குதல் செய்வது ஆயாமம் என்று சொல்லப்படும். (19)

271. மந்தப் பிராணயாமமென்றும், உத்தமப் பிராணயாமம் என்றும், மத்திமப் பிராணயாமம் என்றும், இவ்விடத்து அத்தகைய சிரேஷ்டம் பொருந்திய பிராணயாமத்தை உணர்ந்தவர்கள் மூன்று பிரகாரமாகக் கூறினார்கள். மேலும் அதனையே சதாகாலமும் பொருந்திய சகற்ப பிராணயாமமென்றும், அகற்ப பிராணயாமமென்றும் விசாரித்தறிந்து இருபேதமாகவும் (சிலர்) சொன்னார்கள். (கற்பம் = கர்பம் = விதை) (20)

272. பனிரெண்டு மாத்திரையளவு உச்சரித்து அடக்குதல் மந்தப் பிராணயாமம் என்று சொல்லப்படும். அந்தப் பனிரெண்டு மாத்திரை எல்லையிலிருந்து முதல் இரட்டிப்பாகிய இருபத்தி நான்கு மாத்திரையளவு உச்சரித்து அடக்குதல் மத்திமப் பிராணயாமம் என்றும், அதனின்றும் இரட்டிப்பாகிய நாற்பத்தெட்டு மாத்திரையளவு உச்சரித்துப் பிராணனையடக்குதல் உத்தமப் பிராணயாமமென்று சொல்லப்படும். மந்தப் பிராணயாமத்தினால் உடம்பில் கழுத்தடி வியர்வை உண்டாகும். மத்திமப் பிராணயாமத்தினால் நடுக்கம் உண்டாகும். உத்தமப் பிராணயாமத்தினால் உடல் மேலே எழும்புதல் உண்டாகும். இவைகள் ஆனந்தத்தினை உண்டாக்கும். மேற்கூறியவைகள் ஒன்றுக்கொன்று உயர்வு உடையனவாம். (கந்தம் = உடல், கழுத்தடி) (21)

(அறுசீர்விருத்தம்)

273. அகற்ப மல்லதா மந்திர மகத்திலே
யானவா யாமந்தான்
சகற்ப மாம்வியா கிருதியோங்
காரஞ்சா வித்திரி தனைமுக்கால்
வகிக்கு மெல்லையா மிடம்வலம்
வழங்கிய வாயுவை வலமாக
முகக்க வென்றறிந் தவரியோ
கத்திலே முயன்றிட மொழிந்தாரால். (22)
(2.11.34-35)

(கலிவிருத்தம்)

274. ஏசது ருமலிடத்தில்வ ழுங்குகை
மாசது ருமல்வ லத்தினில் வாங்குகை
யாசத றத்திதி யாகவ டக்குகை
ரேசக பூரக கும்பக மென்றார். (23)
(36-37)

(அறுசீர்விருத்தம்)

275. இந்திய மீட்சி தானே யிசைந்திடும் பிரத்யா காரங்
கந்தர மிதய நெற்றி கபாலநா பிகளி லொன்றிற்
சந்ததஞ் சிந்தை வைக்கத் தாரணை தரித்த தேக
சிந்தனை யொழுங்கொன் றேடே சேர்ந்தது தியாந
மாமே. (24)
(38-40)

(கலிப்பா)

276. ஓதுமா லம்பந மொன்று மின்றியே
போதமும் போதகப் பொருளு மென்றுணர்
பேதம தன்றியே யிருந்த பெற்றிநற்
சாதந மாகிய சமாதி யென்பரால். (25)
(41)

273. (பிரணவ முதலிய கீழ்காணும் மந்திர செபம்) அல்லாததாகியது அகர்ப பிராணுயாமமும், பிரணவ முதலிய மந்திரத்திஞல் மனதின்கண் உண்டான நிரோதனம் சகர்பப் பிராணுயாமம் என்றும் சொல்லப்படும். வியாகிருதியோடும் பிரணவத்திஞேடும், சிரசொடு கூடிய சாவித்திரி மந்திரத்தினே மூன்றுமுறை செபிக்கும் மாத்திரையின் எல்லையில், உள்-வெளி என்று பரிணமிக்கும் பிராணனே வலிய கும்பகஞ் செய்க என பிராணுயாமத்தை உணர்ந்தவர்கள் பரயோகத்தின் கண் மனதை ஈர்ப்பதற்காகக் கூறிஞர்கள். (சகர்பம்=விதையுடன்; அகர்பம்= விதையில்லா; வியாகிருதிகள்=ஓம் பூர்புவஸ்ஸுவஹ என்பன) (22)

274. யாதொரு குற்றமுமில்லாது (இடது நாசியில்) பிராணனே விடுதல் ரேசகப் பிராணுயாமம் ஆகும். குற்றமில்லாமல் விட்ட பிராணனே (வலது நாசியில்) இழுத்தல் பூரகப் பிராணுயாமமாம், ரேசகபூரகரேசகமாகச் சுழன்ற பிராணனே குற்றமற நிலேயாக ஸ்தம்பிக்கச் செய்தல் கும்பகப் பிராணுயாமம் என்று கூறிஞர்கள். (23)

275. இந்திரியங்களே விஷயங்களில் செல்ல ஒட்டாது திருப்புதலே இசைந்திடும் **பிரத்யாகாரம்** என்று சொல்லப்படும். கழுத்திலாவது, இருதயத்திலாவது, நெற்றியிலாவது, சிரசினுச்சி யிலாவது நாபி ஸ்தானத்திலாவது ஓர் லக்ஷியத்தில் சதாகாலமும் சித்தத்தை நிறுத்தி பொருந்தியிருத்தல் **தாரணே** என்று சொல்லப்படும். கிரமமாக ஏகமாகிய வஸ்துவைச் சிந்தித்து அபேதமாக இருத்தல் **தியானம்** என்று சொல்லப்படும். (கந்தரம் = கழுத்து) (24)

276. ஒருவிதமான பற்றுக்கோடும் இல்லாது ஞானமும், போதகப் பொருளும் (ஞாதுருவும், ஞேயமும்) என அறிகின்ற பேத பாவனே இன்றி அபேதமாக இருக்குந்தன்மையை, சிரேஷ்டம் பொருந்திய சாதனமாகிய **சமாதி** என்று சொல்லுவார்கள். (ஞாதுரு/ ஞேயம்=அறிவான்/அறிபொருள்) (25)

(அறுசீர்விருத்தம்)

277. தாரணை யாயா மத்திற்
றகுதிபன் னிரும டங்காந்
தாரணை தன்னிற் றியாநந்
தானுமப் படியே நன்றுந்
தாரணி தன்னின் ஞாந
சாதந மாஞ்ச மாதி
யேரணி தியாநந் தன்னி
லேற்றமிப் பரிவே யென்பர். (26)
(2.11.42)

(கலிவிருத்தம்) (தனன தானன தானன தானன)

278. விவத்தி தம்பெற்றி ருக்கைவி ரைந்தெழுங்
கவற்றி தீர்வுறக் கற்பித்த வாதந
மவற்றி னெல்லைய றைவரி தந்தநற்
சுவத்தி கம்பத்ம மியாதினுந் துய்யவாம். (27)
(43)

(வேறு) (தனதன தான தானன தான
தனதன தானன தனதன தான)

279. இருதுடை மேலே யீரடி யேறும்
பரமவி ருப்பது பதுமம தாகு
மொருபத மேலே யொருபதம் வைக்க
மருவவி ருப்பது மத்திம மாகும். (28)
(44, 46)

(வேறு)

280. தடித்த வூருசா நுக்களின் சந்துற
மடித்த வந்தரத் துள்ளேம றையவைத்
தடித்த லங்கள்செவ் வேசெல வாங்குறத்
தொடுத்தி ருத்தல்சு வத்திக மாவதே. (29)
(45)

277. தாரணையானது நிரோதத்தை (பிரத்யாகாரத்தை)க் காட்டிலும் பன்னிரெண்டு மடங்கு உயர்வுடையதாகும். தாரணையைக் காட்டிலும் தியானமும் அவ்வாறே பன்னிரெண்டு மடங்கு உயர்வுடையதாகும். பூமியின்கண் ஞானத்திற்குச் சாதன மாகிய சமாதியானது, உயர்வு பொருந்திய தியானத்தைப் பார்க்கிலும் இவ்வாறே பன்னிரெண்டு மடங்கு உயர்வுடையது என்று சொல்லுவார்கள். (26)

278. விவஸ்த்தையாகப் பொருந்தி இருந்து அதிவிரைவாக உண்டாகின்ற சலனங்கள் நிவிர்த்தி யாகும்படி கற்பிக்கப் பட்டுள்ளது **ஆசனங்களாம்**. அந்த ஆசனங்களின் அளவைச் சொல்ல முடியாது; ஆகையால் அந்த ஆசனங்களில் உயர்ந்தது ஸ்வஸ்திகாசனம், பத்மாசனம், (அர்த்த ஆசனம் என்னும் மூன்றும்) எல்லா ஆசனங்களிலும் பரிசுத்தமானதாம். (27)

279. இரண்டு துடைகள் மீதும் இரண்டு பாதங்களையும் ஏற வைத்துப் பொருந்தியிருத்தல் பத்மாசனம் என்று சொல்லப்படும். ஒரு பாதத்தின் மீது மற்றொரு பாதத்தினை வைத்துப் பொருந்தி யிருப்பது அர்த்த ஆசனம் (அரை ஆசனம்) என்று சொல்லப்படும். (28)

280. பருமனை தொடை முழங்கால்களினது மத்தியில், இடம் இருக்கும்படியாக மடிப்பாக உள்ள ஆகாயத்தில் பாதங்கள் நன்றாகப் பொருந்த மறையும்படிச் செய்தும், அவ்விடத்து அமர்ந்திருத்தல் ஸ்வஸ்திகாசனம் என்று சொல்லப்படும். (29)

(எழுசீர்விருத்தம்)

281. நீரினுற் செழும்ப தானவவ் விடங்க
ணெருப்பினல் வெந்தவவ் விடங்க
ளூருசெந் துக்க டுற்சநர் துரால
ருதிர்ந்திடு சருகுபுற் றிடங்கள்
கோரமாம் பயங்க ளுள்ளிட மிடிந்த
கோயினுற் சந்திகண் மயாந
மாரவா ரங்க ளுள்ளிட மசுத்த
மலக்கணு மநத்தினுக் கதனுல். (30)
(2.11.47-48)

282. வருத்தமா யுடல வாதையைப் பற்று
மநமது நடுநடுங் கிட்டுப்
பொருப்பினிற் குகைகள் புண்ணியதேசங்
கோயில்க ணதிகளின் கரைக
ளிருப்பறு மனைதா னூர்வது கடிப்ப
தின்றியே காந்தமா யுள்ள
வொருத்தரு மறியா விடத்திலே யென்னை
யுன்னுவான் மநனெருப் படுவான். (31)
(49-51)

(கலிப்பா)

283. உன்னரு மியோகொருப் படுவன் முன்னரே
யென்னருள் பெற்றயோ கீசர் தம்மையுஞ்
சென்னியால் விநாயகன் றனையுந் தேசிகன்
றன்னையு மென்னையும் வணங்கிச் சாருவான்.

(32)

(52)

281. ஜலத்தினுலே செழுமையாக உள்ள குளிர்ச்சி பொருந்திய அந்தவிடத்திலும், அக்னியால் வெந்து வெப்பமாயுள்ள அந்த இடத்திலும், சதா ஊர்ந்து திரிகின்ற பாம்பு, தேள், எறும்பு முதலிய உள்ள இடத்திலும், கெட்டஜனங்கள் வசிக்கப்பட்ட இடத்திலும், துரும்புகள் குவிந்துள்ள இடத்திலும், உதிர்ந்து கிடக்கின்ற வெண்மையான சருகுகளுள்ள இடத்திலும், பாம்புப் புற்றுக்கள் உள்ள இடத்திலும், கோரசொரூபமாயுள்ள புலி, கரடி, சிம்மம் முதலிய பீதிக்கு ஏதுவாயுள்ளவிடத்திலும், இடிந்து கிடக்கின்ற பாழுங்கோயில்களிலும், நான்கு பாதைகள் சேருமிடத்திலும், ச்மசானத்திலும் சதா சந்தடியாக உள்ள இடத்திலும், அசுத்தமானவிடத்திலும், யோகாப்யாசஞ் செய்யும் காலத்தில் மனதிற்கு துக்கம் உண்டாகும். (*குளகம்*) (30)

282. சரீரம் வருத்தத்தோடு தொந்திரவைப் பொருந்தும். மனமானதும் நடுக்கத்துடன் பீதியையும் அடையும். ஆதலால் இப்படிப்பட்ட இடங்கள் சமாதிக்கு யோக்கியமாகா. மலைகளின் மீதும், குகைகளிலும், (குருக்ஷேத்திரம் முதலிய) புண்ணிய பூமியிலும், பரிசுத்தமான ஆலயங்களிலும், நதி தீரங்களிலும், ஒருவரும் இல்லாத தனியாயுள்ள வீட்டிலும், கரையான், எறும்புகள் போன்ற ஊர்வன இல்லாத இடங்களிலும், பன்றி, நாய், நரி முதலிய கடிக்கக்கூடிய பிராணிகள் இல்லாத இடத்திலும், ஏகாந்த ஸ்தானத்தில், ஒருவரும் பார்க்கக் கூடாத இடத்தில் பரமேசுவரனுகிய என்னைத் தியானிப்பவன் மனத்தின் ஏகாக்கிரமாகிய சமாதியை அடைவான். (31)

283. மனத்தால் இத்தன்மைத்தென்று கருதமுடியாத யோகத்தினைச் செய்ய முயற்சிப்பவன், முதலில் எனது கிருபையை அடைந்துள்ள யோகீசர்களையும், விக்கினகர்த்தா வாகிய கணேசரையும், தனது குரு மூர்த்தியையும், பரமேசுவரனுகிய என்னையும், சிரசின்மீது இருகைகளையும் கூப்பி நமஸ்கரித்து ஆரம்பிப்பான். (32)

(அறுசீர்விருத்தம்)

284. தனியி லிருந்து பயமின்றிச்
சாந்த ஞகித் தனக்கிசையு
முநிவர் மொழியு மாதநங்கண்
மூன்றி ஞென்றி லேமூக்கி
னுநியைச் சிறிதே கண்விழித்து
நோக்கி யாது நோக்காதே
யினிய தன்பா லேயிருந்த
வென்னைப் பாவிப் பதுயோகம். (33)
(2.11.53-54)

(வேறு)

285. பங்கயந் தலைக்கு மேலே பன்னிரு விரலிற் கற்பித்
தங்கதற் கறமென் மூல மறிவது நாள மாகுந்
தங்கிடுஞ் செல்வ மெட்டுத் தளநிறந் தவள மாகு
மிங்குதன் வலிவை ராக்ய மெணட்டு தாதி தன்கண். (34)
(55-56)

286. சகலசத் தியுமு டைத்தாய்த்
தமநிய மயமாய்த் தாரம்
புகலுமெப் பொருளா யென்றும்
பொன்றுமு தாகி யெங்குந்
திகழொளித் திரளா யுள்ள
தெய்வமாய்த் தெரிக்கொ ணுதாய்
நிகழுதற் பரத்தி னேரே
நித்தலு நெஞ்சை வைப்பான். (35)
(57-58)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

287. மிக்கபரஞ் சுடரான விமலனையும் விளம்புற்ற
வக்கமலத் தேதனையு மயலாகா வகைநினைவா
னக்கரமாம் பரமாகா சத்துவனைத் தானெங்கு
மொக்கநினைந் தேபின்னை யொன்றுநினை
யாதொழிவான் (36)
(59)

284. ஏகாந்தனுகையிருந்து, நிர்ப்பயனுய் மனதில் சாந்தியை உடையவனுய், மகான்களால் சொல்லப்பட்ட பத்மாசனம், ஸ்வஸ்த்திகாசனம், அர்த்தாசனம் ஆகிய மூன்றில் தனக்குக் கைவந்த ஓர் ஆசனத்தில் அமர்ந்து, கொஞ்சமாக கண்களேத் திறந்து, நாசியின் நுனியைப் பார்த்து மற்றவற்றைப் பாராது, ஆனந்த சொரூபனுகிய, தானுக உறும் சிவமாகிய என்னேத் தியானிப்பது யோகம் என்று சொல்லப்படும். (33)

285. சிரசிற்கு மேலே பன்னிரண்டங்குல அளவில், ஒரு தாமரைப் புஷ்பத்தைக் கற்பனே செய்து, அவ்விடத்து அந்த தாமரை புஷ்பத்திற்கு தர்மமென்பது கிழங்காம், ஞானமானது கொடியாம், நிலேயாகப் பொருந்தியுள்ள ஐசுவரியம் அஷ்ட இதழ்களாம், அதன் வர்ணம் வெண்மை நிறமாம், இவ்விடத்தில் தன்னுடைய வலிமை பொருந்திய வைராக்கியம் கர்ணிகையாம் என்று கூறப்படுகிறது. அந்தத் தாமரைமலரில் .... (குளகம்) (34)

286. சகல சக்திகளேயும் உடையதாய், ஸ்வர்ணமயமாய், பிரணவத்திற்சொல்லும் எல்லா வஸ்துவாகவும், காலத் திரயத்திலும் நாசமில்லாததாய், எல்லாவிடங்களிலும் விளங்கும் பிரகாசக் கூட்ட ரூபமாயுள்ள தெய்வமாக, அஞ்ஞானிகளால் அறியமுடியாததாய் நின்ற அந்தப் பிரமனிடத்தில் நாடோறும், சாக்ஷாத்தாக மனதை வைத்துச் சிந்திப்பான். (தாரம் = கரையேற்றும் தாரகம்) (35)

287. முன்னர்க்கூறிய அந்த தாமரை மலரில் உயர்வினே உடைய பூரணப் பிரகாசமான பிரமத்தினேயும், கூடஸ்தனுகிய தன்னேயும், வேறுபாடின்றி அபேதமாக ஸ்மரிப்பவன், அக்ஷரமாகிய சிதாகாச ரூபனே எல்லாவிடங்களிலும் வியாபகமாகப் பார்த்து, பின்பு யாதொன்றும் சிந்திக்காது அதிலேயே லயித்திருப்பான். (36)

(கலிப்பா)

288. யாவரு மறிவரி தாய பாவனே
மேவுற விளம்பினன் வேறு மின்னமோர்
பாவனே கேண்மின்முன் பன்னு பங்கயப்
பூவினே யுன்னியப் பூவி னுள்ளதாம். (37)
(2.11.60)

289. அந்நிய மறவந லோனேக் காட்டிய
பன்னிய புருடனும் பஞ்ச விஞ்சகன்
றன்னேயே சகலகத் தாவாத் தன்னுரு
வன்னியின் சிகையதா மதித்து நோக்குவான். (38)
(61)

(வேறு)

290. அவமறு புருடன்ற னகமுற வறநன்றுய்ச்
சிவமம லமதாகித் திகழ்தரு பரமாந்மா
வுவமையில் பரனுமென் னுரையினி லுணருந்தத்
துவநிலே குலேயாவச் சுதமென மநம்வைப்பான்
(39)
(62)

(அறுசீர்விருத்தம்)

291. அப்பர மாந்மா வுள்ளே யதனுக்கா தார மாகி
நிற்பதாய்ப் பரம மாகி நிரஞ்சந மாகி யுள்ள
வொப்பரு மகேச னேக வுருவனு யுன்னி யந்தத்
தற்பரந் தன்னே டொன்றுந் தன்மைய னுகிச் சார்வான்.
(40)
(63, 64a)

292. சொன்னதத் துவங்க ளெல்லாஞ்
சோதனே பண்ணிப் பின்னேப்
பிந்நதத் துவமொன் றில்லாப்
பிரமாநா னெனநி னேந்து
பன்னரு மோங்கா ரத்தாற்
பரமமாம் பரமா யுள்ளான்
வென்னிலே தன்னே வைத்திங்
கென்மய மாகி யுள்ளான். (41)
(64b-66a)

288. ஒருவரும் உணரமுடியாததாகிய பாவனையைப் பொருந்த உங்களுக்குக் கூறினேன். மேலும் வேறு ஒரு பாவனையை யாம் கூறக் கேளுங்கள். முன்னர் கூறிய தாமரை மலரை மனதில் பொருந்தி, அந்த தாமரை மலரிலுள்ளதாம் *(குளகம்)* (37)

289. . . . வேறுபாடற்ற அக்னி ரூபமாகக் காட்டிய (தெரிசிப்பித்த), முன்னர்க்கூறிய புருஷனாகிய இருபத்தைந் தாவது தத்துவமாகிய பிரமனையே சர்வத்திற்கும் கர்த்தாவாகவும் தன்னுடைய சொரூபத்தை, அக்னியினது சிகையாகவும் பாவித்துப் பார்ப்பான். (சிகை=சுடர், முடி) (38)

290. "குற்றமற்ற அப்புருடனே என்னுள் மிகவும் செவ்வையாக நின்மலமாகத் திகழும் பரமான்மா. அதுவே உவமை இல்லா பரதத்துவம். அதுவே (இச்சிவ) உபதேச வாயிலாக உணரப்படும் நிலை வழுவா அச்யுத பதம்" என திடமாகப் பாவிப்பான். (39)

291. அந்தப் பரமாத்ம பாவனை உடையவன்), உள்ளே அதற்கு ஆதாரமாகி யிருந்து, உயர்வினை உடையதாய், களங்கம் இன்றியிருக்கின்ற சமான ரகிதமான பரமேசுவரனை அத்வைதரூபனைகச் சிந்தித்து, அந்த பரதத்துவத்தினோடு ஒன்றி அபேதமாகும் தன்மையை உடையவனாய் ஐக்கியமாவான். (40)

292. கூறிய தத்துவங்கள் யாவற்றையும் பிரித்துச் சோதித்துப் பார்த்து, பின்னர் ஒரு பிறந்த தத்துவமும் இல்லாத பிரமமே அஹம் என்று கருதி, சொல்லுதற்கு அரிய பிரணவத்தினால் மேலுக்கெல்லாம் மேலாய் உள்ள பிரம ரூபமாகிய என்னில் கூடஸ்தனை ஐக்கியஞ் செய்து, இவ்விடத்து என் சொரூபமாய் இருப்பான். (41)

(கலிவிருத்தம்)

293. நலங்கொள் ஞாநநீ ராடிநல் லாகுதி
துலங்கு நீற்றையுத் துளித்து மந்திர
மிலங்கு மங்கிமு தனினைந் தீசனைப்
புலங்கொள் சோதியின் புஞ்சமா யுன்னுவான். (42)
(2.11.65, 66b)

(கலிசந்தவிருத்தம்)

294. ஆசிரம மேலிலதி யாசிரம மாகத்
தேசுதரு மாமறையி னீறுகடை ரிந்தே
பாசுபத யோகுபசு பாசமற நேரே
பேசினனி தாருமறி யப்பெறும தன்றால். (43)
(68a-67)

(கலிப்பா)

295. பிறிதறு மெனதுசா யுச்சம் பேறதா
மறைபொருள் கேவலம் வழங்கி டாரிது
வறமுய லந்தணர் தம்மி லன்பரிற்
றுறவுறு பிரமசா ரிகட்குஞ் சொல்லலாம். (44)
(68b-69)

(கலிவிருத்தம்)

296. பரியுமகிஞ்சைப் பழிதீர் பிரம
சரியந் தவந்தரு சந்தோட முண்மை
யுரியபொ றைதூய்மை யுண்டென்றி ருக்கை
யரியவி ரதத்துக் கங்கங்க ளாமால். (45)
(70d)

(கலிப்பா)

297. எண்ணிய விவற்றிலொன் றீந ஞனவன்
றண்ணிய ஞதலாற் றன்ன முவினன்
புண்ணிய வினையினோர் பொருந்த வென்னையே
கண்ணிய விரதமெஞ் சாமற் கைக்கொள்வார். (46)
(70b-71)

293. நன்மையைக் கொடுக்கின்ற ஞானமாகிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, நல்ல அக்னிஹோத்திரத்தில் விளங்குகின்ற விபூதியை ("அக்னி ராதித்திய" என்பதாதியான) மந்திரத்தைச் சொல்லி சரீரமுழுமையும் உத்தூளனமாகப் பூசி, பரமேசுவரனை அந்தக்கரணத்தில் அறிவிற் கொள்ளும்படியான பிரகாசக் கூட்டமாய் சிந்திப்பான். (42)

294. இதற்குமேல் ஆசிரமம் இல்லாத அத்யாசிரமமாய், பிரகாசம் பொருந்திய பெரிய வேதங்களினது முடிவாக உள்ளதை அறிந்து (அப்) பாசுபத யோகத்தினால் ஜீவனுக்குள்ள பாசம் எல்லாம் நீங்க உங்களுக்கு நேரே நான் உபதேசித்தேன். இதனை எவரும் அறியத் தக்கதன்றாம். (43)

295. பேதபாவனைகள் நீங்கிய என்னுடைய சாயுஜ்யமாகிய பதவியே பிரயோஜனமாம். இது இரகசியமான அர்த்தமாம். இதனை கேவலம் எல்லாருக்கும் சொல்ல மாட்டார்கள், தர்மத்தில் பிரவிர்த்திக்கின்ற பிராமணர்கட்கும், எனது பக்தர்கட்கும், துறவினையடைந்தள்ள பிரமச்சாரி களுக்கும் உபதேசிக்கலாம். (44)

296. விரும்பத்தக்க அகிம்சையும், குற்றமற்ற பிரமசரியமும், தவமும், உண்டாகின்ற சந்தோஷமும், சத்தியமும், உரியதாயுள்ள பொறை(க்ஷமை-திதிக்ஷை)யும், சரீரமனோசௌசமும் (தூய்மையும்), ஆஸ்த்திக்யமும் (நிலையானதுண்டு எனும் உறுதி) ஆகிய இவை, அருமையான தவத்திற்கு **எட்டு அங்கங்களாம்.** (45)

297. கருதப்பட்ட இவ்வங்கங்களில், ஒன்றில் குறைந்தவன் தாழ்ந்தவன் ஆவான்; ஆகையால் இந்த விரதத்தை அடையாதவனாகின்றான். மிகுந்த புண்ணிய முடையவர்கள் பரமேசுவரனாகிய என்னையே, முன் சொல்லிய (பகிரங்க எட்டு) சாதனங்களை உடையவராய், கனமான தவத்தினைக் குறைவு பாடின்றிக் கூடி அடைவார்கள். (46)

(கலிவிருத்தம்)

298. ஏசி லிந்தவி யோகாலெ னையடந்
தாசை கோபம்ப யமற்ற வான்மராய்ப்
பாச மற்றெனைப் பாவித்த பாவத்தா
லாசி லென்மய மாஞரை நேகரால். (47)
(2.11.72a)

(கலிப்பா)

299. எப்படி யார்நினைந் தடைவ ரியானவர்க்
கப்படி யானிகழ்ந் திடுவ னுதலா
லொப்பரு ஞானமெய் யோகு ளத்தெனைத்
தப்பரும் பூசனை செயவே தக்கதாம். (48)
(72b-73)

(அறுசீர்விருத்தம்)

300. பொய்யில் பத்தி யாற்றுறவாற்
போதம் பொருந்தும் புந்தியினுற்
செய்யும் பூசை யேபூசை
செய்யுந் தொழில்க ளெல்லாம்விட்
டய்யம் பண்ணி யுண்டொன்று
மாசைப் படாதா ரெனையடையு
முய்யும் பரிசு மறைந்தபொரு
ளுங்கட் கிரங்கி யுரைத்தனனுல். (49)
(74)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

301. பத்தியையென் பாலுடையா
னெவ்வுயிர்க்கும் பரிவுடையா
னுத்தநலந் தீங்கடையா
னுடுங்கியவுள் ளமதுடையான்
புத்திமந மென்பாலே
பொருந்திய பாவனையுடையா
னெத்தனையும் பொறையுடையா
னியாவரினு மெனக்கினியான். (50)
(75)

298. நிந்தனை இல்லாத இந்த யோகத்தினால் பரமேசுவரனாகிய என்னையடைந்து, ஆசையும் கோபமும் பயமும் இன்றியவர்களாய்; பந்தம் நீங்கி, என்னை பாவனை செய்த தன்மையினால் குற்றமற்ற எனது சொரூபமாகவே அநேகம் பேர் ஆனார்கள். (47)

299. பரமேசுவரனாகிய என்னை யாவர் எவ்வாறு ஸ்மரித்து அடைவார்களோ அவ்வாறே நானும் அவர்களுக்கு விளங்கிடுவேன். ஆகையினால் சமான ரகிதமான உண்மை ஞானமாகிற யோகத்தினையுடைய மனதில் என்னை, நிர்த்தோஷமாக பூசை செய்யத்தக்கதாம். (48)

300. உண்மையான பக்தியினாலும், சர்வ சங்கப் பரித்தியாகமாகிய சந்நியாசத்தாலும், ஞானமுடைய புத்தியினாலும் செய்கின்ற பூசையே ஞான பூசையாகும். மனோ வாக்கு காயங்களால் செய்யப்பட்ட சர்வ கிரியைகளையும் ஒழித்து, கையில் பிச்சையேற்றுப் புசித்து, ஒன்றிலும் ஆசையில்லாதவர்கள் என்னை அடைவார்கள். இந்த இரகசியார்த்தத்தை உங்களிடத்தில் கிருபை கூர்ந்து மோக்ஷத்தினை அடையும் படியாக நான் உபதேசித்தேன். (49)

301. பரமேசுவரனாகிய என்னிடத்து பக்தியை உடையவனும், சர்வ ஜீவர்களிடத்தும் பிரியமுடையவனும், சுகமும் துக்கமும் சமமாக அடையாதவனும், அடக்கத்தோடு கூடிய மனதினை உடையவனும், புத்தியும் மனமும் என்னிடத்து பொருந்தியுள்ள பாவனையை உடையவனும், எதனிடத்தும் திதிக்ஷை (பொறை) உடையவனும் யாவனோ அவன் எல்லாரிலும் எனக்கு விரும்பத் தக்கவனாவன். (50)

302. பன்னியயோ கொழிவில்லான்
பற்றிலான் பாவகத்தோ
ரின்னலிலா ஞரம்பித்
திடுவதூஉ மொழிவதிலான்
றன்னேவெரு வுதலொன்றற்
முன்வெருவ முனில்லா
னென்னதியா னெனவில்லா
னென்றுமெ னக்கினியான். (51)
(2.11.76-77)

(கலிப்பா) (தனன தானஞ தான தானஞ)

303. துயரு முதசந் தோட மேவியே
செயலெ லாமுதா சீந ஞகியே
யயல ராயிஞ ரன்ப ரின்றிவா
ழியல்பி ஞனெனக் கினிய ஞயிஞன். (52)
(78)

(கலிவிருத்தம்) (தனன தானஞ தானஞ தானஞ)

304. துதியி னிந்தையிற் றுல்லிய ஞயெனிற்
றிதிய டைந்துசி னஞ்செருக் கின்றியே
மதியி ஞென்றினும் வாஞ்சையு முதுள
வதிக வானெனக் கென்றுமெய் யன்பிஞன். (53)
(79)

(கலிப்பா) (தானஞ தனதஞ தஞதஞ தனதஞ
தானஞ தானஞ தான தானஞ)

305. வாடலின் முகமது மலர்ச்சியு மவுநநற்
பீடுறு வித்தகம் பெற்ற தோடலங்
கூடுத லினியவை கூறலி யாவரு
நாடரு நிலேயுடை யவர்க்கு நல்லஞன். (54)
(80)

302. முன்னர் கூறிய யோகத்தின் கண் நிரந்தரம் அப்யா சிப்பவனும் யாதொரு பந்தமுமில்லாதவனும், பவித்திர முடையவனும், ஒரு துன்பமில்லாதவனும், ஒன்றைச் செய்ய பிரயத்தினம் செய்வதும் செய்யாதிருப்பதும் இல்லாதவனும், ஒரு ஜந்துவால் தன்னை பயப்படச் செய்வதும், தான் ஒன்றினுலே பயப்படுவதும் இல்லாதவனும், அகந்தா மமதா ரூபமான அபிமானம் இல்லாதவனும் எப்பொழுதும் எனக்கு பிரியமுடையவனுவன்.

(51)

303. துன்பமின்றிய சந்தோஷத்தினை பொருந்தி கருமங்கள் எல்லாவற்றிலும் உதாசீனத்தன்மை உடையவனுகி, தனக்கு அன்பர் அன்னியமாயுடையவர்கள் இல்லாது வாழுகின்ற தன்மையினை யுடையவன் யாவனே அவன், எனக்கு பிரிய முடையவனுயினன்.

(52)

304. புகழ்ச்சியிலும், நிந்தனையிலும், சமமுடையவனுயும் பரமேசுவரனுகிய என்னிடத்தில் நிலைபெற்று, கோபமும் கர்வமும் இல்லாதவனுயும், புத்தியினுல் ஒரு பொருளிடத்தும் பிரிய மின்றி உள்ள மேன்மை பொருந்தியவன் யாவனே அவன் எப்பொழுதும் எனக்கு உண்மையான பிரியமுடையவனுவன்.

(53)

305. முகமானது வாட்டமின்றி சந்தோஷமுடையவனுகியும், மௌனமுடையவனுகியும், பெருமை பொருந்திய நல்ல ஞானமுடையவனுகியும், கிடைத்ததைக் கொண்டு திருப்தி யோடிருத்தலும், இன்சொல் பேசுதலும், எப்படிப்பட்டவரும் கருதுதற்கு அரியதன்மையினை உடையவருமாயுள்ளவர்க்கு நல்லருள் பாலிப்பவன் நான். (54)

(கலிப்பா) (தானதன தானதன தானதன தான)

306. எத்தொழில்க ளுஞ்செயினு மென்னருளி னலென்
பத்தர்பர மப்பதம டைந்திடுவ ராலே
தத்துவமும் வைத்தெனிலெ னைச்சரண மாக
நித்தமுநி ராசையைய டைந்துநினை கிற்பார். (55)
(2.11.81-82)

(அறுசீர்விருத்தம்)

307. அடங்கு மநனய்ப் பயனென்றி
லாசைப் படாதா னளவற்ற
விடங்கொள் வினைகள் செய்தாலும்
வீடே யெய்து மாதலினு
லுடம்பு காண நல்யோகி
யுண்டாம் வினையா லொருகாலு
மிடும்பை யடையா னைசப்பா
டில்லா னெனையே யடைந்திடுமால். (56)
(83-84)

(கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தான)

308. துற்றுவரு தொந்துவம யக்கவைது டைத்துப்
பெற்றதொட மைந்தெனருள் பேறுறநி னைந்தே
யுற்றகரு மங்கள் வினை யென்னவுரை செய்யார்
கற்றவர்கள் வீடதென வேகருது கின்றார். (57)
(85)

(கலிநிலைத்துறை) (தான தானன தனதன தனதன தான)

309. என்னை யேநினைந் தெனைப் பணிந்தெனையருச்
சித்தென்
றன்னை யேயறிந் தவனெனை யன்றியே சாரான்
பின்னி யாதுமப் பெருந்தகை யிருந்திடந் தனிலென்
சென்னி யாற்சுமந் தவர்க்கு வேண் டுவதுசெய்
குவனல். (58)
(86, 89)

306. என்னுடைய பக்தர்கள் பரமேசுவரனாகிய என்னிடத்தில் ஸ்திர புத்தியினை வைத்து என்னை அடைக்கலமாக அடைந்து, நாடோறும் ஒன்றிலும் ஆசை அற்றவராய் இருந்து, தியானிப்பவர்களாய், எப்படிப்பட்ட கருமங்களையும் இயற்றின ராயினும், என்னுடைய கிருபையினால் அவர்கள் பிரமபதத்தை அடைவார்கள். (55)

307. ஒடுங்கிய மனதுடையவனாய், செய்யப்பட்ட கர்மங்களின் பலன் ஒன்றிலும் அபேக்ஷையற்றவன், அளவு அற்ற (கணிக்கக் கூடாத) விஷத்திற்குச் சமமான கெட்ட கருமங்களைச் செய்யினும் மோக்ஷத்தினையே அடைவன். ஆகையினால் சரீரத்தில் அபிமானம் இன்றிய மேன்மை பொருந்திய யோகியானவன் செய்த புண்ணியபாப கர்மங்களினால் ஓர் பொழுதும் துன்பத்தை அடையான். நிராசையுடையவனாய் என்னையே அடைவன். (56)

308. ஒன்றோடொன்று சம்பந்தித்து வருகின்ற இரண்டி ரண்டாகிய சுகதுக்கம், புண்ணியபாவம், ஜனனமரண முதலிய மயக்கங்களை நீக்கி, (பிராப்த வசத்தால்) கிடைத்ததைப் பொருந்தித் திருப்தனாய், எனது கிருபையாகிய பிரயோஜனத்தைப் பொருந்த ஸ்மரித்து செய்யப்பட்ட கருமங்களை வித்வான்கள் கருமம் என்று கூறார்; பிராரத்த வசத்தால் செய்யும் அக்கருமங்களை மோக்ஷ (மார்க்கம்) என்றே நினைக்கின்றார்கள். (57)

309. மனதில் என்னையே தியானித்து, காயத்தால் என்னையே நமஸ்கரித்து, வாக்கால் என்னையே அர்ச்சனை செய்து எனது பிரம சொரூபத்தை உணர்ந்தவன், பரமேசுவரனாகிய என்னைத் தவிர வேறு கீழ் தேவதைகளை அடையான். மேன்மை பொருந்திய அம்மகான் இருக்குமிடத்திலேயே அந்த ஞானிக்கு அன்றாடம் வேண்டுவது (யோகக்ஷேமம்) எவற்றையும் எனது சிரசில் தாங்கிக் கொண்டு போய் கொடுப்பேன். (58)

(கலிப்பா) (தானதன தானதன தானதன தான)

306. எத்தொழில்க ளுஞ்செயினு மென்னருளி னலென்
பத்தர்பர மப்பதம டைந்திடுவ ராலே
தத்துவமும் வைத்தெனிலெ னைச்சரண மாக
நித்தமுநி ராசையைய டைந்துநினை கிற்பார். (55)
(2.11.81-82)

(அறுசீர்விருத்தம்)

307. அடங்கு மநனய்ப் பயனென்றி
லாசைப் படாதா னளவற்ற
விடங்கொள் வினைகள் செய்தாலும்
வீடே யெய்து மாதலின
லுடம்பு காண நல்யோகி
யுண்டாம் வினையா லொருகாலு
மிடும்பை யடையா னசைப்பா
டில்லா னெனையே யடைந்திடுமால். (56)
(83-84)

(கலிவிருத்தம்) (தானதன தானதன தானதன தான)

308. துற்றுவரு தொந்துவம யக்கவைது டைத்துப்
பெற்றதொட மைந்தெனருள் பேறுறநி னைந்தே
யுற்றகரு மங்கள் வினை யென்னவுரை செய்யார்
கற்றவர்கள் வீடதென வேகருது கின்றார். (57)
(85)

(கலிநிலைத்துறை) (தான தானன தனதன தனதன தான)

309. என்னை யேநினைந் தெனைப் பணிந்தெனையருச்
சித்தென்
றன்னை யேயறிந் தவனெனை யன்றியே சாரான்
பின்னி யாதுமப் பெருந்தகை யிருந்திடந் தனிலென்
சென்னி யாற்சுமந் தவர்க்கு வேண் டுவதுசெய்
குவனல். (58)
(86, 89)

306. என்னுடைய பக்தர்கள் பரமேசுவரனாகிய என்னிடத்தில் ஸ்திர புத்தியினை வைத்து என்னை அடைக்கலமாக அடைந்து, நாடோறும் ஒன்றிலும் ஆசை அற்றவராய் இருந்து, தியானிப்பவர்களாய், எப்படிப்பட்ட கருமங்களையும் இயற்றினராயினும், என்னுடைய கிருபையினால் அவர்கள் பிரமபதத்தை அடைவார்கள்.

(55)

307. ஒடுங்கிய மனதுடையவனாய், செய்யப்பட்ட கர்மங்களின் பலன் ஒன்றிலும் அபேக்ஷையற்றவன், அளவு அற்ற (கணிக்கக் கூடாத) விஷத்திற்குச் சமமான கெட்ட கருமங்களைச் செய்யினும் மோக்ஷத்தினையே அடைவன். ஆனபடியினால் சரீரத்தில் அபிமானம் இன்றிய மேன்மை பொருந்திய யோகியானவன் செய்த புண்ணியபாப கர்மங்களினால் ஓர் பொழுதும் துன்பத்தை அடையான். நிராசையுடையவனாய் என்னையே அடைவன்.

(56)

308. ஒன்றேடொன்று சம்பந்தித்து வருகின்ற இரண்டிரண்டாகிய சுகதுக்கம், புண்ணியபாவம், ஜனனமரண முதலிய மயக்கங்களை நீக்கி, (பிராப்த வசத்தால்) கிடைத்ததைப் பொருந்தித் திருப்தனாய், எனது கிருபையாகிய பிரயோஜனத்தைப் பொருந்த ஸ்மரித்து செய்யப்பட்ட கருமங்களை வித்வான்கள் கருமம் என்று கூறார்; பிராரத்த வசத்தால் செய்யும் அக்கருமங்களை மோக்ஷ (மார்க்கம்) என்றே நினைக்கின்றார்கள்.

(57)

309. மனதில் என்னையே தியானித்து, காயத்தால் என்னையே நமஸ்கரித்து, வாக்கால் என்னையே அர்ச்சனை செய்து எனது பிரம சொரூபத்தை உணர்ந்தவன், பரமேசுவரனாகிய என்னைத் தவிர வேறு கீழ் தேவதைகளை அடையான். மேன்மை பொருந்திய அம்மகான் இருக்குமிடத்திலேயே அந்த ஞானிக்கு அன்றாடம் வேண்டுவது (யோகக்ஷேமம்) எவற்றையும் எனது சிரசில் தாங்கிக் கொண்டு போய் கொடுப்பேன்.

(58)

310. என்ப தத்தைவிட் டிதரதே வதைகளேக் காமித்
தின்பம் வேண்டுனர் தாமுமிங் கிதனேயெய் துவரா
லன்பி னலருண் மூர்த்திவேண் டுனர்களு மவர்பாற்
பின்பு வந்தெனே யறிந்துநன் முத்தியே பெறுவார்
(59)
(90-92)

(வேறு) (தானன தான தனதன தான தானனை)

311. சாமவ ரெந்தக் கடவுள ருஞ்சா வில்லாதென்
றமம தாமென் றென்னேயொ ழிந்தார் தமைவிட்டன்
பாமக வாதிச் சுற்றமும் விட்டென் பாலன்பா
யாமர ணந்தத் தளவுமி லிங்கத் தருச்சிப்பான். (60)
(93)

312. எந்தப் பதமுங் காதலி லாதே லிங்கத்தே
வந்திப் பவன்ஞா நாத்மக மாகிம யலற்றேன்
சிந்தைக் குளதா யெங்குந் தானஞ் சிவலிங்க
மந்தச் செநநந் தனிலே யறிவா லடைகின்றான். (61)
(94)

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

313. பங்கமில் பத்தி யோகுமற் றெவரும்
பாவனே யாலிலிங் கத்தே
யிங்கெனே யிறைஞ்சி லின்பமெய்ஞ் ஞாந
மெங்குமா மிலிங்கமெய் துவரா
லங்கியிற் புனலி லம்பரந் தன்னி
லருக்கனி லனிலனிந் துவினி
லிங்கிவை யிலிங்க மாரண தியிலே
யெனேநினேந் திறைஞ்சிடப் படுவான். (62)
(95-97)

310. என்னுடைய சாயுஜ்ய பதவியை நீங்கி, வேறு தேவதைகளை வழிபாடு செய்து சுகத்தை விரும்புகின்றவர்களும் இவ்விடத்து இந்த சுகத்தை அடைவார்கள். பக்தியினால் அனுக்கிரகத்தினை அந்த தேவதைகளிடத்து விரும்பியவர் களும், அவர்களிடத்து அடையப் படாவிடின், பின்னர் என்னிடத்து பக்தி செய்து எனது சொரூபத்தை உணர்ந்து உயர்வினையுடைய மோக்ஷத்தினையே அடைவார்கள். (59)

311. எல்லாத் தெய்வங்களும் காலாந்தரத்தில் நாசமடைவார்கள். என்னுடைய தாம (ஸ்தான)மானதுதான் நாசமின்றியதாம் என உணர்ந்து, பரமேசுவரனாகிய எனக்கு வேறாயுள்ள அன்னிய தேவதைகளை ஒழித்து, பிரியமாயுள்ள பிள்ளை முதலிய சுற்றத்தையும் நீங்கி, என்னிடத்து பக்தியோடு எனது லிங்கத்தினிடத்தில் கர்மவசத்தால் உண்டாகின்ற மரணமாகிய அந்திய காலம் வரையும் பூசித்து எனது பதவியை அடைவான். (60)

312. எப்படிப்பட்ட உயர்ந்த பதவியினையும் அபேக்ஷியாது என்னுடைய லிங்கத்தை மனோவாக்கு காயத்தால் வழிபாடு செய்பவன், ஞான சொரூபமாய் மயக்கம் நீக்கியவன்; தன் சித்தத்தில் பொருந்தியதாய் எவ்விடங்களிலும் தனது ரூபமாகிய சிவலிங்கத்தினை அந்த ஜென்மத்திலேயே ஞானத்தினால் அடைந்தவனாகின்றான். (61)

313. குற்றமற்ற பக்தியினோடும் யாவரும் பாவனையினாலே இவ்விடத்து பரமசிவனாகிய என்னை லிங்கத்தின் கண்ணே நமஸ்காராதி வழிபாடு செய்யின், ஆனந்தத்தினையும் சர்வ வியாபகமாயுள்ள லிங்கமாகிய உண்மை ஞானத்தினையும் அடைவார்கள். என்னை அக்னியிலும், ஜலத்திலும், ஆகாயத்திலும், சூரியனிலும், வாயுவிலும், சந்திரனிலும் வேதம் முதலியவைகளிலே சொல்லியிருத்தலின் இவைகளை லிங்கம் என்று பரமேசுவரனாகிய என்னை பாவனை செய்து வணங்கிடுவானாக. (62)

(கலிவிருத்தம்)

314. ஈதெ லாம்வெறும் லிங்கம யமதா
மீதெ லாமிலிங் கத்துளி ருப்பதா
மாத லாலந்த லிங்கமெங் கேயங்கே
காத லாற்றொழ வேகட னுகுமால். (63)
(98)

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

315. கருத்திலா மூடர் காட்டமா திகளிற்
காண்பர்கற் றவர்களா காயத்
தருக்கனிற் புனலிற் காண்ப ராகுதியி
லருச்சனை செய்யுமந் தணரவ்
வெரிக்கணே காண்ப ரெங்குமாய் நின்ற
வென துலிங் கத்தினை நேரே
யொருக்கிய பரம யோகிக ளென்று
மொழிவறக் காண்பர்தம் முளத்தே. (64)
(99)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

316. நீங்காத காதலினு னின்மலபோ தம்பயக்கு
மோங்கார மாதலினல் லுருத்திரியந் தானுதல்
பாங்காக வத்யயந வானுகிப் பரித்தவுடல்
போங்காலத் தளவுநிரந் தரயோகம் புரிந்திடுவான்.
(65)
(100-101)

(கலிநிலைத்துறை)

317. காமர மெங்குங் காமர கன்றூர் காசிக்கே
யாமர ணுந்தத் தளவுமி ருப்பா ரங்காவி
போமள வுற்றார் போய்வர வுற்றார் புரையற்றோர்
காமரை வென்றார் தாமரை வென்றார் கழல்கண்டே.
(66)
(102)

314. இப்பொழுது கூறிய யாவும் கேவலம் லிங்க சொரூபமாகும். இந்தப் பிரபஞ்சம் யாவும் எனது லிங்கத் துள்ளே இருப்பதாகும். ஆகையினால் அத்தகைய லிங்கம் எங்கேயோ அவ்விடத்து பிரியத்தோடு வணங்குவதே கடமையாகும். (63)

315. சர்வ வியாபகமாகயிருக்கின்ற என்னுடைய லிங்கத்தினை, தாத்பரியத்தினை அறியாத மூடர்கள் மரக்கட்டை பொம்மை முதலியவற்றில் பார்ப்பார்கள். படித்த விவேகிகள் ஆகாயத்திலும் சூரியனி டத்தும் ஜலத்திலும் பார்ப்பார்கள். ஆகுதியில் அருச்சனை செய்கின்ற பிராமணர்கள் அந்த அக்னிஹோத்ர அக்னியில் பார்ப்பார்கள். மனோ நிக்ரகஞ்செய்துள்ள மேலான யோகிகள் எப்பொழுதும் தமது இருதயத்திலேயே இடையீடின்றி சாக்ஷாத்தாக பார்ப்பார்கள். (64)

316. தன் மாறுத பக்தியினால், நின்மலமாகிய ஞானத்தை கொடுக்கின்ற பிரணவமானபடியால் சிரேஷ்டம் பொருந்திய ஏகாதச ருத்திரியம் ஆகிய உயர்வான வேத அத்தியயனத்தை உடையவனாய், தாங்கப்பட்ட சரீரம் வியோகமாகும் பரியந்தம் இடையீடின்றி யோகத்தை அனுஷ்டித்துக் கொண்டிருப்பான். (65)

317. எவ்விடங்களிலும் சோலைகள் விரிவாயுள்ள அழகு பொருந்திய காசி க்ஷேத்திரத்தை நாடி, மரணம் வரும்வரை அக்காசியிலேயே வசிப்பவர்களும், பிராணன் நீங்குகிறவரை பொருந்தியிருப்பவர்களும், காசிக்ஷேத்திரத் திற்கு போய் திரும்பினவர்களும், குற்றமற்றவர்களாக இருந்து, தாமரை மலரை வென்ற பரமசிவத்தினது திருவடியைப் பார்த்து மன்மதனை செயித்தார்கள் (ஜன்ம நிவிர்த்தியானார்கள்). (66)

(அறுசீர்விருத்தம்)

318. பொல்லாத தவரு மங்காவி
போகி லென்னை விடப்போகார்
நல்லா ரென்னை யடைவரென
நவில வேண்டு வதுமுண்டோ
வெல்லா வுயிர்க்கும் வீடளிப்ப
னென்றல் வினையா லிரங்காத
வல்லா வகைகூ டினுமுயிர்விட்
டகல்வா னல்ல னறிவுடையான். (67)
(2.11.104)

319. அரிய மறையி லரியமறை
யாகும் பொருளீ தறிஞர்களாற்
றெரிய நினைந்த படியெவர்க்குஞ்
செப்பப் படாது செய்தவத்தா
லுரிய விரத முயறமற்
றெடுங்கு முள்ளத் தொடுபிரம
சரிய முடைய பத்தனுக்கு
நேரே சாற்றத் தகுவதாம். (68)
(106-107)

(வேறு)

320. இவணமே தனதி யோக
மியம்பித்தன் னிடத்தி ருந்த
வுவணகே தநனை நோக்கி
யுத்தமர்க் குரைத்த யோக
மிவணுரை செய்யத் தக்க
திலங்கிய சாந்தி நெஞ்சிற்
சிவணிய புதல்வர்க் கென்றே
சிவனருள் செய்ய லுற்றன் (69)
(108-109)

318. பாவிகளும் அவ்விடத்து பிராணன் நீங்குமாயின் என்னை விட்டு நீங்கார்கள் என்னையே அடைவார்களாயின், புண்ணியவான்கள் என்னைப் பொருந்துவரென்று சொல்ல வேண்டுமா! சர்வ ஜீவர்களுக்கும் நான் மோக்ஷத்தைக் கொடுப்பேன் எனின், கருமத்தினுல் இரக்கமின்றி செய்யக் கூடாத இம்சையினை ஜீவர்கட்கு செய்தானுயினும் (என் பக்தன்) பிராணனை விட்டு நீங்குங்காலும் மேலான ஞானம் விட்டு அகலான். (67)

319. இந்த வஸ்து (அர்த்தம்) அனதிகாரிகளால் அறியமுடியாத வேதங்களில் அதி இரகசியமாக மறைந்து இருப்பதாம். புத்தி மான்களால் இதைத் தெரிந்து கொண்டு நினைத்த பிரகாரம் யாவர்க்கும் சொல்லக் கூடாதது. பூர்வஞ் செய்த புண்ணிய தவத்தால் உரியதாயுள்ள (கிருச்சிர சாந்தராயணுதி) விரதங்களை அனுஷ்டித்தவனுய், தர்மமுடையவனுய், மேலும், ஒடுங்கிய மனதோடு விரக்தனுய் பிரமசாரியாயுள்ள பக்தனுக்கு சாக்ஷாத்தாக உபதேசிக்கத் தக்கதாம்." (68)

320. இந்தப் பிரகாரம் தன்னுடைய யோகத்தை உரைத்து தன் பக்கத்திலமர்ந்திருந்த கருடக் கொடியோனுகிய மஹா விஷ்ணுவை பார்த்துப்பின் ஸனகாதி உத்தம ரிஷிகட்கு "உபதேசித்த யோகத்தினை, உபசாந்தியை மனதில் பொருந்தியுள்ள உங்கள் புத்திரர்கள் ஆகிய மாணுக்கர்கட்கு இந்தப் பிரகாரம் பரம்பரையாக உபதேசிக்கத் தக்கது", என பரமசிவன் அனுக்கிரகஞ் செய்தனன். (சிவணம் = சிரவணம் = காதில் வாங்கிக் கொள்ளல்) (69)

321\. முநிவரே யுங்கட் கெல்லா
மொழிந்திடப் பட்ட ஞானம்
புநிதராய்ப் புதல்வர்க் காகப்
பூசுர ராஞேர் கேட்ப
வினியநும் வாயினலே
யிப்படி யிறப்பு மீண்டு
செநியமு மொழிய நீருஞ்
செப்புமென் றருளிச் செய்தான். (70)
(2.11.110)

(எழுசீர்சந்தவிருத்தம்)

322\. இந்த நாரண னீச ஞகிய
வென்னில் வேறல னென்றுதஞ்
சிந்தை யானினை வார்க ளுக்குரை
செய்த யோகிது செப்பலா
மெந்த வாருயிர் கட்கு மின்னுயி
ராகு நாரண னென்பதோ
ரந்த மாதியி லாவெ னக்கரு
ளான தோர்வடி வாகுமால். (71)
(111-112)

(கலிவிருத்தம்)

323\. ஏதமுற நாரணனே யென்னிலயல் காணும்
பேத விழி யாளர்பிற விப்பிணிய ருரே
மாதவனே யானெனம நத்தினினே கிற்கும்
போதவிழி யாளர்பரி பூரணம டைந்தார். (72)
(113-114)

324\. ஆதலில ருச்சிமினிவ் வாதியரி யானைய்த்
காதலொடு காண்மின்மய லாகியயல காண்பார்
தீதுதரு மாநரகு சேர்வுறுவர் தீதா
நீதியுறு நீசரிடை யானும் வெளி நில்லேன். (73)
(115-117)

321. "ஸனகாதி ரிஷிகளே! உங்கள் யாவருக்கும் உபதேசிக்கப்பட்ட பிரம ஞானத்தை பூசுரர் பூரிக்க, பரிசுத்தமானவர்களான, மாணுக்க புத்திரர்கட்கு, விரும்பத் தகுந்த உம்முடைய வாக்கினுலே, யாம் உபதேசித்த பிரகாரம், மரணமும் மறுபடியும் பிறப்பும் நீங்க, நீங்களும் உபதேசியுங்கள்" என பரமசிவன் திருவாய் மலர்ந்தனன். (மேலும் சிவோபதேசம்:) (70)

322. "இந்த நாராயணன் பரமசிவனுகிய என்னில் பேதமல்லன் என தமது மனதில் நினைப்பவர்கட்கு, (பரமேசுவரனுல் சொல்லப்பட்ட) இந்த யோகத்தை சொல்லல் ஆகும். எப்படிப்பட்ட நிறைந்த ஜீவர்கட்கும் விரும்பத்தக்க பிராணபூதனுகிய நாராயணன் என்ற நாமமானது, ஒப்பற்ற உற்பத்தி நாசமில்லாத பரமேசுவரனுகிய எனக்கு, ஓர் உருவமாகும். (71)

323. "குற்றம் பொருந்த, நாராயணனை ஈசுவரனுகிய என்னில் அன்னியமாகப் பார்க்கின்ற பேத புத்தியுடையவர்கள் ஜனன மாகிய வியாதியினின்றும் தப்பார்கள். மகாவிஷ்ணுவை ஈசுரனுகிய நானே என்று மனதின்கண் அபேதமாக சிந்திக்கும் ஞானமாகிய கண்ணை உடையவர்கள் பரிபூரண பரமாத்மாவாகிய என்னை அடைந்தவராவார்கள். (72)

324. "ஆகையினுல் இந்த முதன்மையான மகா விஷ்ணுவை ஈசுரனுகிய எனது சொருபமாகவே அருச்சனை செய்யுங்கள். பிரியமான கண்ணுல் பாருங்கள். அஞ்ஞானத்தினுல் மயக்கத்தினை அடைந்து எனக்கு அன்னியமாகப் பார்ப்பவர்கள் துன்பத்தைக் கொடுக்கின்ற பெரிய நரகத்தை அடைவார்கள். குற்றம் பொருந்திய தன்மையை உடைய இழிவு பொருந்தியவர்களிடத்து பரம சிவனுகிய நானும் வெளிப்படையாகப் புலப்படேன். (73)

(வேறு)

325. நான்மறை யந்தணர் நாய்வதை செய்தத
னூன்மிசை கின்றவ ரோதினர் மூடப்
பான்மைய ரும்மரி யைப்பழி யாதம்
மேன்மைசெய் பத்தரை வீடுறு விப்பன். (74)
(2.11.118)

(அறுசீர்விருத்தம்)

326. மருவற் கென்னே மநம் வைத்தோன்
மாலா மிவனென் வடிவென்றே
பரவிப் பணிவா னென்றேசெம்
பவளத் திருவாய் மலர்ந்தருளி
யரவிற் றுயிலச் சுதனுகை
வழுந்தத் தழுவ வவ்விடத்தே
கரவுற் றருள வதிசயமாய்க்
கண்டார் மேனி கண்டிலரால். (75)
(119-120)

(வேறு)

327. தன்ப ராபர மாகிய வடிவினைத்
தவிர்ந்தொரு தவனுகி
முன்பு தோன்றிய வடிவதாய் முகுந்தனு
முநிவரை முகநோக்கித்
துன்ப வேரற வருளினு லுமக்கிறை
சொன்னவிச் சுடர்ஞாந
மன்ப ராயற மறிபுதல் வர்க்கறி
வியுமென வருள் செய்தான். (76)
(121-122)

(வேறு)

328. ஈசன தாய வந்த திலங்கிய பரம ஞாந
மாசிலந் தணனு மாகி யாகித வநல னுகி
நேசனு யடங்கி யுள்ள நெஞ்சனு நிமல னுக்குப்
பேசலா மென்று கண்ணன் பின்னரு மருளிச்
செய்தான். (77)
(123-124)

325. "நான்கு வேதங்களையுமுணர்ந்த பிராமணர்களும், நாயைக் கொன்று அதன் மாமிசத்தை புசிப்பவரும், படித்தவர்களும், மூடத்தன்மை உடையவரும் விஷ்ணுவை நிந்திக்காத, அந்த மேன்மையினை செய்யின் அந்த பக்தர்களை மோக்ஷமடையச் செய்வேன். (74)

326. "பரமேசுவரனாகிய என்னை அடைதற்கு மனம் வைத்தவன் மகாவிஷ்ணுவாகிய இவனை எனது ரூபமென்று தோத்திரம் செய்து வணங்குவான்" என, சிவந்த பவளம் போன்ற அதரத்தை யுடைய பரமசிவன் சொல்லி சேஷ சயனத்தில் நித்திரை செய்கின்ற மஹாவிஷ்ணுவினது சரீரத்தை கட்டி ஆலிங்கனம் செய்து அந்தவிடத்திலேயே, தன்னை மறைத்துக் கொள்ள, (ரிஷிகளனைவரும்) அவ்வதிசய மேனியை பார்த்திருக்கும்போதே அது மறையக் கண்டனர். (75)

327. மகா விஷ்ணுவும் தனது பரத்துக்கெல்லாம் பரமாகிய ரூபத்தை விட்டு, பூர்வம் ஸனகாதி ரிஷிகளுக்கு தோன்றிய வடிவாகவே ஒரு தவமுனியாய்த் தோன்றி, ஸனகாதி ரிஷிகளது முகத்தைப் பார்த்து, "துன்ப மூலம் நாசமடைய கிருபையினால் உங்களுக்கு பரமசிவன் திருவாய் மலர்ந்தருளிய இந்த பிரகாசம் பொருந்திய ஞானத்தை பக்தர்களாயுள்ள தருமத்தை உணருகின்ற மாணாக்கர்கட்கு உபதேசஞ் செய்யுங்கள்" என்று அனுக்கிரகஞ் செய்தான். (76)

328. மஹா விஷ்ணுவும், "ஈசுவரனுடையதாய் (வாய்வழி) வந்த பிரகாசம் பொருந்திய பிரம ஞானத்தை, குற்றமற்ற பிராமணனையும், அக்னிஹோத்திரமுடையவனையும், பக்தி உள்ளவனையும், ஒடுங்கிய மனதுடையவனையும் உள்ள நின்மலனுக்கு உபதேசிக்கலாம்" என மீண்டும் திருவாய் மலர்ந்தருளினன். (ஆஹித=பிரதிஷ்டை செய்த, அநலன்= அக்னியை வளர்ப்பவன்) (77)

329. யோகிக ளியாவ ருக்கு முத்தம யோகி தானே
யாகிய முகுந்த னிவ்வா றருளியங் கவரை நீங்க
வேகவீ சனையு நாரா யணனையு மிறைஞ்சி யெல்லா
மோகவே தனையு மாறி முனிவர்முற் பதிய டைந்தார்.
(78)
(2.11.125-126)

(வேறு) (தனன தானன தானன தனதன
தனதன தனதான)

330. சனற்கு மாரன்சம் வத்தகற் குரைத்தனன்
சநந்தனன் புலகற்குப்
புனிற்று தீர்முநி கௌதமன்பொருட்டிது
புகன்றனன் புகன்றனிங்
கநித்த மற்றுள விதுபரத் துவாசனுக்
கங்கிரா வளித்தானேர்
செநிப்பி லாவிது கபிலமா முநிபஞ்ச
சிகற்குரைத் தனன்முன்னே. (79)
(127-129)

331. எந்தை யாகிய பராசரன்
சநகன லிலங்கிடப் பெற்றனென்
றந்தை பாலருந் தவஞ் செய்வான்
மீகியுந் தானறிந் திடப்பெற்ற
னந்த கோபனன் மனையினின்
மதலையாய் நடித்தநா ரணன்குந்தி
மைந்த னகிய பார்த்தனுக்
கருளினன் வழங்கினன் மாறேர் மேல். (80)
(130-132)

329. யோகிகள் எல்லாரிலும் தானே உத்தமமான யோகியாகிய மஹா விஷ்ணுவும் இந்தப் பிரகாரம் திருவாய் மலர்ந்தருளி அவ்விடத்திலிருந்து அந்த ஸனகாதி ரிஷிகளை விட்டு தமது வைகுண்டத்திற்குச் செல்ல, அபேதருபமான பரமசிவனையும், நாராயணனையும் (மஹாவிஷ்ணுவையும்) நமஸ்கரித்து மயக்க ஏதுவான ஜனனதுக்கம் யாவும் ஒழிந்து, ஸனகாதி ரிஷிகள் முன்னே தாங்களிருந்த ஊரை அடைந்தார்கள், (என வியாஸர் தொடர்ந்தார்:) (78)

330. "சனத்குமார முனிவன் சம்வர்த்தக (சத்யவ்ரத) முனிக்கு இந்த பிரமஞானமாகிய ஈசுவரவாக்கியத்தை உபதேசித்தான். சனந்தன முனிவன் புலஹமுனிக்கு இதனை உபதேசித்தான். பரிசுத்தனுன புலஹ முனிவன் கௌதம ரிஷிக்கு இதனை உபதேசித்தான். இவ்விடத்து நித்தியமாயுள்ள இந்த ஞானத்தினை பரத்வாச முனிவனுக்கு அங்கிரா ரிஷி உபதேசித்தான். ஒருவித பிறப்புக்குமேதுவில்லாத இந்த ஞானத்தை மேன்மை பொருந்திய (ஜைகீஷவ்ய) கபில முனிவன் பஞ்சசிக முனிக்கு முன்னர் உபதேசித்தான். (புனிற்று = பிறப்புத் தீட்டு) (79)

331. எமது பிதாவாகிய பராசரரானவர் ஸனக மகரிஷியால் உபதேசிக்கப் பெற்றனன். என் தந்தையாகிய பராசரரிடத்து அருமையான தபத்தைச் செய்கின்ற வான்மீகி ரிஷியும் உபதேசிக்கப் பெற்றனன். நந்த கோபரது நல்ல கிரகத்தில் குழந்தையாக விளையாடிய மஹாவிஷ்ணு (மால்) குந்தி புத்திரனுகிய அர்ச்சுனனுக்கு பெருமை பொருந்திய தேர் மீது சாரதியாக இருந்து கிருபையினலே இதனையே உபதேசித்தான். (மால் = பெருமை) (80)

(கலிவிருத்தம்)

332. ஏம மாகவெ னக்கிது ருத்திர
வாம தேவன்வ ழங்கின ஞதலாற்
காம னீறெழக் காய்ந்தவக் கண்ணுத
ருமை மேசர ஞகைத்த ருவதே. (81)
(2.11.133-134)

(நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா)

333. வேறுக நானிந்த வெம்பிறவி வேரறுப்பா
னேறுளு மிறைவனே யென்றவனை யடைகின்றேன்
மாறுத வன்போடு மனைமக்கள் கிளையொடுநீ
ராறுருஞ் சடைமுடியா னடியடைமி னிதுவேண்டில்.
(82)
(135)

334. ஒழியாது நற்கரும யோகத்தா லுருத்திரனை
வழிபாடு செய்யுமென மாமுநிவன் மறைப்பொருளை
மொழிவானை நேரேயம் முக்கணிறை யெனமுநிவர்
கழிகாத லொடுபணிந்து கைதொழுது களிகூர்ந்து.
(83)
(136-137)

(அறுசீர்விருத்தம்)

335. ஓதம் பற்றியோ குணர்ந்துறங் கமலநீ
யுன்றிரு வருளாலே
போதம் பெற்றவா னவர்களும் பெறலரும்
புராணபூ ரணன்செம்பொற்
பாதம் பற்றியப் பவக்கடல் கடக்கநற்
பத்திபெற் றனமாற்று
லேதும் பெற்றனம் பெறுததொன் றில்லையென்
றிணையடி பணிவுற்றுர். (84)
(138-139)

332. வியாஸ முனியாகிய எனக்கு உயர்வாக இந்த பிரம ஞானத்தை ருத்திர வாமதேவரானவர் உபதேசித்தார். ஆகையினலே மன்மதனே பஸ்பமாகும்படியாக தமது நெற்றிக் கண்ணினலே கோபித்த அந்த நெற்றிக் கண்ணராகிய பரமேசுவரனது திருவடியாகிய இடமே எனக்கு அடைக்கலமாகும். (81)

333. நான் எனக்கு அன்னியமாக உள்ள இந்த கொடிதாகிய ஜனனத்தினது மூலத்தை நாசஞ் செய்தற் பொருட்டு, "ரிஷபத்தை வாகனமாக உள்ள பரமசிவனே! கதி"யென மனவாக்கு காயங்களால் பக்தி செய்து, அந்த பரம சிவத்தையே யான் அடைக்கலமாகப் புகுகின்றேன்; ஆதலால் சௌனகாதி ரிஷிகளாகிய நீங்களும் இதனையடைய விருப்பமுள்ளவராயின், நிலைபெற்ற பக்தி யோடும் மனைவி மக்கள் சுற்றத்தார்களோடும், கங்காநதி பொருந்திய சடாபாரத்தையுடைய பரமசிவனது திருவடியை அடையுங்கள்.(82)

334. இடைவிடாது நல்ல கரும யோகத்தினல் பரமசிவனை பக்தி செய்யுங்கள்" என்று மேன்மை பொருந்திய வியாஸ பகவான் சொல்ல, சௌனகாதி ரிஷிகள் வேத அர்த்தத்தை உபதேசித்த வியாஸ பகவானை சாக்ஷாத் அந்தப் பரமசிவனே என்று, மிகுந்த பக்தியோடு கீழே விழுந்து நமஸ்காரஞ் செய்து எழுந்து மிக மகிழ்ச்சியடைந்து கைகளைக் கூப்பி. (83)

335. (வியாஸ பகவானே! ஹ்ருஷிகேசனுய்) சமுத்திரத்திலைப் பொருந்திய தேவரீர்!s யோகத்தினை அறிந்த அந்த யோகத்திலேயே நித்திரை செய்கின்ற அமலனே! தேவரீருடைய கிருபையினலே ஞானத்தை அடைந்துள்ள தேவர்களும் அடைதற்கு அருமையான பழையோனுகிய பரமசிவனது சிறந்த பொன்போன்ற திருவடியை அடைந்து; அந்த ஜனன சமுத்திரத்தினை தாண்டுதற்கு நல்ல பக்தியைப் பெற்றேம், அக்காரணத்தினல் எல்லாவற்றையும் அடைந்தோம், இனி அடையவேண்டியது யாதொன்றுமில்லை எனப் புகன்று, சிவவிஷ்ணு சொரூபனுன வியாஸரின் இரண்டு திருவடிகளிலும் விழுந்து நமஸ்காரஞ் செய்தார்கள். (84)

(கலிநிலைத்துறை)

336. தீதின் முத்தியைச் சேரவேண் டினர்சிவ னடிக்கே
யாதி லர்ச்சனை செய்தன ரந்தவெல் லையிலாப்
போத முற்றநற் கருமயோ கினைப்புதல் வர்களா
யாத ரிப்பவர்க் குரைமினென் றருண்முநி பணித்தான்.
(85)
(140)

(எண்சீர் ஆசிரிய சந்தவிருத்தம்)

337. மாமறையின் மெய்ப்பொருளை மாலொடுச நற்கு
மாரன்முத லார்க்கிறைவ ழங்குதிரு வார்த்தை
யாமைவடி வைக்கொடரி யமுதமத நத்தன்
றருமுநிவர் கட்கருளு மறிவதனை யன்பாற்
றுமதமில் சௌநகனை யாதிமுநி வர்க்குத்
தந்தருளு கென்றுதலை யாலுறவ ணங்கித்
தோமின்முநி சூதனுரை செய்யவவர் கட்குச்
சுருதிகடெ ரிந்தமுநி சொன்னபரி சீதால் (86)
(141-142)

(எழுசீர் சந்த விருத்தம்)

338. மூவர் தேடிறைச நற்கு மாரன்முதன்
முநிவர் கட்குமொழி கீதையிங்
கியாவ ரோதினரி தன்பொ ருட்டுணிவ
ரியாவர் கேட்பவரி யாவர்தம்
பாவம் வேரொடுப றிந்து நல்லபர
மப்பதம் பெருவ ராதலான்
மேவு மன்பினொடு மோத மீளுதலில்
வீடு வேண்டினன்வி ரும்புவான். (87)
(143-147)

336. "குற்றமற்ற மோக்ஷத்தினை அடைய விரும்பியவர்கள் பரமசிவனுடைய திருவடிக்கே ஆதிமுதல் அருச்சித்தார்கள். ஆனதால் அந்த அளவிடமுடியாத ஞானம் பொருந்திய நல்ல கருமயோகத்தை மாணுக்கர்களாக இருந்து கேட்க விரும்புகின்ற வர்கள் புதல்வர் சமானமாக, அவர்களுக்கு நீங்கள் உபதேசியுங்கள்" என கிருபையையுடைய வியாஸர் கட்டளை இட்டார். (ஆதில் = முதலில்) (85)

337. "பெருமை பொருந்திய வேதங்களின் சத்தியமான அர்த்தத்தை மகா விஷ்ணுவோடு சனத்குமாரன் முதலியவர்கட்கு பரமசிவன் உபதேசித்த அழகிய வாக்கியங்களை, கூர்ம அவதாரம் எடுத்து அமிர்தமதனம் செய்து உதவிய மகாவிஷ்ணுவானவர், மேன்மை பொருந்திய ரிஷிகளுக்கு (மதனத்து) அன்று உபதேசித்த ஞானத்தினை, தாமதமின்றி பிரியத்தினுல் உபதேசிப்பீராக" என, சிரசினுல் பொருந்த வணங்கி குற்றமற்ற ஸூத மகாமுனிவர் (இக்கீதையின் ஆரம்பத்தில் வியாஸரைக்) கேட்டுக் கொள்ள, அந்த சௌனகாதி ரிஷிகளுக்கு ஸூதர் முன்னிலையில் வேதங்களை அறிந்துள்ள வியாஸபகவான் உபதேசஞ் செய்த தன்மை இதுவாம். (86)

338. பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளும் காணமுடியாத பரமசிவன், சனத்குமாரன் முதலிய ரிஷிகளுக்கு உபதேசிக்கப்பட்ட (ஈசுவர) கீதையினை இவ்விடத்து எவர் படித்தவர்களோ, எவர் இதன் அர்த்தத்தை நிச்சயம் செய்தவர்களோ, எவர் இதை சிரவணஞ் செய்தார்களோ அவர்கள் தம்முடைய பாவங்கள் யாவும் அடியோடு நாசமாகி சிரேஷ்டமான பிரமபதத்தை அடைவார்கள். ஆகையால் பொருந்திய பிரியத்தோடு முயற்சி செய்து புனராவிர்த்தி இன்றிய மோக்ஷத்தை அடைய நினைப்பவன் இதனை சிரவணஞ் செய்ய விரும்புவான். (87)

**சிவப்பிரகாசம் என்னும் ஈசுவரகீதை முற்றுப்பெற்றது**

நாம் ஆன்மசொரூபமாகவே இருப்பதை மறந்த மறப்பினாலேயே, ஜீவனென்னும் நாமத்தோடு மனோரூபமாய்ப் பந்தத்தை அடைகின்றோம். எனவே வாசனாரூபமாகிய மனத்தை வென்று ஆன்ம சாக்ஷாத்காரமடைய வேதாந்த சிரவண, மனனங்கள் அவசியமாகின்றன. பகவான் ஸ்ரீரமணரின் சந்நிதியில் அன்பர்கள் சந்தேக விபரீதங்கள், தீரவேண்டி நின்றபோது, அவர் 'ஆன்மாவாய் என்னகத்தே இருந்தின்று தமிழ் சொல்வானும் அன்னவனன்றி மற்றார்?' என்று பறைசாற்றி பல வேதாந்த கிரந்தங்களை மொழிபெயர்த்தும் மேற்கோள் காட்டியும் அருளியுள்ளார்.

பதினெட்டு புராணங்களில் ஒன்றாகிய கூர்ம புராணத்தில், ஈசுவரன் கூர்ம நாராயணருக்கு உபதேசித்த முறையாக வடமொழியில் அமைந்துள்ளது 'ஈசுவர கீதை'. இது ஸ்ரீ தத்துவராய சுவாமிகளால் (11 அத்தியாயம், 338 பாடல்களாக) தமிழாக்கம் செய்யப் பட்டுள்ளது. ஸ்ரீ காசிகானந்த ஞானாசாரிய சுவாமிகள் இயற்றிய ரஹஸ்யார்த்த விளக்கவுரையைத் தழுவிய பொழிப்புரையுடன் ஈசுவர கீதை சாதகர்களின் உபயோகத்திற்காக தற்போது வெளியிடப் படுகிறது. இக்கீதையின் அத்தியாயம் 11; பாடல் 15-ம், பகவான் ரமணரின் உபதேச உந்தியார் 6வது பாடலும் (வழுத்தலில் வாக்குச்ச வாய்க்குட் செபத்தில்..) முறையே ஒரே கருத்தின் விளக்கமாகவும், சூத்திர மாகவும் விளங்குவது கவனிக்கத் தக்கது.

ISBN: 81-88225-41-X